அதன் வகை

காய்வள்ளி-காய்வேளை, இரும்புக்காய்வேளை, முட்காய்வேளை.
காய்ச்சல்-சுரம்

இதன் வகை

அகோரக் காய்ச்சல், அச்சரக் காய்ச்சல், அஸ்திக்காய்ச்சல், உட்காய்ச்சல், கணக்காய்ச்சல், காமக் காய்ச்சல், குளிர்க்காய்ச்சல், சிலேஷ்மக் காய்ச்சல், சுரக் காய்ச்சல், தோஷக்காய்ச்சல், நாவறட்சிக் காய்ச்சல், பித்தக்காய்ச்சல், பெருவாரிக்காய்ச்சல், மந்தக்காய்ச்சல், மாறல் காய்ச்சல், முறைக் காய்ச்சல், வறைக் காய்ச்சல், வாதக் காய்ச்சல், விஷக்காய்ச்சல், விடா காய்ச்சல், விடுங்காய்ச்சல், வைசூரிக் காய்ச்சல், தாபக் காய்ச்சல், தொத்துக்காய்ச்சல், கடுங்காய்ச்சல், இடைக்காய்ச்சல், ஓட்டுக் காய்ச்சல், இராக்காய்ச்சல், மூன்றுமுறைக்காய்ச்சல், நாலாமுறை காய்ச்சல், தினக்காய்ச்சல், சீத சுரம், அரோசிக சுரம், தண்டு சுரம், சிறைச்சாலைசுரம், சலதோஷசுரம், வேர்வைச்சுரம், இரவு பயங்கரமான சொர்பனத்தினுண்டாகுஞ்சுரம், அடமைவார்க்கிறதினுலுண்டாகுஞ்சுரம், காமாலைசுரம், எலும்புருக்கிக் காய்ச்சல், அழலைசுரம், மூலைவாதக் காய்ச்சல், பால்பெயர்ச்சிக் காய்ச்சல், பிள்ளைபெற்றக் காய்ச்சல்.

காய்ச்சுக்கட்டி-காசுக்கட்டி
காய்ச்சுக்குப்பி-ஓர்சீசா
காய்ச்சுண்டி-காய்ச்சுக்கட்டி
காய்ச்சுப்பு-சவட்டுப்பு
காய்ச்சுலவணம் - காய்ச்சிச்சாரம், வளையலுப்பு.
காய்ச்சுரை - புளிச்சக்கீரை, காட்டுக்காய்ச்சுரை.
காய்ச்சுறுக்கு-புளிச்சக்கீரை
காய்ஞ்சொறி-ஓர்பூண்டு

இதன் வகை

எருமைக்காய்ஞ்சொறி, கறுப்புக்காய்ஞ்சொறி, சிறுகாய்ஞ்சொறி, பூனைக்காய்ஞ்சொறி.
காய்த்தானியம்-முசுகுட்டை
காரணசத்தி-எவக்ஷாரம்
காரணன்-பிரதபாஷாணம்
காரம்-காரியும், மரவயிரம்
காரவல்லி-பாகல்
காரன்-சோரபாஷாணம்
காரி-ஆவிரை
காரிக்கூள்-ஓர்காளான்
காரிகை-கொடுவேலி
காரியக்கடிசு-கற்பாஷாணம்
காரிரத்தம்-ஆடுதின்னாப்பாளை
காரீயம்-ஈயம்
காருச்சிவல்-கடற்பாசி
காருடம்-மருக்காரை, பறிப்புபோல்
காருராசி-கறிப்புபோல்
காருண்ணி-ஆடுதின்னாப்பாளை
காரை-ஓர்செடி

இதன் வகை

குத்துக்காரை, பெருங்காரை, மதுக்காரை, மருக்காரை, பூங்காரை.
கார்-கார்நெல்
கார்கோணி-தேள்கொடுக்கி
கார்கோளி-கோரைப்புல்
கார்கோழி-கருங்கொள்ளு, கருஞ்சீரகம்.
காரப்பசம்-பருத்தி
கார்ப்போகரிசி-ஓர்பூண்டு
கார்மணி-கையாந்தகரை
காலகம்-செங்கோட்டை

காலன்-சாத்தபாஷாணம்
காலாயுதம்-சேவல்

காலி-காலியாந்துவரை, காட்டு முருக்கு, புன்முருங்கை.

காலேயம்-கள், அகில், மோர், கஸ்தூரி மஞ்சள்.

காவசர்-சேக்கொட்டை
காவட்டம்புல்-மாந்தப்புல்
காவற்சலி-வாழை
காவன்-சிலந்திப்பூச்சி
காவா-காட்டுமல்லிகை

காவாளை-காட்டுமல்லிகை, காய்வேளை.

காவி-கருங்குவளை, கருங்காலி, அவுரி, மருந்துருண்டை, கறுப்பாச்சாயம்.

காவிருளை-காய்வேளை, கொழிஞ்சில், வீரம், அலரி.

காளசம்-மருக்காரை
காளம்-அவுரி, எட்டி
காளி-கக்கரி, எட்டிமரம்
காளிகம்-மணத்தக்காளி
காளிந்தம்-ஏலம்
காளிந்தி-வாகைமரம்
காளினி-கத்தரி
காறடி-மருக்காரை
காறல்-காறக்கொட்டி
காறற்கொட்டி-ஓர்மருந்துப் பூண்டு
காற்பாசம்-பருஞ்செடி
கானகம்-கருஞ்சீரகம்
கானகத்தூமம்-கற்பாஷாணம்
கானகதந்தேறு-மஞ்சள்
கானமௌவல்-காட்டுமல்லிகை
கானவிருக்கம்-பாத்திரி
கானனுசாரி-நன்னாரி
கானவிந்திரன்-கொடுவேலி
கானுவேளை-ஓர்பூண்டு
கானிலம்-கொடுவேலி
கான்மரம்-ஆலமரம்
கான்மா-பன்னி

காடிநீர் - புளித்தசலம், அசீரணம், சிலபிணிகள், பித்தம், பேதி மயக்கமும்போம். அவிழ்த முறிவும் உண்டாம்.

காடைக்கண்ணி சாதம்-ஐயம், வாதமும்போம். எரிவு, பித்தம், உண்டாம்.

காடைக்கறி-சோகை, பலவித நோயும் போம். பத்தியத்திற்கு ஆகும்.

காடைச்சம்பா - அனல், மேகமும்போம் பலமுண்டாம்.

காடைச்சாறு - கண்பிணிகள், கண்புண், பித்தவாதமும்போம். உடல் பருமன் உண்டாம்.

காட்டாத்திப்பூ-உதிரக்கடுப்பு, உதிரக்கழிச்சல், பேதி, மேகமும்போம்.

காட்டாத்தி மரம்-அதிசாரம், காசம், மந்தம், விஷமும்போம். அதிமோகமுண்டாம்.

காட்டாமணக்கம்பால்-இரணம் கட்டி குன்மம், வெள்ளை யொழுகலும்போம்.

காட்டாமணக்கிலை- உலர்த்தல், உள்ளமூலம், ஒட்டுமேகம், கட்டி, கரப்பான், குன்மம், சிரங்கு, கலை நோய், புவிகம், வாதம், விரணம், வெடிகிரந்தி, வெட்டையும்போம். விந்துமுண்டாம்.

காட்டுக்கருணை - சுரதோஷம், முளைமூலம், மேகமும்போம். கரப்பான், தீபனமுண்டாம்.

காட்டுக்கோழிகறி - அதிகபலமுண்டாம்.

காட்டுச் சதகுப்பை - கடிகள், குட்டங்களும்போம்.

காட்டுச்சீரகம் - கருஞ்சீரகம், குன்மவாதம், கைகறுப்பு, பித்தம்

மேகமும்போம். தேகக் குளிர்ச்சி உண்டாம்.

காட்டுத்துளசி-இரைப்புபோம்

காட்டுப்பழுபாகல்-காசம், பித்தம், வாதமும்போம், பசிபோசன விருப்பமுமுண்டாம்.

காட்டுப்பன்றி - குடல்வாதம், குதநெகிழ்ச்சி, ரோகம், சருகில் ரோகம், வாதமும்போம், கிரந்தி சீதம், விஷக்கடியுமுண்டாம்.

காட்டுப்பிராயல்பால்-பல்நோய் போம்.

காட்டு மல்லிகைவேர்-பேகரம், தாகம், நாவறட்சி, மந்தம், பேதியும்போம்.

காட்டுமாங்காய்-தாபம்போம்

காட்டுமுருங்கை மூலம்-ஐயம், கொடிய விஷம், ஜன்னி, பிரவீச்சும்போம். உட்டினம், கண், குளிர்ச்சி கசப்புமுண்டாம்.

காட்டுவள்ளி-உடலூதல், சீயக்குளுமை, பலமுமுண்டாம்.

காட்டேலம்-அதிசாரம், அருசி சிலேட்டுமம், தீராதவாந்தி, பித்தமும்போம்.

காண்டாமிருகக்கொம்பு-தாகம் தோஷம், வெள்ளிவீழலும்போம் தேகமிருகலுண்டாம்.

கொதாட்டிக்காய்-வாதம்போம்

காந்தம் - இரும்புக்கு சத்துரு கண்ணோய், காமலமேகம், குன்மம்,சீதம், சோபை, திரிதோஷம், நீராமை, பாண்டு, பிரமயம் பெருவயிறு, வெட்டையும்போம். ஆயிசு, பலம் பசியுமுண்டாம்.

காந்தசிந்தூரம்-அதிசாரசுரம், கபம், காசம், காமாலை, சுவாசம், பாண்டு, வஞ்சுறளைச்சல், வாந்தியும்போம்.

காந்தசிந்தூரபத்தியம் - அகத்திக்கீரை, உப்பு, எள்ளு, கடுகு, கத்திரிக்காய்,கொத்தவரைக்காய், கொள்ளு, பாவக்காய், புளி, மாங்காய் ஆகாது.

காய்க்கஞ்சி யன்னம் - சுடுகை கஞ்சி பித்தவெப்பும்போம். சிலேட்டுமம், தேககாந்தி, பருத்ததேகமுமுண்டாம்.

காய்க்சும் பாலுக்கு-நீரளவைக் கூறல், பசு, வெள்ளாடு, இவைகளின் பாலுக்கு எட்டி லொரு பங்கு சலமும், எருமை, செம்மறி இவைகளின் பாலுக்கு சரிபங்கு சலமும்விட்டு காய்ச்சவேண்டும். சுக்கும் சிறிகாஞ்சொரி வேரும் போட்டு சுவற காய்ச்சிய பால் வெள்ளாட்டுப்பாலிற் கொக்கும்.

காய்ந்தாறிய நீரில் ஸ்நானம் செய்ய ஜந்நி தேகநோயும் போம். பசி, பலம், கண்துலக்கமும் உண்டாம்.

காய்ந்தாறிய விளநீர் - கபம், காசம், தாகசுரம், பித்தமும் போம்.

காய்ந்தாறிய வெந்நீர் - அதிசாரம், ஐயம், உழலை, உவர்ச்சி, கண்ணோய், குன்மம், திரிதோஷம் சர்த்தி, சுரம், சூலை, செவிநோய், பித்தம், மயக்கம், மூர்ச்சை, மேகம், வாதகோபம், விக்கல், விஷமும் போம்.

காய்வள்ளிக்கிழங்கு - அக்கினி வெப்புபோம். சிரங்கு, புண், வாதமுண்டாம்.

காராமணிப்பயர் - வாய்வு, பல பல ரோகமும் மூலமுமுண்டாம்.

காராமணியிலை-கழிச்சல்,மூலம் வாய்வுமுண்டாம்.

காராம்பசப்பால்-ஐயம், இரத்தபித்தம், கண்ணோய், கயரோகம், பாலகருடைய தோஷமும் போம்.

காராம்பசு நெய்-சிரசு, நெற்றி, புருவம், விழிநோய்களும் போம். கண்ணுக்கொளி, தேகவழகு, பொன்னிறமுமுண்டாம்.

காரீயம்-கருவங்கம்

காரெள்ளு-திலர்கத்திற்காகும்.

காரைப்பழம்-அதிசாரம், இரத்தக்கடுப்பு, சீதக்கடுப்பு போம்.

காரையிலை - இரத்தக்கடுப்பு போம். புளிசேர்த்து சமைத்து சாப்பிடவும்.

காரரிசி-கரப்பான், தேகத்துடிப்பு, பலம், மந்தம் வாய்வுமுண்டாம்.

கார்காலம் - ஊதல், காந்தி, தாகம், நித்திரைபோம். பலம், வாதம், வியர்வை, வியாதியும் உண்டாம்.

கார்காலமணப்பூச்சு - அகிற்கூட்டு, கற்பூரம், கஸ்தூரி, சந்தனம் இவைகளால் இருமல், இழுப்பு, இளைப்பு, உட்சுரம், காசம், தாகம், தேகவியர்ப்பு, வாய்வும் போம். காந்தி, கீர்த்தி, சிறம், நேத்திரத் துலக்கம், வீரியமும் உண்டாம்.

கார்போகரிசி-கரப்பான், சருவகஞ்சு, கமைச்சல், சொறி சிரங்குடன் வாதகபமும்போம். பித்தம் உண்டாம்.

காலபேத விரோசனம்-அரைத்தமருந்து, எண்ணெய், கியாழம்என்னும் இம்மூன்றிலொன்று கோடை காலத்தில் பேதிக்குக் கொடுக்கத்தக்க மருந்தாய் பனிக் காலத்திலாவது, மழைக்காலத்திலாவது லேகியமருந்தைகொடுத்தால் அம்மருந்துகளின் குணங்கள் கெட்டுவிடும். மேற்சொல்லியமூன்று காலங்களிலும் உப்பாவது நேர்வாளமாவது பலவிதக் கள்ளிப் பாலாவது இரசமாவது சேர்ந்த மருந்தைக் கொடுத்தால் கிரமமாக பேதியாகும்.

காலைக்கறி கானபயறு-உழுந்து எள்ளு, கடுகு, காயம், காராமணி சிறுபயறு, சுக்கு, தட்டைப்பயறு துவரை, தோல்போக்கின கடலை மிளகு, மொச்சைக் கொட்டை இவைகளாகும்.

காலைக்குளியல் - பல்நோய்போம் பசி உண்டாம்.

காலையில் சிலம்பமல் யுத்தஞ்செய்தல், கொட்டடி, தாவிம்காணுவித்தை, கபவாதம், சூலைவலியும் போம், பசி, பலம், பலமிராங்கல் மெய்யிறுகலும் உண்டாம்.

காலையில் பச்சைப்பாலுண்ணல்-ஆண்குறியெரிச்சல், இரத்தபித்தம், கபம், கண்ணெரிச்சல், கைகயெரிச்சல், பாண்டு, மெய்யெரிச்சலும்போம், விந்து புஷ்டியுண்டாம் பிள்ளைகளுக்குமாகும்.

காலைவிழிப்பு-பித்தம் போம். வாதபித்த ஐயம் சமனை, கப்புத்துவார நீர்தெளிவும் புத்தித்தெளிவுமுண்டாம்.

காலைவெய்யல் காயல் உண்டாகாத பிணியெல்லாமுண்டாகும்.

கால்கூழுகாய்ந்தநீர்- பித்தம் போம்.

காவட்டம்புல் - மணக்கத்தம் புல், கணமாந்தம், தாகசுரம், பேதியும்போம்.

காவிக்கல்-அக்கி, அரோசகம், பித்தம், மருந்தின்வேகம், மூம் மலக்குத்து, மேகச்சூடு, வாந்தியும்போம், தேககாந்தியுண்டாம்.

காவிரிநதிநீர்-இளைப்பு, உதிரக்கட்டி, காசம், சுவாசம், சோகை, தொண்டைக்கட்டு, நீரேற்றம், பொருமல், வாயுவாலும் போம்.

காளான்சம்பா - வாயுபோம், ஆரோக்கியம், கல்லைப்போன்ற பலமுமுண்டாம்.

காருக்கருணை-இரத்த மூலம், கபம், கனல், மந்தம், மூளைமூலம், வாதமும்போம் தீபனமுண்டாம்.

காறுகருணை -மூலநோய்போம் கரப்பான், காணாக்கிரந்தி, கோழை, சிரங்கு, சொறி, தினவு, மந்தமு முண்டாம்.

காணாங்கோழிக் கறி-இருமல், கரப்பான் மற்று மநேகநோயுண்டாம் பத்தியத்திற்காகும்.

காணமுருங்கை-அதிக வாதம் கண்குளிர்ச்சி யுண்டாம்.

காணம்வாழை-அனல் இரத்த பேதி, குழிப்புண், பெரும்பாடு, மூலைக்கண்புண் ணும்போம் ஐயம் போகமுண்டாம்.

கி

கிகிணி-கஞ்சரீடம், காக்கணஞ் செடி.

கிச்சிலி-நாரத்தை

கிச்சிலிக்கிழங்கு-இங்குறுப் பல்லி, ஓர்மூலம்

கிஷ்ணம்-கறுப்பு

கிஷ்ணசிங்கு-வாததோஷம், கொல்லுந்தன்மையுள்ள ஓர்நோய்

கிஷ்ணபாணம்-எட்டி.

கிஷ்ணபேடம்-கடுகுரோகணி

கிஷ்ணவாணம்-உலோகமணல்

கிஷ்ணவல்லி-நன்னாரி

கிஞ்சபன்னி-நாயுருவி

கிஞ்சம்-புளிமா

கிஞ்சி-வேம்பு

கிஞ்சுகம்-முணமுருக்கு, முருக்கு, பலாசு

கிடை-கிடைச்சி, சடை, சடைச்சி, கிடை.

கிட்டக்கல்-குமிடக்கல்

கிட்டம்-இருப்புக்கிட்டம்

கிட்டி-சின்னி

கிட்டிக்கிழங்கு-சின்னிக் கிழங்கு

கிட்டிரம்-நெருஞ்சில்

கிட்டினன்-திப்பிலி

கிணிதி-கிலுகிலுப்பைச்செடி

கிண்ணிக்கற்பூரம்-இரச கற்பூரம்

கிச்சிலிக்கிழங்கிலை-கிரந்தி, புழுவும்போம் வாசனையுண்டாம்.

கிச்சிலிக்கிழங்கு-கபம், தலைவலி, புண், விஷமும்போம், வாசனையுண்டாம்.

கிட்டம்-உதிரக்கட்டி, உதிரதோஷம், சயரோகம், சலக்கூர்மம், சோகை, நரை, திரை, நீராம்பல், பாண்டு, மகோதரம், வாதம் விஷபாகம் வெப்பும்போம்.

கிட்டிக்கிழங்கு-கபம், மேகம் போம், தீபனம், பித்தம் சமனுண்டாம்.

கிணற்றுநீர் ஈளை, சேத்தும வாதம்போம். அழகு உட்டினசீதம் சமன். சூடு, தேகவலுமை பசி, பலம், மெய்க்காந்தலுமுண்டாம்.

கிணற்றுப்புநீர்-சீதம், வாதசிலேத்துமமும்போம், கிரிச்சிரம், மலம், மூத்திரக்கடுப்பு, மேனிகருகல் வெட்டையும்போம்.

கிணற்றுமீன்கறி-குஷ்டம், பீ லிகம், பித்தம், வாதகுன்மமும் உண்டாம்.

கிரந்திநாயகம்-உஷ்ணம், கரப் பான், கருங்கிரந்தி, சீதம், செங் கிரந்தி, புண், பூதமருள், விஷம் விழிநோயும்போம்.

கிருட்டிப்பக்ஷிக்கறி-ஆலால ப க்ஷிக்கறி, இரத்தகழிச்சல், வா ந்தியும்போம், கடுப்பு பித்தவாத முண்டாம்.

கிருமிசத்துரு - சிலேத்துமம் காசம், புழுக்கள், வாதக்கட்டும் போம்.

கிழங்கான்மீன் பழமலம் பிணி யனைத்தும்போம், உடல் வளரல், பசியுண்டாம் பத்தியத்திற்காகும்

கிளிஞ்சி சுண்ணம் சிப்பி சுண் ணம், கால்வெடிப்பு, குட்டமும் போம், காரமுண்டாம்.

கிளியூரல்பட்டை-சுரம்,கணல் வெப்பும்போம் தொனி, வாசமு முண்டாம்.

கிளுவைவேர் - விரணங்கள்போம்

கிளுவைப்பக்ஷிக்கறி - சிரங்கு, பித்தம் புண்ணும்போம், முலைப் பால் போகமுமுண்டாம்.

கிதுள்-கூந்தற்கமுகு

கிந்திகம்-திப்பிலிமூலம்

கிரசேமிரம்-பச்சைக்கற்பூரம்

கிரஞ்சனம்-முருக்கை

கிரந்தி-ஓர்நோய்

அதன்வகை

அழிகிரந்தி-கணுக்கிரந்தி, கருங் கிரந்தி.

கிரந்தி - ஏலத்தோல், நெல்லிப் பருப்பு.

கிரந்திகம்- திப்பிலிமூலம்

கிரந்திநாயகம்-சிலந்திநாயம்

கிரந்திமூலம்-திப்பிலிமூலம்

கிரமுகம்-கமுகு

கிராகதி-நிலவேம்பு

கிராகம்-ஆமை

கிராணி-ஓர்கழிச்சல்

கிராணிக்கழிச்சல்

ஆறுகிராணியைப் பார்க்கவேண் டியது.

கிராணித்திரவியங்கள்-19.

அவையாவன

பொடுதலை, நாய்வேளை, சிறு குறிஞ்சா வேர், புளியாரை, வச ம்பு திரிசாரம், கரியவேம்பு அழி ஞ்சல் பெருங்காயம், இருசாரணை பஞ்சலோகம்,மிளகு,பாவட்டை, நற்சீரம், முட்காய்வேளை, அகிற் பட்டை, காவட்டம் புல், ஐங் துப்பு.

கிராம்பு-ஓர் சம்பாரம்.

இதன்வகை

நாட்டுக்கிராம்பு, சீர்க்கிராம்பு, கிராம்பு 3-திரும் சதைத்து அ ரைப்பட்டி கொதிக்கிறதண்ணீரி விட்டு ஆறியபின் இறுத்து 1 அல் லது 2-அவுன்சுவீதம் ஒருவேளை க்குப் பிரிய மானவர்களுக்குக் கொடுக்கில் அஜீரணம், வயிற்று நோவு, வாயுகுன்மம், ஆயாசம், அக்கினி மந்தம் இவைகள் எல் லாம்தீரும், இதுவாந்தியை நிறுத் தவும் உபயோகப்படும்.

கிரிகன்னி-வெள்ளைக்காக்கணம்

கிரிச்சரீடம்-சாதிக்காய்

கிரீமல்லிகை-மலை, மல்லிகை வெ ட்பாலை,

கிரிச்சரீட்டம்-சாதிக்காய்

கிரிராத்துவேர்-நிலவேம்பு

இது ஒரு நேர்த்தியானபெலன் கொடுக்கும் ஒளஷதமாயிருக்கிறது. அதைக் கீழ்ச்சொல்லியிருக்கிறபிரகாரம் அதிக பலனுடனே கொடுக்கலாம். கிரியாத்துக் குச்சைச் சதைத்து 1-அவுன்சு அரைபுட்டி கொதிக்கிற தண்ணீரிலிட்டு இரண்டுமணிநேரம் வைத்துப் பின்பு வடிகட்டவேண்டும். இதில் ஒரு வேளைக்கு 2 அல்லது 3-அவுன்சு வீதம் தினம் மூன்றுதரம் கொடுக்கவேண்டும். இதனுடன் கிராம்பு கறுவாப்பட்டை ஏலம் வகைக்கு 1-கிராம் சதைத்துக்கொண்டால் சாரம் அதிகமாகும். எல்லாப் பலவீனங்களுக்கும் முக்கியமாய் சுரமுண்டானபின்னிருக்கும் பலவீனத்துக்கும் அசீரணத்திற்கும், அக்கினி மந்தத்துக்கும்நன்று. மேற்சொன்ன அவுஷதம் குளிர் சுரத்துக்கும், முறைக் காய்ச்சலுக்கும் கொடுக்கலாம்.

கிரீடம்-வேலிப்பருத்தி

கிரீட்டி-பிரண்டை

கிருட்டி-பிரண்டை

கிருட்டிணசீரகம்-கஞ்சீரகம்

கிருட்டிணபாணம்-எட்டி

கிருட்டிணபேணம் - கடுகுரோகிணி

கிருட்டிணமூலி-துளசி

கிருட்டிணவல்லி-நன்னாரி

கிருட்டிணி-காக்கணம்

கிருதம்நெய், செம்முருங்கை கண்டாகி கிருதம், பென்னாங்கணிக் கிருதம், வல்லாரைக் கிருதம்.

கிருமி-புழு

கிருமிநாசம் - குசாசாளி யோமம், பங்கம்பாளை, பேய்ப்பீர்க்கு, புலாசம்விரை.

கிருமிக்குன்றம் - வாலுளுவையரிசி.

கிருமிசத்துரு-பூவரசம்விரை

கிருமிச்சுரம்-ஓர்சுரம்

கிருமிச்சொறி-ஓர்சொறி

கிருமிமதடு - ஓர்மலடு, அறுமலடு பார்க்க.

கிருமியோகம்-ஓர்மருந்து

கிரேந்தி-கச்சோலம், ஏலத்தோல்

கிலுங்கி-கிலுகிலுப்பை

கிலுகிலுப்பை-ஓர்செடி

### அதன்வகை

வெள்ளைக் கிலுகிலுப்பை, வட்டக் கிலுகிலுப்பை.

கிழவி-முருங்கை

கிளவரி - தண்ணீர் விட்டான் கிழங்கு.

கிளிமூக்கிலை-கற்றாழை

கிளை-மூங்கில்

கிறுசன்-குங்குமப்பூ, மஞ்சள்

கிறுதுவேதன்-பீர்க்கு

கிறுத்துவம்-அகில்

கிணை-விளா, புடம் போடுதற்குச் சரக்கு மேலிடும் கவசம்.

## கீ

கீரி யிறைச்சி - கீறிப்பிள்ளைக்கறி, சிரங்கு, சிலவிஷம், சொறி, நீரிழிவு, பல்லரணையும் போம். கெம்பீரம், வீரியமுமுண்டாம்.

கீரைத்தண்டு - அனல், இரத்தக்கடுப்பு, நீர்க்கடுப்பு, வெட்டையும், சிலநோயும் போம். சீதளம் வாயுவுமுண்டாம்.

கீழாநெல்லி- இரத்தப்போக்கு, காமாலை, சப்தத் தாதுக்களின் சுரம், சீதம், பித்தம், பூதப்பேய், மதுமேகம், விரணம், விஷம்விழி நோய்களும் போம்.

கீசகம்-மூங்கில்
கீடமாரி-சிறுபுள்ளடி
கீதவம்-ஊமத்தை
கீரிப்பூண்டு-ஓர்பூண்டு
கீரிமரம்-ஓர்மரம்
கீரை-ஓர்பச்சிலை

அதன்வகை

அரைக்கீரை, கலவைக் கீரை, குப்பைக்கீரை, கும்மட்டிக்கீரை, கோழிக் கீரை, கொடிப்பசளை, சிறுகீரை, துடுப்புக்கீரை, பிண்ணாக்குக் கீரை, புளிச்சக் கீரை, மான்கீரை, முடிக்கீரை, முளைக் கீரை, முள்ளிக்கீரை, விழுதிக் கீரை, வெள்ளிக்கீரை, கீரைத் தண்டு.

கீலகவெட்டை-மிருகாங்கை
கீலாலம்-நீர், இரத்தம், காடி.
கீழாநெல்லி-கீழ்க்காய்நெல்லி

கு

குகு-குகுதன் என்னும் நாடி
குகுலா-கடுகுரோகணி, தேனி
குகைக்காமன்-கல்நார்
குகைமனோத்ததி-சுவர்னபேதி
குக்கிலம்-அதிவிடயம்
குக்கில்-குங்கிலியம்
குக்கிற்சூரணம்-குக்கில்
குக்குடச்சூட்டு-கோழித் தலை, கெந்தகம்.
குக்குரம்-கோடகசாலை
குக்குலு-குங்கிலியம்
குங்கிலிகம்-குங்கிலியம், வாலுளுவை.
குங்கிலியம்-குக்கில்

அதன்வகை

கருங்கிலியம், வெள்ளைக் குங்கிலியம்.

குங்குமம்-குங்குமமரம், செஞ்சாந்து.
குங்கும பாஷாணம் - அஞ்சற்குளச்சி.
குங்குமவர்ணி-அரிதாரம், மஞ்சட்கடல்.
குங்குலு-குங்கிலியம்
குசந்தனம்-செஞ்சந்தனம்
குசம்-தருப்பைப்புல்
குசும்பா-செந்திருக்கம்பூ
குங்கசயம்-தாமரைப்பூ
குசை-தருப்பைப்புல்
குச்சத்தின்பாதி-கிறுபுள்ளடி
குச்சம்-குன்றி, நாணல், பற்பாடகம்.
குஞ்சம் - குன்றிக்கொடி, புளிநறளை, சீதாங்கபாஷாணம், குறுணியிி வெட்டிலொருபங்கு.
குஞ்சரம்-கருங்குவளை
குஞ்சராசனம்-அரசு
குஞ்சுரம்-குன்றி
குடகரம்-வேலிப்பருத்தி, உத்தாமணி.
குடக்கினி-கருங்காலி
குடசப்பாலை-வெட்பாலை,கறிப்பாலை.
குடகம்-மலை மல்லிகை, வெட்பாலை
குடப்பம்-இலுப்பை
குடமணம்-கருஞ்சீரகம்
குடமல்லிகை-மல்லிகை
குடம்-சருக்கரை
குடல்-குடர்

அதன்வகை

இரைக்குடல், கற்குடல், சிறுகுடல், தீனிக்குடல், பெருங்குடல், மணிக்குடல், மலக்குடல்.

குடலைப்பற்றியவை

குடல்திருகுகிறது, குடலேற்றம், குடலைப்பிடுங்குகிறது, குடல்

கொழுத்தது, குடல்வாதம், குடற்கொழுப்பு, குடற்சவ்வு.
குடவளப்பம் இலுப்பை
குடவன்-கோட்டம்
குடான்-செம்முள்ளி
குடிநீர்-கஷாயம்
குடியொட்டிப்பூண்டு-குருக்கு
குடிலம்-குராமரம்
குடிமரம்-காரை
குடைவேல்
குடைக்கிழங்கு-சிற்றரத்தை
குடோரி-வங்கமணல், வெங்காரம், வெள்ளைபாஷாணம்.
குட்டம்-கோஷ்டம், குஷ்டம்
குட்டநாசனம்-வெண்கடுகு
குட்டியிடுக்கி - சிற்றரத்தை, கோஷ்டம்.
குட்டினம்-கருஞ்சீரகம்
குணகண்டி-சிவதை
குணபலம்-அதிவிடையம்
குணலி-சீந்தில்
குணுக்கு-வெள்ளி
குண்டலி-இசங்கு, சீந்தில்
குண்டாணிக்கொடி-ஓர்கொடி
குண்டுரோசனை-குண்டோசனை
குண்டைச்சம்பா-சொறிக் குரும்பை.
குதபம்-தருப்பைப்புல்
குதம்-வெங்காயம், தருப்பை
குதானன்-தாளி
குதிரை-ஊர்க்குரு
குதிரைகொல்லி-ஓர்பூண்டு
குதிரைப்பயிரி-ஓர்பூண்டு
குதிரைப்பற்பாஷாணம்-ஓர்பாஷாணம்.
குதிரைப்புடுக்கன்-ஓர்மரம்
குதிரைவாலி-ஓர்பூண்டு
குதிரைவாலைச்சாமை-ஓர்புல்
குதிரைவாலிப்புல்-ஓர்புல்
குதும்பகர்-கும்பை
குதை-பாசி

குத்தரசம்-பெருங்காயம்
குத்தாலம்-காட்டாத்தி
குத்தாலா-கடுகுரோகிணி
குத்திரம் } சணல்
குத்து }
குத்துக்காந்தை, குத்துக்காரை, குத்துக்கோரை, குத்துத்திராய், குத்துப்பகன்றை, தலைக்குத்து, மூலைக்குத்து, குத்துக்காயம்
குந்தம்-நோய், கற்பாஷாணம், தாலம்பப்பாஷாணம்.
குருந்து-கண்ணோய்
குந்தி-கள்
குந்துரு-குந்துருக்கம்
குபசுபா-எட்டி
குபேரகம்-சின்னிமரம்
குபையம்-சிறுபுள்ளடி
குப்பிக்குட்சமைந்தகன்னி - பஞ்சபட்சிபாஷாணம்.
குப்பிச்சாரம்-காசிச்சாரம்
குப்பிலவணம்-வளையலுப்பு
குப்பைமேனி-ஓர்பூண்டு
குமஞ்சான்-தூபவர்க்கம்

அதாவது,

ஆண்குமஞ்சான்-குங்குலியம்
பெண்குமஞ்சான்-சாம்பிராணி
குமட்டு-அருக்களிம்பு, உவட்டு
குமட்டு-மாவிலங்கு
குமரி-கற்றாழை
குமிகை-வெள்வேளரு
குமிதம்-தேக்கமரம்
குமிதிகயு-தேக்கு
குமிழ்-குமிள், நாணல்.

அதாவது,

செங்குமிழ், நிலக்குமிழ், பெருங்குமிழ்.
குமுதம்-ஆம்பல்

அதன்வகை.

வெள்ளல்லி, செவ்வாம்பல், செவ்வல்லி.

குமுந்தகம்-கற்பாஷாணம்
குமுலி-துளசி
கும்பகம் - தொட்டி, சாலாங்க பாஷாணம்.
கும்பஞ்சான்-சிவதை
கும்பம்-கும்பவாகம், சிவதை பலண்டுறுகம், தாலம்பம்.
கும்பளம்-பூசநி
குயக்காலம்-நிலக்கடம்பு
குயற்றிணலகை-நிலவாகை
குயபீசகம்-எட்டி
குயா-கோங்கு
குயின்மொழி-அதிமதுரம்
குய்யபீசகம்-எட்டி
குரகதம்-குதிரைப்பற்பாஷாணம்
குரக்கன்-கேழ்வரகு
குரங்கம்-எட்டி
குரங்கு-மொசுமொசுக்கை
குரண்டம் - பச்சைப்பூவுள்ள மருதோன்றி.
குரமடம்-பெருங்காயம்
குரம்-தருப்பைப்புல், பாகல்
குரல்திணை-பாதிரிமரம்
குரவகம் - செம்பூவுள்ள மருதோன்றி, வாடாக்குறிஞ்சி
குறவம்-கோட்டம், பேரீந்து
குரவரம்-குறிஞ்சா
குரவு-குராமரம்
குரா-ஓர்செடி
குராகாணி-ஓர்பூண்டு
குரு-குருசு, அம்மை
குருகு-குருக்கத்தி
குருசம்-வெந்தோன்றி
குருதி-உதிரம், மூளை
குருது-நெய்
குருந்து-குருந்தக்கல், காட்டுக்குருந்து, காட்டெலுமிச்சை, பெருங்குருந்து, காட்டுநாரத்தை.
குருமுளை - சவுக்காரம், கோடாசுவி.
குருவி-குன்றுமணி
குருவிச்சி-பல்லூரி
குருவிந்தம்-குன்றி, சாதிலிங்கம், கோரைக்கிழங்கு.
குருவுக்காதி-பச்சைக்கற்பூரம், வேத சிந்தூரத்தில் பிரதான சரக்கு வேதைச்சிந்தூரம்.
குருவேர்-ஓர்பூண்டு
குருளை-ஆமை
குலகாயம்-பேய்ப்புடோல்
குலகாயம்-நிலக்கடம்பு
குலசேவதன்-சவரிலோத்திரம்
குலத்தம்-கொள்ளு
குலப்பம்-செம்புமணல்
குலம்பா-பேய்ச்சுரை
குலவுகாசம்-நாணல்
குலவுரி-சந்தனம், செஞ்சந்தனம்
குலாங்கிலி-காவட்டம்புல்
குலாதனி-கடுகுரோகிணி
குலிகம்-இலுப்பை, இங்குலிகம்
குலிசம்-இலுப்பைமரம், வன்னிமரம், கற்பரிபாஷாணம்.
குலிமல்-நாகபாஷாணம்
குலத்தம்-கொள்ளு
குலுமமூலம்-இஞ்சி
குலைக்கல-கோரோசனம்
குலோமி-வெள்ளறுகு
இல்லரி-இலந்தை
குல்லை-கஞ்சா, துளசி, வெட்சி,
குலவலி-இலந்தை
குவடு-சங்கபாஷாணம்
குவட்டிற்புளிதம் - சங்கபாஷாணம.
குமட்டினீயம்-நீலாஞ்சனக்கல்
குவட்டுக்கூர்மை-தொட்டிப்பாஷாணம்.
குவட்டுநுண்முலைச்சி - சுவர்ண பேதி.
குவம்-ஆம்பல்
குவரிகுண்டல்-வாலுளுவை

குவலம்-குவளை, நெய்தல்
குவலை-கஞ்சா, துளசி
குவளை-கருங்குவளை, உற்பலம், செங்குவளை.
குவாகம்-கமுகு
குழம்பு-ஓர்மருந்து

இதன் வகை

அகஸ்தியர் குழம்பு, தோஷாமிர்தக் குழம்பு, லிங்கக்குழம்பு கருங்குழம்பு, சண்டமாருதக்குழம்பு, பரியளக்குழம்பு.

குருத்தாமரை - ஆகாசத் தாமரை கொட்டைப்பாசி.
குழிமிட்டானை-நத்தைச்சூரி
குழை-நெய்தல்
குளவி-மலைப்பச்சை
குளரி-நீர்க்குளிரி
குறஞ்சனம்-வெங்காரம்
குறஞ்சி-செம்முள்ளி
குறத்தி-நிலப்பனை
குறவன்-இரதம்

குறி - அடையாளம், குணம் தோற்றம் இலட்சணம்.

1-நாடிக்குறி

பெருவிரல் முதல்மூன்றுவிரல்களுக்குள்ளாக நெல்லுமணிப்பரிமாணமான நாடிநடக்கும் அதுசர்வாங்கமுங் கூடியிருக்கும், கரமூலத்திலும், பாதமூலத்திலும், நாடி பதிந்திருக்கு மாகையால், ஸ்திரீகளுக்கு இடது பக்கமும் புருஷருக்குவலதுபக்கமும் பார்க்கவேண்டும்.

வாதபித்த நாடிகள்முதல் விரலின் கீழ் நடக்கும், சிலேத்துமநாடிநடுவிரலின் கீழ் நடக்கும் அப்படிக்கில்லாமல் தாண்டி நடந்தால் ஆச்சரியநாடி யென்றறிக.

வாதநாடி வக்கிற கதியாய் நடக்குந் தவளையைப்போலவும், பாம்பைப்போலவுஞ்சிறுபிள்ளைதொட்டிலைப் போலவும் அட்டையைப்போலவும் நடக்கும்.

பித்தநாடி சலபதாதுவாகவிருக்கும், இறகுவிரித்த மயில்போல அன்னபட்சிபோலக்குதிரைபோலநடக்கும்.

சிலேத்துமநாடி ஸ்திரகதியாய்க் கோழியைப்போல நடக்கும் பித்தசிலேத்துமநாடிக்குறி.

முதல் பாம்புபோல நடந்து உடனே அட்டையைப் போல நடக்கும்.

அசீரணநாடிக்குறி

யானை நடையைப்போல நடக்கும்.

தீபனநாடிக்குறி

நித்திரைபோகிற காகத்தைப் போலநடக்கும்.

ஸ்திரிசங்கநாடியும் இந்தப்படியேநடக்கும்.

அன்னத்தைபோல் நடந்தால் மலபந்தநாடியென்றறிக.

சன்னிபாதநாடிக்குறி

விறகுசுமை மத்தியில் மூன்றூறுஒடுவதுபோலவும், குடிலமாயும் சீதிலமாயும், மந்தமாயும், சூட்சுமமாயும், நடக்கும்.

2-ஸ்பரிசக்குறி

வாதரோகிக்கு தேகம் கொஞ்சம், உஷ்ணமாயிருக்கும், பித்தரோகிக்குக் கொஞ்சம் குளிர்ந்திருக்கு நானாவிதமாயிருக்கும்.

3-சுரூபக்குறி

வாதரோகிக்குச் சரீரங் கறுத்திருக்கும், பித்தரோகிக்குத்தேகம்மஞ்சள் நிறமாயாவது, சிவப்பாயாவதிருக்கும் சிலேத்துமரோகி

குத்தேகம்வெளுத்த நிறமாயிருக்கும் தொந்த ரோகிக்கு தேகம் மிசுர வருணமாயிருக்கும் சன்னி ரோகிக்கு விவருணமாயிருக்கும்.

4-சபதக்குறி

வாதரோகிக்கு வார்த்தைமெது வாயிருக்கும், பித்தரோகிக்கு வார்த்தை உரத்தத தொனியோடிருக்கும், சிலேத்தும ரோகிக்கு வார்த்தை ஈனசுரமா யிருக்கும், தொந்தரோகிக்கு வார்த்தைவெகுவிதமாயிருக்கும்.

5-நேத்திரக்குறி

வாதரோகிக்கு கண்கள் கறுத்திருக்கும், கொஞ்சம் நோயுண்டாயிருக்கும், கண்ணில்நீர்பாயும் பித்தரோகிக்கு கண்கள் மஞ்சள் நிறமாயாவது சிவந்தநிறமாயாவதிருக்கும், சிலேத்மரோகிக்குக் கண்கள் பீளைகட்டி வெளுத்திருக்கும் சன்னிபாதத்துக்குகண்கள் சிவந்தாவது மஞ்சள் நிறமாயாவதிருக்கும், காமாலை ரோகிக்குக் கண்கள் மஞ்சள்நிறமாயிருக்கும்.

6-மூத்திரக்குறி

வாதரோகிக்கு மூத்திரம் வெளுத்திருக்கும், பித்தரோகிக்கு மூத்திரம் சிவந்திருக்கும், சிலேத்துமரோகிக்கு மூத்திரம் நுரைத்திருக்கும், தொந்த ரோகிக்கு மூத்திரம் மிசிரமாயிருக்கும், காமாலை ரோகிக்கு மூத்திரம் மஞ்சள் நிறமாயிருக்கும்.

7-நாக்குக்குறி

வாதரோகிக்கு நாக்கு வெடித்துமுள்ளுண்டாய் மஞ்சள் நிறமாயிருக்கும், பித்தரோகிக்கு கறுத்தாவது சிவந்தாவதிருக்கும், ஐயதேகிக்கு நாக்கில் தினவுண்டாய் வெளுத்திருக்கும், சன்னிபாத ரோகிக்கு நாவில் முள்ளுண்டாய் திரவமில்லாதிருக்கும், தொந்த ரோகிக்கு நாக்கு மிசிரமாயிருக்கும்.

8-மலக்குறி

வாதரோகிக்கு மலம் கறுத்திருக்கும், பித்தரோகிக்கு மலம் மஞ்சள் நிறமாயாவது சிவந்தநிறமாயாவது இருக்கும், சிலேதமரோகிக்கு நுரைகட்டி வெளுத்திருக்கும், தொந்தரோகிக்கு மிசிரவர்ணமாயிருக்கும்.

ஆகிகசுரக்குறி

சுரமுண்டாய், குளிர்வருதல் சரீரம் புளகித்தம், தாகமுண்டாதல், சந்தாபப்படுதல், கண்கள் நோதல், தலைநோதல், உடம்பு நோதல், வயிறு நோதல், பக்கங்கள் நோதல், அபத்தியத்தில், வாஞ்சையுண்டாதல், நித்திரையதிகரித்தல், கால், முகம், வயிறு வீக்கமுண்டாயிருத்தல், சரீரம் வெளுத்தல், நகங்களிலும் கண்களிலும் இரத்தமில்லா திருத்தல் வயிறுகழிதல், அசதியாயிருத்தல், உள்ளங்கால் உள்ளங்கை எரிவந்த மாயிருத்தல் இவையென்றறிக.

ஆகிகசுரங்களின் பெயர்கள்

ஏகாகிகசுரம், தவியாகிகசுரம், பஞ்சாகிகசுரம், அர்த்தராத்திரி சுரம், பக்ஷ சுரம், மாறல் சுரம், வாத பயித்திய சிலேத்தும சுரங்கள்.

ரத்தசுரம்,மாம்ஸகதசுரம்,சருமகதசுரம், அஸ்திகதசுரம், இவ்விதமான நான்குவித சுரங்களின் நிதானத்தைச் சொல்வோம்.

### சருமகததசுரக்குறி

சூட்சுமமாய்ச் சுரமுண்டாயிருத்தல், தாகமுண்டா யிருத்தல், நாடி மந்தகதியா யிருத்தல், சூட்சுமமாய்த் தலைநோதல், சரீரம் குளிர்ந்திருத்தல், குடிலசுரம், சந்ததமிருத்தல் சரீரம் இளைத்திருத்தல், சரீரம் வெளுத்தல் இவையென்றறிக.

### அஸ்திகதசுரக்குறி

உள்ளே தாகமுண்டா யிருத்தல், சரீரம் குளிர்ந்திருத்தல், குடில்நாடி நடந்துகொண் டிருத்தல், சந்ததம் சுரமுண்டாயிருத்தல், சரீரம் க்ஷீணித்துப்போதல், சரீரம் வெளுத்தல், இவையென்றறிக.

### ரக்தகதசுரக்குறி

தீவிர சுரமுண்டா யிருத்தல், தாகமுண்டாயிருத்தல், வேர்வையுண்டாதல், ஆயாசமுண்டா யிருத்தல், ததபிரமையுண்டாதல், சரீரநோயுண்டாதல், மூர்ச்சை யுண்டாதல் இவையென்றறிக.

### சன்னிபாத சுரக்குறி

கழுத்திலும், நெத்தியிலும், மார்பிலும், வேர்வையுண்டாதல், தவித்தல், பிரமையுண்டாதல், சந்தாபப்படுதல், சரீரநோயுமுண்டாதல், தலைநோயுண்டா யிருத்தல், சர்வாங்கமு மவிதாகமா யிருத்தல், கண்கள் சிவந்து காணல், மூர்ச்சை யுண்டாயிருத்தல், பராந்தி யுண்டாயிருத்தல், கணவுகாணல், வயிற்றுச்சூலை யுண்டாயிருத்தல், ஈனதவனியா யிருத்தல், இவையென்றறிக.

### வாதசுரக்குறி

முகமும் உதடும் கறுத்துக் காணல், சரீரமெல்லாந் தடித்து நோதல், மெய்நடுக்கல், உடம்பு திமிரெடுக்கல், தேகம் பாரித்திருக்கல், மலபந்தமா யிருத்தல், குளிர்ந்து மயிர்க்குச்செறிதலுமா யிருத்தல், தலைநோயுண்டாயிருத்தல் இவையென்றறிக.

### பித்தசுரக்குறி

நித்திரை மெத்தக்காணல், மலமூத்திரஞ் சிவந்திருத்தல், வயிறு கழிதல், வாந்தியுண்டாதல், வாய் பினற்றல், வாதாடுதல், மூர்ச்சை, தாகம், எழுந்திருந்து ஓடல், விக்கல், தவித்திடல், சந்தாபப்படுதல் இவையென்றறிக.

### சேத்துமசுரக்குறி

நாக்கும் முகமுங் கறுத்துக் காணல், மார்புநோதல், இரைப்பிருமல், உரிசையில்லாதல், மூச்சுவிடம்போகாமல், மயங்குதல், விக்கல், தாகம் மிடருநோயில் இவையென்றறிக.

குலைச்சவ்வு-மூடிமாமிசம்
குழிதந்தம்-நகம்
குருசாரம்-சிவசாரம்
குரேட்டை-விளா
குதிரைப்பல்லன்-வெள்ளைப்பூண்
குருக்கிநாதம்-சங்கிலை
குஜமபால்-முலைப்பால்
குசம்-தண்ணீர்
குறட்டை-காக்கணன்
குரை-கஞ்சாங்கோரை
குலரிச்சோறு-கற்றாழைசோறு
குக்குடம்-கோழிப்புடம்
குப்பை-சதகுப்பை
குக்கில்-மைசாட்சி, குங்கிலியம்
குரும்பை-தென்னம்பிஞ்சு

குருரசம்-சித்தரசம்
குருக்குவிரை-பிரமதண்டுவிரை
குடவன்-பித்தளை
குகை-மூசை
குப்பிவிட்டி-அரக்குப்பட்டி
குடோரி-மாத்திரை
குலாமல்லி-முட்செவ்வந்தி
குடோரி-குடோரிப் பாஷாணம்
குலிசன்-வைரவன்
குதிரைமஸ்தி-குதிரையெலும்பு
குளிகை-மாத்திரை
குருநாள்-வியாழம்
கும்பகம்-கலசம்
குமரி-சேற்றுக்கற்றாழை
குப்பி-சீசா, புட்டி
குளவிந்தம்-மஞ்சள்

குக்கில்-உதடுநோய், கடி, கட்டி, காதுநோய், குனகம், சூலை, நரம்புக்கட்டி, நாநோய், மேகப்புண், வாதவித்திரமும்போம்.

குங்கிலியம் - குக்கில், எலும்புருக்கிபுண், சீழ், நீர்பெருக்கல், சூலை பெரும்பாடு, மேகப் புண்ணும் போம்.

குங்குமச் செவ்வந்தி-கோழை போம்.

குங்குமப்பயறு - பதிபோம், மந்தம், தாகம், வாதசேட்டுமம், வாய்வும் உண்டாம்.

குங்குமப்பூ - அண்டவாதம், அயர்ச்சி, கண்ணிலுண்டாகும்பூ, கபம், கால்வலி, சூலை, தாகம், மேகசலம், விந்துநஷ்டம், சர்த்தி, சலதோஷம், சுரம், செவிநோய், பித்தம், மதுமேகம், மேகநீர், ஸ்திரீ கெற்ப உதிரதோஷமும் போம்.

குடசப்பாலைமரம்-வெட்பாலை, கரப்பான், நீரிழிவு, மேகம், வாதம், விரணமும்போம். பேதி கட்டுண்டாம்.

குடியோட்டிப்பூண்டு - குடிக்குச்சனி, இருமல், கடிகன், கரப்பான், சிலவிஷம், பல்நோய், புண், பொடிசிரங்கு, மேகவாய்வு, மேகமும் போம்.

குண்டகச்சியிளநீர் - அரோசி, தாகம், பழமலமும்போம். தீபனமுண்டாம்.

குண்டற்சம்பா-எல்லாத் தாகமும் போம். கரப்பான், மந்தநோயும் உண்டாம்.

குதிரைக்குளம்படியிலை - நிலக்கடம்பு, நடைவாயு, ஜன்னி, தினவும்போம்.

குதிரைப்பால் - அழகு, வீரிய விர்த்தியுமுண்டாம்.

குதிரைமூத்திரம் - கபம், கால்வீக்கம், கிருமி, படர்தடிப்பு, வாதமும்போம் சூடுண்டாம்.

குதிரையேற்றம் - அசுவசாரி, குளிர் போம். இருமல், சூடு, தீபனம், உடலிருகல், குடலிறங்கல், இலக்குமி கடாட்சமுமுண்டாம்.

குதிரைவாடி பூண்டு - இடுப்புவலி, ஈளை, கடுப்பு, கண்மயக்கம் கழிச்சல், காசம், சுரதாகம், சொறி படுவன், பருமாந்தம், மேகம், வாதகபமும், நடுக்கலுமுண்டாம்.

குந்திரிக்கம் - காகவாசம், சிரங்கு, தலைவலி, துர்க்கந்தம், குஷ்டம், படர்தாமரை, பலவிரணம், பீனிசம், மேகக்கட்டி, விஷக்கடியும்போம்.

குப்பைமேனியிலை - பூனைவணங்கி, உதிரமூலம், கபம், குன்மம், சர்வவிஷம், சுவாசம், சூலை, தினவு, தீபுண், பல்நோய், பீனிசம், மூலம், வாதமும் போம். உப்புக்கட்டுண்டாம்.

குமட்டிக்காய்-காந்தி, தாதும் போம், கபம், 'பல்விழுதல், வாதமுமுண்டாம்-

குமட்டிக்கீரை-ஆத்துதும்மட்டி, அக்கினி சீதம், நளிர்சுரும் போம் உஷ்ணவாயு, வாதமும் உண்டாம்.

குயில்கறி-குன்மவலி, சொறி, பித்தம், மேகம், வாதமும் போம் போக முண்டாம் பத்தியத்திற்காகும்.

குருக்கத்திப்பூ - சிரரோகம், தாகம், சிலேட்டுமம், பல்விஷம், பித்தம், விரணமும்போம், கைப்பும், மதுரமாகவிருக்கும்.

குருந்து-போதைபோம்.

குருவிச்சுப்பூண்டு - குஷ்டம் சீதரத்தம், மேககரப்பான், விஷமாந்தமும்போம்.

குரோசணி ஓமம்-உள்கடுப்பு, கபம் கரப்பான், புண், பேதி, வாதம், வீரிய நஷ்டம், வெகுமூத்திரமும்போம், மயக்கமுண்டாம்.

குழம்புன் குணம் - வாயுபோம் அதிக்காரமுள்ள குழம்புக்குமுத்தோஷம்போம்.

குருபரங்கிக் காய் - பூசினிக்காய், ஐயம், குளிர்ச்சி மாந்தம், வாதகுடைச்சல், வாதசூலையுண்டாம்.

குழிமீட்டான் - தண்ணிமிட்டான் உள்கூடு, கனமாந்தம்,குழவிதோஷமும்போம் ஸ்திரீகளுக்குப் பாலுண்டாம்.

குழந்தைவன்ன-காசம், மந்தாக்கினி, மேகமும்போம், துர்ப்பலம் பீனிசமும் உண்டாம்.

குளத்துநீர் - குளிர்ச்சிவாதமும், உண்டாம்-

குளத்துமீன்-கபம், மந்தம், மேகமும் உண்டாம்.

குளபாலைமரம்-அதிசாரம், அனல் கரப்பான், சுவாசகாசம்,பக்கசூலை வியர்வையும்போம்.

குளுந்தநீர் திமிர், மந்தவாய்வு, விக்கல, விஷமும் உண்டாம், சுரம் சந்நிபாத தோஷத்திற்கும் ஆகாது.

குறவைமீன் - இருமல், குடல் வலியும்போம், அருசி மலக்கட்டுமுண்டாம்.

குறுஞ்சான்கடை - பலநோய்களும்போம் பலமுண்டாம்.

குருஞ்சிநிலம் ஐயம்,கபம்,கண்ணெரிவு, சூலையெரிவு, அரோசிகம் பித்தம், சுரம், வயிற்றின் வாயு ஆமைக் கட்டியும் உண்டாம்.

குறும்பாட் டிறைச்சி - குடல் வாதம், சூலையும்போம், சொறி, சிரங்கு வாய்வுமுண்டாம்.

குறும்பாட்டுத்தயிர் - முத்தோஷமுண்டாம்.

குறும்பாட்டுவெண்ணெய், வியாதிகளுக்காகாது.

குன்றிமணிச்சம்பா-அநேக வியாதியும் வாய்வும்போம், இந்திரியபுஷ்டி பலமும உண்டாம்.

குன்றிவித்து-ஐயம், காமாலை, தாபசோபம் நிறமழுங்கல் நேத்திரநோய், பித்தம், வியர்வை, வெப்பும்போம்.

வாதபித்த சுரக்குறி

அங்கமெல்லாம் அசதியாதல் நாக்குக்கறுத்தும்காணல் பிரலாபித்தல், நித்திரையாதல், மலபந்தமாயிருத்தல், மலம்வெளுத்தல்,

வாய்கைத்தல் 'வடிவுகுன்றல், நினைந்துமறத்தல், தியங்கிடுதல், மயங்கிடுதல் இவையென்றறிக.

தொந்தசுரக்குறி

சடமெல்லாம் நோதல், சுவாசங்காணல், இருமல், வெளுத்தநாக்கு, மயிர்க்குச்சிடுதல், மிடறு நோதல், தாபமிக வுண்டாதல், தயங்கிச்சஞ்சலித்தல், வாய்பிதற்றல், தேகம் வழுவழுத்திடல், வேர்வைமிக வுண்டாதல், வாய் கைத்தல், நித்திரைமிகல், மார் நோதல், தலைவலி, பிடரிவலித்தல், நாக்குவழு வழுத்தல், நாக்குமூக்கு நலமழிதல் இவையென்றறிக.

அசீரணக் குறி

இளைப்பு, விக்கல், வயிற்றுமந்தம், மார்பு, தொடை, குரல்நோதல், புளியேப்பம், வாந்தி தாகம் மூச்சு வயிறுநொந்து பொருமிக் கொள்ளல், உடம்பெங்கும் திமிரதல் இவையென்றறிக.

அபிகாதசுரக்குறி

அதிகநடையாலும், குதிரை யானையேறி நடந்துவதாலும், சுமையெடுத்தலாலும், அதிகமாய் வேலை செய்தலாலும் பனியில் சஞ்சரித்தலாலும், திமிர், தாகம் இளைப்பு, கைகால் தளர்ச்சி உடம்பெல்லாநோதல், மாறுதவேர் வையுண்டாதல், பிரமிக்குதல், குளிர்ந்த போசனத்தில் ஆசை யுண்டாதல் இவையென்றறிக.

சன்னிபாதங்கள் பதின்மூன்று அதாவது

சந்திசன்னி, அந்தகச்சன்னி ருத்தாஹசன்னி, சித்தவிப்ரமசன்னி, சீதாங்கசன்னி, தாந்தரிகசன்னி, கண்டகுப்பசன்னி, கர்நிகசன்னி, பக்னநேத்திரசன்னி, ரக்தோஷ்டிசன்னி, பிரலாபசன்னி, ஜிக்வக சன்னி, அபின்னியாசசன்னி.

சந்திகசன்னிக்குறி

தேகம் எப்போதும்போல்விருத்தல், சூலைகாணல், சரீரம் பளபளப்பாயிருத்தல், உடம்புநோதல், தாகம், இருமல், தியக்கமுண்டாதல் இவையென்றறிக.

அந்தகசன்னிக்குறி

தாகங்காணல், புரமையுண்டாதல், தாபமுண்டாதல், தலையசைத்தல், கனவுகாணல், வாந்தியுண்டாதல், விக்கல்காணல், சுரமுண்டாதல் இவையென்றறிக.

ருக்காத சன்னிக்குறி

கனவுகாணல், தாபமுண்டாதல், சித்தப்பிரமை யுண்டாதல், நெஞ்சுநோதல், கிறுகிறுப் புண்டாதல், தண்ணீர்த் தாகமுண்டாயிருத்தல், உதடு உலர்தல், இருமலுண்டாதல், தேகமெல்லாங்குத்தலுண்டாதல், கூச்சலிடுதல், வேர்வைகாணல், கழுத்து நெற்றி வேர்வை காணல் இவை யென்று அறிக.

சித்தவிப்ரமசன்னிக்குறி

உடம்பெல்லாம்நொந்து நோயுண்டாதல், வாதமொடு பித்தமிஞ்சுதல், சித்தப்பிரமை யுண்டாதல், கிட்டவிருப்பவர்களை மருண்டுபார்க்குதல், புருவநெரிக்குதல், பாடுதல், ஆடுதல், வாய்பிதற்றல் இவையென்றறிக.

சீதாங்க சன்னிக்குறி.

சரீரமெல்லாங் குளிர்ந்திருத்தல் இருமலாதல், இரைப்புண்டாதல் விக்கலுண்டாதல், தேக நோயுண்டாதல், வாந்தியுண்டாதல், தாபமுண்டாதல், மூர்ச்சையுண்டாதல், அதிசாரபேதியுண்டாதல், சரீரம் நடுங்குதல் இவையென்றறிக.

தாந்திரிக சந்நிக்குறி.

பிரலாபித்தல், விக்கலுண்டாதல், நாக்குமிகவுங் கறுத்து முள்ளுண்டாயிருத்தல், தாபமுண்டாயிருத்தல், அதிசார பேதியுண்டாயிருத்தல், சுவாசமுண்டாதல், தினவெடுத்தல், கண்பெருத்தல், கண்ணீர்பாய்தல், சுரமுண்டாதல் இவையென்றறிக.

கண்டகுப்த சன்னிக்குறி.

பிரமையுண்டாதல், தாபமாதல் தலைசுழற்றல், தனுப்போல், கழுத்து, நரம்பு, இசைவுகாணல், புலம்பல், பயப்படுதல், எழுந்திருத்தல், மூர்ச்சையுண்டாதல், சரீரநோதல், இரும்ப லுண்டாதல், விக்கலுண்டாதல், ஈனத்தொனியுண்டா யிருத்தல், தலைநோயுண்டாதல். இவை யென்று அறிக.

கர்ன்னிக சன்னிக்குறி

கனவுகாணல், நாவெடித்தல், விக்கலுண்டாதல், இருமலாதல், நடுக்கலுண்டாயிருத்தல, காதின் கீழ் வீக்கமுண்டா யிருத்தல், காது கேளாதிருத்தல், அடிக்கடி யெழுந்திருத்தல் இவையென்று அறிக.

பக்னநேத்திர சன்னிக்குறி

கண்பெருத்தல், கண்ணீர்பாய்தல், பார்வை காணாதிருத்தல், கனவுகாணல், பிரமித்தல், நடுக்கலுண்டாதல் இவையென்றறிக.

ரக்தோஷ்டி சன்னிக்குறி

நாக்கு நடுவெடித்தல், உதடு வெடித்து இரத்தங்காணல், தீவிர சுரமுண்டாதல், உதடு உலர்தல், அசதியாதல், மூர்ச்சை யுண்டாதல், அதிசாரமுண்டாதல், கனவு காணல், இருமலுண்டாதல், தலை திருப்பலுண்டாதல், நடுக்குதல், நாக்குக்கறுத்து முள்ளுண்டாயிருத்தல் இவையென்றறிக.

பிரலாப சன்னிக்குறி

சரீரம் நடுக்கலுண்டாதல், கனவுகாணல், தாகமுண்டாயிருத்தல் சரீரநோயுண்டாதல், இருமலுண்டாயிருத்தல், விக்கலுண்டாயிருத்தல், அடிக்கடி யெழுந்திருத்தல் மிகவுஞ் சுரமுண்டா யிருத்தல் இவை யென்றறிக.

சிக்வசன்னிக்குறி

சுவாசமுண்டாயிருத்தல், தாபமுண்டா யிருத்தல், இருமலுண்டாயிருத்தல், நாக்குக் கறுத்து முள்ளுண்டாயிருத்தல், வாய் திறவாமல மூடியிருத்தல், காது கேளாதிருத்தல், சாத்தியகடினமாக்காணல் இவையென்றறிக.

அபின்னியாச சன்னிக்குறி

வாதபித்த சிலேத்மங்கூடியிருத்தல், சுரமடித்தல், சுவாசமுண்டாயிருத்தல் முகம் பளபளப்பாயிருத்தல், நாக்குக்கறுத்துக் காணல், அதிகநித்திரை யுண்டாதல், சரீரமெங்கும் நோயுண்டா

தல், தாபமுண்டாதல், அசதியு ண்டாதல், தண்ணீர் தாகமுண் டா யிருத்தல், வேர்வையுண்டா தல் இவையென் றறிக.

சாத்திய சன்னிகள்

சந்திரசன்னி, தாந்திரிகசன்னி பிரலாபசன்னி, சித்தவிப்பிரம சன்னி, சிக்வசன்னி, கர்னிகசன் னி. இவ்வாறும் சாத்திய மென் றறிக.

அசாத்திய சன்னிகள்

ருக்தாகசன்னி, அந்தகசன்னி பக்னநேத்திரசன்னி, கண்டகுப் தசன்னி' ரக்தேஷ்டிசன்னி, சீத ங்கசன்னி, அபின்னியாச சன்னி இவ்வேழும் அசாத்திய மென்ற றிக.

சன்னிபாதத்தின்
தினப் பிரமாணம்

சந்திகசன்னிக்கு ஏழுநாள், அ ந்தகசன்னிக்குப் பத்துநாள், ருத் தாகசன்னிக்கு இருபதுநாள், சித் தவிப்பிரம சன்னிக்கு இருபத் தொருநாள், சீதாங்க சன்னிக்கு பதினைந்துநாள், தாந்திரிக சன னிக்கு இருபத்தைந்துநாள், அல் லது ஏழுநாள் கண்டகுப்தசன் னிக்குப் பதின்மூன் றுநாள், கர்ன் னிக சன்னிக்கு மூன் றுமாதங்கள் பக்னநேத்திர சன்னிக் கெட்டு நாள், ரக்தேஷ்டி சன்னிக்குப்பத் து நாள், பிரலாபசன்னிக்குப்பதி னாலுநாள், சிக்வசன்னிக்குப் பதி னாறுநாள், அபின்னியா சன்னிக் குப் பதினைந்துநாள்.

தோஷங்கள் ஏழு

அபத்யதோஷம், ஸ்திரீசங்கம தோஷம், விஷம்தோஷம் சீதள தோஷம், ரத்தசிக்வக தோஷம், பீதசிக்கை தோஷம், கிருஷ்ண சிக்வாதோஷம்.

அபத்தியதோஷக்குறி

அயர்வுண்டாதல்; மூர்ச்சையு ண்டாதல் ப்ரமை யுண்டாதல், தாகமுண்டாதல், கனவுகாணல், மார்நோதல் இவையென் றறிக.

ஸ்திரீசங்கமதோஷக்குறி

சரீர நோயுண்டாதல், நடுக்க முண்டாதல், மாறெரிவந்த முண் டாதல், கனவுகாணல், அடிக்கடி யெழுந்திருத்தல், பிரமையுண்டா தல், கால்கைகள்குளிர்ந்திருத்தல் இவை யென் றறிக.

விஷத் தோஷக்குறி

சுரமுண்டாதல், தாபமுண்டா தல், நாடிகுடிலமாயிருத்தல், அந் தர்தாஹ முண்டா யிருத்தல், வேர்வை யுண்டாதல் மூர்ச்சை யுண்டாதல் இவையென் றறிக.

விஷம் சீதள தோஷக்குறி

ஒரு தினத்துக்குள் இரண்டு மூன் று நாலுதரம் குளிர்கண்டு சுரமுண்டாதல், தாகமுண்டாதல் மோகமுண்டாதல, தலைநோயுண் டாதல், நாவில் முள்ளுண்டாயிரு த்தல் இவையென் றறிக.

ரக்தஜிக்வக தோஷக்குறி

நாக்குச் சிவந்துகாணல், முள் ளுண்டாயிருத்தல், சுரமுண்டா யிருத்தல், தாகமுண்டாயிருத்தல் இவையென் றறிக.

பீதஜிக்வக தோஷக்குறி

நாக்குமஞ்சள் நிறமாய்ப்பிளந் து கரவமில்லாமலிருத்தல், முள் ளுண்டாயிருத்தல், சுரமுண்டா யிருத்தல் பிரமையுண்டா யிருத் தல், வேர்வையுண்டாதல், மூர்ச் சை யுண்டாதல், இருமலுண்டா

தல், ஈனத்தொனி யுண்டாதல், இவையென்றறிக.

கிருஷ்ணஜிக்வக் தோஷக்குறி

நாக்குகடினமாய் கறுத்துமுள்ளுண்டா யிருத்தல், அடிக்கடியெழுந்திருத்தல், பிரமையுண்டாதல், உளரல், சுவாசமுண்டாதல் தினவெடுக்கல், வேர்வையுண்டாதல், தாகமுண்டா யிருத்தல் இவையென்றறிக

இவைகளுக்குத் தினப்பிரமாணம் பதினோந்துநாள் அல்லது ஏழுநாளென்றறிக.

அதிசாரநிதானம்

மந்தத்தினலும் உஷ்ணத்தினலும், உப்பினலும் சயித்தியதிரவியங்களினலும், போஜனத்தினலும், அழுகிறதினலும் திரிகிறத்தினலும், விரோசனத்தினலும், அதிசாரங்களுண்டாம்.

வாதாதிசாரக்குறி

மலம்நுரைகட்டி கறுப்பாய் ஆகிறது, கொப்புளின் கீழ்நோதல் சரீரநோதல், வயிறு அப்போதுக்கப்போது உப்புதல் சற்றுநேரத்துக்குள்ளாக வாடுதல், கொஞ்சம்மலம் கட்டியாயிருத்தல் நாற்றமாயிருத்தல் இவையென்றறிக.

பித்தாதிசாரக்குறி

மலம் சிவந்திருத்தல் மஞ்சள் நிறமாயிருத்தல், நுரைகட்டியிருத்தல், ஒருதரம் மஞ்சள் நிறமாயும், ஒருதரம் சீதம்விழுதல், விகாரமுண்டாகுதல், வயிறுபிடுங்கல், தாகம் அதிகமாதல் வேர்வையுண்டாதல், மூர்ச்சையுண்டாதல், பிரமையுண்டாதல், உதடுலர்தல் இவையென்றறிக.

சிலேத்திமாதி சாரக்குறி

சீதம்விழுதல், நுரைவெளுத்தமலம், இருமல், சுவாசமுண்டாதல், காதுகேளாதிருத்தல், குன்மமாய் வயிறுநோதல் இவையென்றறிக.

சுரதிசாரக்குறி

சுரமுண்டாதல், தாபமுண்டாதல், மார்நோதல், அரோசிகமுண்டாதல், அதிசாரமுண்டாதல் சீதக்கட்டு விழுதல், ரத்தபேதியாதல் இவையென்றறிக.

தோஷாதிசாரக்குறி

அந்தர்தாகமுண்டாதல், சரீரங்குளிர்ந்திருத்தல், கால் கைகள் குளிர்ந்திருத்தல், பிரமையுண்டாதல், வாந்தியுண்டாதல், விக்கலுண்டாதல், இருமல் உண்டாதல், சுவாசமுண்டாதல், அதிசாரமுண்டாதல், நடுக்கலுண்டாதல் ஆயாச முண்டாதல், உப்பிசமுண்டாதல், நித்திரையிலாதிருத்தல் வேர்வையுண்டாதல், சீதம்விழுதல், இரத்தங்காணுதல், வயிறுநோயுண்டா யிருத்தல் இவையென்றறிக.

அதிசார அசாத்தியக்குறி

மலம்விளக்கெண்ணெய் நிறமாகவருதல், மாமிசம்போல யிருத்தல், தேன்போலிருத்தல், பலவீனமாயிருத்தல், மலம் துர்க்கந்தமாயிருத்தல், மலம் மிசிரவர்ணமாயிருத்தல், கறுப்பாயிருத்தல், நாணுவருணமாயிருத்தல், இவையென்றறிக.

அதிசார சாத்தியக்குறி

கருங்குவளையைப்போலகண்கள்காந்தியுண்டா யிருத்தல் முகம் சந்திரபிரம்பம்போல காந்தியுண்டாயிருத்தல் காடியதாஸ்தானத்

தில் சமதாதுவையிருத்தல், குயி ல்தொனியா யிருத்தல், தும்ப லுண்டாதல்,பசியுண்டாதல், தலை யில் கனவுண்டாயிருத்தல், அன் னத்தின் மீது வாஞ்சை யுண்டா யிருத்தல், பல்லுகள் மல்லிகை மலர்போலிருத்தல், நாக்குமெது வாகவிருந்து திரவமுண்டாயிரு த்தல், இவை சாத்தியமென் றறி ந்து சிகிச்சைசெய்யவேண்டும்.

அசாத்தியரோக நிதானம்

சுரந்தீக்ஷணமா யிருத்தல், சரீ ரங் குளிர்ந்திருத்தல், சுரங்குடில மாயிருத்தல் கண் ரெப்பையில் ரத்தமில்லாதிருத்தல், காலிலும் உள்ளங் கையிலும் ரத்தமில்லா திருத்தல் கண்களில் தேஜஸில்லா திருத்தல், காதில் சமுத்திர இ ரைச்சலாயிருத்தல், வேர்வையில் லாதிருத்தல், அல்லது உலராத வேர்வையாயிருத்தல், முகத்தில் காந்தியில்லாதிருத்தல், கண்பரு த்தல் அல்லது சூக்ஷ்மாக யிருத் தல்,தொப்புள்,மார்பு,மூக்கு,கால், கைகள்குளிர்ந்திருத்தல், ஊர்த்த சுவாசமுண்டா யிருத்தல், விக்க லுண்டாயிருத்தல், தலை நடுக்கு தல், வேதனை யுண்டாயிருத்தல், கண்டத்தில் சிலேத்துமங் கட்டு தல் பரிமளமறியாதிருத்தல்மலம் வெளுப்பாயிருத்தல், நாடி சூட் சுமமாயிருத்தல் முதல்பித்தநாடி நடந்து உடனே சிலேத்துமநாடி நடந்தால் இவ்விதக் குறியுள்ள ரோகங்கள் அசாத்திய மென் றறிக.

புசித்தபேர்கட்கும், ஸ்நானஞ் செய்த பேர்கட்கும், நித்திரை செய்த பேர்கட்கும், உபவாச மி ருந்தபேர்கட்கும், வழிநடந்தபே ர்கட்கும், கோபமாயிருந்துளோர் க்கும், பூதம்பிடித்தபேர்கட்கும் அழுதவர்கட்கும், ஸ்திரீசங்கமஞ் செய்தபேர்கட்கும், கள்ளுண்ட பேர்கட்கும், மதிப்பிரமையாயி ருப்போர்க்கும்,கஞ்சாதின்றபேர் கட்கும், யோகாப்பியாசஞ்செய்த பேர்கட்கும், கோழி, முயல், தவளை முதலான மாமிசம் புசித் தவர்கட்கும், பயித்தியம் பிடித் தபேர்கட்கும், வெய்யல் காய்ந்த பேர்கட்கும் நாடி கிரமமாகநடக் காது.

மரணக்குறிகள்

கண்ணும் பல்லும்கருத்துக்கா ட்டல், வாயால் மூச்சுவிடல், கண் பஞ்சடைதல், மூச்சுவாங் கல், அடிக்கடி எழுந்திருத்தல் படுத்தல, இரண்டுகண்களு மலர விழித்தல், வழிபார்த்தல், சேத் துமங் கட்டல், மருந்து சாதம் விழுங்கக் கூடாமல் தொண்டை யில் வருத்தப்படல், முகம் ஊசி போல் நீளமாய்க்காணல், உடம் பெல்லாம் நரம்புகள் தோணல், கண்ணில் இருள்மூடல் நாவர ண்டு போதல் பிதற்றுதல்.

இங்கிலீஷ் வைத்திய அகராதியி லிருந்து மொழிபெயர்த்தது.

சீவதத்துவங்களின் கெடுதி குறிகள்

பேச்சற்றுப் போதல், பேத மாய்ப் பேசுதல், மயக்கம் அல் லது மதி கடுமாற்றம், ஞாபகத் தவறு, பொய்க்காட்சி, ஸ்திர மில்லாத புத்தி, மட்டு மிஞ்சின திடாரிக்கம் மனோ கற்பனையான

வெறியாட்டு, மூப்படியு மத்தம், சுரணையில்லாமை, நினைவு சஞ்சலித்தல், உலைவு, எண்ணம், மட்டுக்குமிஞ்சின ஆண்மை, மனோசலனம், விறைப்பு, திமிர்ப்பு, இயல்புக்கு விரோதமான பரிசவறிவு இல்லாமை உருசியில்லாமை, சுபாவத்துக்கு விரோதமான வாசனை, வாசனைகெடுதி, பார்வை கெடுதி, பார்வை யில்லாமை, பார்வை யீனம், கிட்டப்பார்வை, கேள்விக் கெடுதி, கேளாமை, தப்பான கேள்வி, சுபாவத்துக்கு விரோதமாய்த் தசை நரம்பு இயக்கம், குரல்கனப்பு, தப்பானஉச்சரிப்பு நித்திரையில்லாமை, சுவாவத்துக்கு விரோதமான நித்திரை.

## உயிர் நிலையான தத்துவங்களின் சீர்கேடு

படபடப்பா யோடுகிற நாடி, மந்தநடைநாடி, உறுதிநாடி, பலவீனமுள்ளநாடி, உரப்பான நாடி, மெதுவானநாடி, மெலிவுநாடி, சிறுமைநாடி, வலியுறுத்தாக நடக்கும்நாடி, ஒடுங்கினநாடி, முறைகேடானநாடி, மாறிமாறிநடக்கிற நாடி, தெரிப்புநாடி, நாடியில்லாமை, இருமல், மூச்சுவிடப்பிரயாசை, பெருமூச்செறிதல்.

## சுபாவதத்துவக் கெடுதிகளின் குறிகள்

பசியின்மை, ஆறுப்பசி, இரைக்குடல்நலி, பசிகெடுதி, தாகம் கோபமின்மை, விழுங்கலில் வருத்தம், மலச்சிக்கல், மலத்தளர்ச்சி சுபாவத்துக்கு விரோதமான வயிற்றுக்கழிச்சல், அதிக வெயர்வை சளி, கக்கல், அதிக வாய்ச்சுரப்பு சுபாவத்துக்கு விரோதமானமூத்திரம்.

## ஆண்பால் பெண்பாலுக் கடுத்த தத்துவக்கெடுதிகளின் குறி

ஆரோக்கியமற்ற இந்திரியம், சுபாவத்துக்கு விரோதமாய் இந்திரியம்விழுதல், இந்திரியம் விழுதலில்தடை, ஆண்குறி நிமிர்ச்சியாக சக்தியில்லாமை, சுபாவத்துக்கு விரோதமாய் கோசம் நிமிர்ச்சியாதல். பலட்சம், மெலிவு, சுபாவத்துக்கு விரோதமாய் சிறுநீர் விடுதல், தூரம்போதம், நின்றிருத்தல், சூதகநோய்.

## தோற்றகுண பேதம்

முகம் வெளுவெளுப்பா யிருத்தல், இயல்புக்கு விரோதமாய்சிவப்பு நிறங்காட்டல், நீல நிறங்காணல், மஞ்சள் நிறங்காணல், வீக்கம், அழுத்தினால் சத்தமுண்டாதல், சலனம், தத்தளிப்பு, எலும்பும் உரோமமுஞ்சுடுகிறது. பல் கூசுகிறது, தட்டும்போது சத்தமுண்டாதல், உறைதத இரத்தம் இரத்தத்தில் அதிக நிணநீர், இரத்தம் கருமைநிறமாயிருத்தல் மஞ்சள் நிணநீருண்டாயிருத்தல் கண்மணி வீக்கம், பொருமல், கண்மணிசுருங்கிக்காணல், சரீரங் குன்றுதல், நைதல், ஒருபாகங் குன்றுதல், சரீரம் அதிக பருமனாயிருத்தல், ஒருபாகம் அதிக பருமனாயிருத்தல்.

## இளைப்புள்ள உணர்ச்சிகள்

நோய், தவக்கம், சோகம், குளிர்மை, சரீரத்தின் பலபாகங்களிலும் ஊருகிறதுபோ லுண்டாகிற உணர்ச்சி அல்லது திடுக்கிடுதல், காங்கை, இறுகிறுப்பு.

குறிஞ்சா-ஓர் பூண்டு

இதன் வகை

சிறுகுறிஞ்சா, பெருகுறிஞ்சா

இந்தியாவின் தென்தேசத்தாரால் குறுஞ்சாவென்றும், வடநாட்டாரால் அந்தமுள் என்றும் பெயர் வழங்குகிற இந்தமூலிகையின் வேரும் இலையும் வாந்திசெய்யும் குணத்தை யுடையதாயிருக்கின்றது உலர்ந்த யிலையின் 20-முதல் 30 கிறெயின்வரை கொடுத்தால் வாந்தியுண்டாகும் இதன்கூட சுடுதண்ணீர் மிகுதியாய்க் குடித்தால் நன்றாய் வாந்தியாகிறதற்கு உதவியாயிருக்கும் இரத்தக்கடுப்பு, வயிற்றுப்போக்கு இதுகள் சுரத்துடனே ஆரம்பித்திருக்கினும் ஷை மருந்தில் 3 அல்லது 5 கிறெயின் எடுத்து அதினுடன் 20-கிறெயின் விளாம்பிசினும் அரை கிறெயின் அபினும் சேர்த்து சலத்தில் கலக்கிக்கொடுத்து இப்படி தினம் மூன்றுதரம் கொடுக்கவும் சலதோஷத்துக்கும் நெடுநாளாயிருக்கப்பட்ட யிருமலுக்கும் குறிஞ்சாவை விளாம்பிசினுடன் கொடுக்கில் குணமாகும் அன்றியும், கக்கிருமல் ஆரம்பித்தவுடன் கொஞ்ச கொஞ்சமாகவும் கொடுக்கலாம்.

குறிஞ்சி-ஈந்து, செம்முள்ளி, மருதோன்றி.

குறிஞ்சிக்குறிய விருட்சங்கள்

வேங்கை, குறிஞ்சி, சந்தனம், தேக்கு, அகில், அசோகு. காந்தள்.

குறிஞ்சியுணவு மூங்கிலரிசி, ஐவகைநெல், தோரை, கிழங்கு, தினை, தேன்.

குறிஞ்சில்லீடுகும், பாஷாணம்

குறுகுத்தாழை-றுதாளி

குறுக்கு-குறுகுநோய்

குறுக்கம்-சவுரிபாஷாணம்

குறுங்குடியாள்-தாளகம்

குறுந்துழாம்-சிறுதுளசி

குறுங்தெங்காய்-சிறுதேங்காய்

குறுந்தொட்டி-சிறுகாய்ஞ்சொறி

குறுமணல்-இரசமணல்

குறுமுனி-அகத்தியன்

குறும்பி-காதழுக்கு

குறும்பூழ்-காசை

குறுமேலாவு-உடல்கசிவு

குமேருட்டை-காக்காணம், பீச்சிவிளாத்தி.

குறலுறு-குங்கிலியம்

கும்பகம்-நாணல்

குனட்டம்-அதிவிடையம்

குஞசகம்-குன்றி

குன்மம்-ஓர்நோய்

குன்மக்கட்டி - குன்ம சூலை, அஷ்ட குன்மத்தைப் பார்க்க.

குன்றத்துச்சித்தி - தாலம்பப் பாஷாணம்.

குன்றி-ஓர் மருந்துசெடி, குன்றிமணி, மஞ்சிலை.

இதன்வித்து சிகப்பு நிறமும் ஒருபக்கத்தில் கறுத்தபொட்டும் உடையதாயிருக்கிற இந்தப்படர் செடியின் வேர் அதிமதுரத்தின் ருசியையும் மாதிரியையும் உடையதாயிருக்கின்றதால் நாட்டு அதிமதுரமென்றும் பெயரைப் பெற்றது அது மருந்துக்கடுத்த குணமுடையதா யிருக்கின்றது. குழந்தைகளின் இருமலுக்குப் புதிய மதுரமான வேரில் 2-அவுன்ஸ் எடுத்துச் சதைத்து அரைபுட்டி சலத்தில் அரைமணி நேரம்வரை வேகவைத்து வடிகட்டி இதில் 8-அவுன்ஸ் கற்கண்டாவது தேனை

வது சேர்த்து மறுபடியும் அடுப் பில்வைத்து கட்டிப்பாகுப் பருவ மாகிறவரையும் காய்ச்சவும், இதில் தேக்கரண்டிவீதம் சுரங்கூடியிருந்தாலும் இல்லாவிட்டாலும் தினம் பலகாலும் இருமல் வருகின்ற வேளைகளில் கொடுக்கவும் உடன்பறித்த இலையின் சாற்றை சிறு குழந்தைகளின் வாயினுள் வெள்ளை நிறமான புண்களுக்குத் தொட்டு இட்டால் குணமாகும்.

கூ

கூச்சாரம்-சிவசாரம்
கூந்தல்-முதியார்கூந்தல்
கூவிளவேர்-வில்வவேர்
கூமத்தோடு-ஆமையோடு
கூகைநீர்-காட்டெருமைப்பால், கிழங்கு, தண்ணீர்.
கூகை-கோட்டான்
கூழ்ப்பாண்டக்காய்-சாம்பற்பூசணிக்காய்
கூகைநீறு-கூகைக்கிழங்கின் மாவு கூசாகம், கமுகு
கூகைநீறு-அங்குசரோசனம், கூவக்கிழங்கு, அரோரூட்மா

கூகைநீரில் செய்யும் குழம்பு போன்றகஞ்சி அனேக வியாதிகளில் நோயாளிக்கு தேகத்தில் பலமுண்டாவதற்கு உபயோகமாயிருக்கின்றது அதைச் செய்யும் விதமெப்படி யெனில் துப்பரவும் நுண்மையும் வெண்மையுமான கூகைநீறு 1-மேசைக்கரண்டு அல்லது அரை அவுன்சில் கொஞ்சம் சலத்தைவிட்டு நன்றாய் பிசைந்துக்கொண்டு அதின்பின் கால்புட்டி கொதிக்கிற சலத்தைக்கிரமமாய் கொஞ்சங்கொஞ்சம் விட்டு முழுவதும் நன்றாய்க்கலக்கி இரண்டு மூன்று மினிட்டுநேரம் அடுப்பில்வைத்து மறுபடியும் கலக்கி பின்பு இறக்கிவைத்து அதில் கொஞ்சம் பஞ்சதாரையும் வாசனை கொடுக்கும் படியாய் கொஞ்சம் சாதிக்காய் அல்லது கறுவாயின் தூளும் சேர்க்கவும் சலத்துக்குப்பதில் பசுவின்பாலில் செய்கிற பெலனை மிகுதியாய் கொடுக்கும் ஆறுவிது நன்றாய் சீரணமாகாவிட்டால் தண்ணீரோநலம் மேற்காட்டிய பிரமாணம் பிராயமானவர்கள் தினம் இரண்டு மூன்று தரம் சாப்பிடலாம் அதைத் தேவையான பொழுதெல்லாம் உடனுக்குடன் செய்துக்கொள்ளவேணும்.

கூச்சிரம்-கடம்ப
கூஷ்மாண்டம்-கலியாணபூசணி
கூடம்-கோளகபாஷாணம், எள்
கூடம்பில்-சுரை
கூடாரம்-பெருங்காயம்
கூதளம்-கூதாளி, தூதுளை, வெள்ளரி
கூதாளம்-கூதாளி
கூதிர்-பனிக்காற்று, ஐப்பசி, கார்த்திகையின் பருவம்
கூத்தன் குதம்பை மூக்கொற்றிப் பூண்டு, குதம்பை.
கூந்தல்-கமுகோலை, பனையோலை, காட்டுக்கூந்தல், கூந்தலறுகு
கூந்தற்பனை-கமுகு
கூந்தற்பாசி-ஓர்நீர்ப்பூண்டு, நிலக்கூந்தல், ஓர்பூண்டு
கூந்தற்பூகம்-கூந்தற்கமுகு
கூமரை-கோங்கு
கூம்பல்-குமிழ்
கூரணம்-கோடகசாலை
கூரம்-பாகல், கோடகசாலை
கூர்-காரம்
கூர்கேவு-வெண்கடுகு

கூர்ச்சேகம்-தேங்கு
கூர்மன்-ராமன், புளகித்திமைக்கும்வாயு.
கூர்மைக்கரிவாள்-சவுக்காரம்
கூலம்-காராமணி, பாகல்
கூவிரம் }
கூவிளம் } வில்வம்
கூவிளை }

இந்தப்பழம் இங்கிலீஷ் வைத்தியரால் மிச்சமாய்ப் பிரயோகப்பட்டுவருகிறது. தீராத வயிற்றுப்போக்கு இரத்தக்கடுப்பு முதலியவைகளுக்கு சுரமின்றி வியாதிக்காரன் பலவீனமாக யிருக்கும்போது கொடுக்கில் மிகுந்தபலனுடையதாயிருக்கும். அதைக்கொடுக்கும் முறையாவது பழுத்த பழத்தினுள்ளிருக்கும் பிசினில், 2-அவுன்ஸ்எடுத்து 3-4-அவுன்ஸ் சலத்தில் கலக்கிப் பஞ்சதாரை கூட்டி தினமிரண்டுமூன்றுதரங்கொடுக்கவும். வயிற்றுக்கழிச்சலும் மலபந்தமும் மாறி மாறியுண்டாகிறதற்கு மேற்சொன்ன ஒளஷதந் தினந்தோறும் காலமே கொடுத்தால் மலத்தைக் கிரமப்படுத்தும் குழந்தைகளுக்குண்டாகும் தீராதகழிச்சல், கடுப்பு முதலானவையும் டை மருந்தில் பாதிகொடுக்கில் நீங்கும்.

கூவிளம்பத்திரி-ஓர்பத்திரி

திருமந்திரம்

பச்சினங் கூவிளம் பத்தியுண்டிடில், நிச்சயஞ்சொன்னேனெருப்புங்குளிர்ந்திடும், அச்சமுமில்லை யழகாந்திருமேனி, வச்சிரம்போலவே வந்திடும்விந்துமே.

கூவிளை-வில்வம்
கூழம்-எள்ளு
கூழாமணி-கூழ்முன்னை
கூழ்-நறுவிலி
கூழ்முன்னை-ஓர்கீரை
கூழ்வரகு-கேழ்வரகு
கூறல்-நாகபாஷாணம
கூறு-எள்ளு
கூனன்-ஆமை
கூனன்முதுகு-ஆமையோடு

கூகைக்கிழங்கு-இருமல், ஈளை காசம், வெப்பும்போம், மேனி உண்டாம்.

கூகைநீறு-இருமல், கிறுமிவீழ்தல், நரம்பிலுண்டாகுங் கட்டி, பிரமியம், மாதர் குய்யரோகம், மார்புநோய் போம், விரியுமுண்டாம்.

கூத்தங்குதம்பை - குத்துவாதம், ஜன்னி, சுரோணிதகாய்வும் போம. பித்தமுண்டாம்.

கூழைக்கடாக்கறி-சூலை, நாட்பட்ட நீரிழிவுபோம் காப்பான் புண்ணுமுண்டாம்.

கெ

கெசராசி-பூலா
கெசாசைநா-கையாந்தகரை
கெசகன்னி-வெருகு
கெசமாமுட்டி-எட்டி
கெச்சம்-முல்லை
கெண்டைவியாதி-ஓர்நோய்
கெந்தகம்-நாய்வேளை
கெந்தனம்-கோடகசாலை
கெந்திகம்-பாம்புகொல்லி
கெந்திபாம்-ஆடுதின்னாப்பாளை
கெந்திவாருணி-பேய்த்துமட்டி
கெவரி-வெள்ளைக்காக்கணம்
கெவுரா-துளசி
கெவ்வியம்-நாவேளை

கெண்டிவெந்நீர் - வாய்விருலுண்டாகும் கால் கை முதலான குடைச்சல்களும்போம்.

கெண்டை மீன்கறி - அநேகம் நோய், அரோசி, வயிற்றுவலி, வாயுமுண்டாம்.

கெந்ததாளி அச்சரம், கரப்பான் தொண்டைப்புண், மூலச்சூடு போம்.

கெந்தமாஞ்சள்-நீரைக்கட்டும்

கெந்தியுப்பு - உஷ்ணம், உடல் கரைதல் குடல்வாய்வு மந்தமும் போம்.

கெளிற்றுமீன் - கபம், கரப்பான் சுக்கிலம் புண்ணுமுண்டாம்.

## கே

கேக்கிப்பூ - எரிவு காந்தல் நீரடைப்பு மங்கு சொறி தேமல் மேகவூரல் வாதம் வாய்வும்போம் தேகவொளி புளகம் பெண் வசியமுண்டாம்.

கேழ்வரகு-பித்தவாயுவுண்டாம்

கேழ்வரகுகளி - அதிகபலம், வாதமுண்டாம்.

கேழ்வரகுகூழ்-பித்தம் பெருவயறு வாதமும்போம்.

கேளியிளநீர்-அனல் கரப்பான் தாகம் மாந்தம் மேகம் வயிற்றுப் புழுவும்போம்.

கேசதம்-கையாந்தகரை

கேசமுட்டி-வேம்பு

கேசரம்-மகிழமரம்

கேசரிகம்-நாயுருவி

கேசரீகம்-நாயுருவி

கேசியா-தாழை

கேசினி-சங்கங்குப்பி

கேடகம்-புறுமுட்டி

கேதகை-தாழை

கேந்தகம்-கோடகசாலை

கேந்துமுரியம்-நாய்வேளை

கேப்பை-கேழ்வரகு

கேமாக்கி-வெள்ளைக்காக்கணம்

கேலிகம்-அசோகு

கேவலதிரவியம்-மிளகு

கேவலி-வள்ளிக்கொடி

கேவு-வெண்கடுகு

கேனி-தெங்கு

## கை

கையாந்தகரை - காமாலை கைகால்யெரிவு குட்டம் குரல்கம்மல் சிலேட்டுமம் சுரம் சோபை நீரிழிவு தாகம் பல்நோய் பாண்டு பித்தமும் போம்.

கைவரச்சம்பா - அதிக பலம், சுக்கிலமும் உண்டாம்.

கைச்சற்சீருடை-புளிநாரத்தை

கைச்சி-கமுகு

கைதை-தாழை

கைத்தகோடரம்-எட்டி

கைத்தா-தாட்டாமணக்கு

கைப்பு-ஆடுதின்னாப்பாளை

கைபரியம்-இரும்பு

கையாந்தகரை-ஓர் பூண்டு

இதன் வகை

கொடிக்கையாந்தகரை, பொற்றிலைக்கையாந்தகரை.

பொற்றலைக் கையாந்தகரை - ஓர் பூண்டு.

கைரவம் வெள்ளாம்பல், குமுதம் கைரவம்.

கைவிதை-வெந்தையச்செடி

## கொ

கொக்கு-மாரம்

கொக்குமாந்தாரை-காட்டாத்தி

கொக்கேறு-ஓர்பூண்டு, கெட்டி

கொங்கம்-கோளகபாஷாணம்

கொங்கரி-ஏலரிசி

கொங்காரி-குங்குமமரம்

கொங்கு-கருஞ்சுரை, தேன், சருக்கரை.

கொச்சி-சவரிலோத்திரம்,மிளகாய்ச்செடி.

கொச்சிமஞ்சள்-மஞ்சள்
கொச்சிக்குழந்தை-வைப்பரிதார
கொஞ்சி-ஓர்செடி

இதன் வகை

காட்டுக்கொஞ்சி, கடற்கொஞ்சி, கெடாலசல், வெந்தோன்றி.
கொடிக்கழல்-கழற்சி
கொடிக்கால்-வெற்றிலைக்கொடி

கொடிச்சி-காவட்டம்புல். கொடுவேலி.
கொடிநெட்டி-நீர்ச்சுண்டி

கொக்குக்கறி-வயிற்றுக் கிருமி போம், அரோசகம், கரப்பான், புண், மேகமும் உண்டாம், மருந்துண்ணும்போது இதன் கவிச்சாகாது.

கொசுமெழுகு - எந்திரம், வசியங்களுக்குமாகும்.

கொசு வுள்ளான்கறி - தினவு, மேகமும் போம், பசிபோகமும் உண்டாம்.

கொள்ளிப்பால் - கடி, கரப்பான், கிரந்தி, நாவைப்பற்றிய நோய், விஷப்பாகமும்போம் பித்தமும் உண்டாம்.

கொடிமாதளை-சர்த்தி வெப்பும் போம்.

கொடிமுந்திரிப்பழம், அருசி, இரத்த பித்தம், இளைப்பு, உன்மாதம், க்ஷயம், சுரம், சுவாசம், சோமநோய், தாகம், தாபரவிஷம் பித்தம், மதமூர்ச்சை, மூத்திர நோய், மேகம், வயிறு மந்தம், வெப்பும்போம் தேகக்குளிர்ச்சி, கண்ணொளிவு, தாது புஷ்டியும் உண்டாம்.

கொடியாட்டிறைச்சி - இடுப்பு வலி குததல், இருமல், வாதம் வெட்டையும் போம், கறி சமைத்து அதிகாலையில் சாப்பிடவும் கொடி எலுமிச்சங்காய் அரோசகம், அனல் கருச்சல் மயக்கம், வாந்தியும்போம்.

கொடிவசலைக்கீரை-அனல்தாகமும்போம், உரிசை கபம் போம் கம்மல் மிளகலும் உண்டாம்.

கொடிவழிதலங்காய் - வாதம் போம் பித்தம் உண்டாம்.

கொடிவேலிவேர் - அரையாப்புக்கட்டி, இரத்தக்கட்டி, கட்டி, கிரந்தி, மூலம், சுரங்கண், சூலை, நீரேற்றம், பெருவயிறு, வாயுக்கள், விரணம், வீக்கமும்போம்.

கொடுக்காய்புளி-பித்தவழுக்கு, ஊரல்போம்.

கொடுவாய் மீன்-உஷ்ணமந்தம் உண்டாம்.

கொட்டிக்கிழங்கு-அகக்கடுப்பு, அழல், தேமல், மேகமும்போம், குளிர்ச்சி உண்டாம்.

கொட்டிக்காய்-கால்கை யெரிவு மேகம் 21-ம் போம்.

கொட்டைக்காந்தை-கரப்பான் கொப்பப்புழு, சொறி, சிரங்கு, மேகவெட்டையும் போம் மனமிறங்கலுண்டாம்.

கொட்டைப்பாக்கு - கோழை சுரம்,மலம்,மூலக்கிருமியும்போம் சோபை உண்டாம் மருந்துண்டவாய்க்காகும்.

கொட்டைப்பாசி-ஐயம். கக்குவான், கரப்பான், கிரந்தி, சுரம், தேமல், மேகம், வாதமும் போம் தீபனம் உண்டாம்.

கொட்டை முந்திரிப்பழம் - அழல் தாகமும் போம், கரப்பான், சிரங்கு, நெஞ்சு கரகரப்பு, புண்ணும் உண்டாம்.

கொதி வெந்நீர் - அதிசாரம், சோபம் தாகமும், பித்தம், பித்த

மூர்ச்சை வாந்தி வியர்வையும் போம்.

கொத்தவரைக்காய்-கீதம், வாதக்குடைச்சல் வாதமும் போம், பித்தம் உண்டாம் மருந்தை பாழாக்கும் பத்தியத்திற்காகாது.

கொத்தான் கொடி - இளைப்பு, உட்கிரிச்சம் பித்தம் பிரமேகமும் போம் மிகுகுளிர்ச்சியுண்டாம்.

கொத்துமல்லிக் கீரை-அரோசகம் எல்லாவித பித்த சுரமும் போம், போகமுண்டாம்.

கொத்துமல்லி விரை-காய்ச்சல் குளிர், சாத்தி, சிலேட்டுமம், தாகம், தாதுநஷ்டம், பித்தம், மந்தம், வாந்தி, விகாரம், விக்கல், விகாணம், வெப்புமபோம்.

கொப்பிரண்டை - அதிசாரம், பேதியும்போம்.

கொம்பசையும்பசும்பால் - பித்தம்போம், கபம், வாதம், விந்தும் உண்டாம்.

கொம்பாக்கு - இரத்தப் பிரமியம், சுரம், நாட்சென்றசுரம்,பித்தவெட்டை வாதமும்போம்.

கொடிமுந்திரிகைப் பழம் - ஓர் பழம்.

கொடியபீசம்-சீதாங்க பாஷாணம்

கொடியத்தி-நீரத்தி

கொடியாசு-அவரை

கொடிய வீரன் - கோடா சொரி பாஷாணம்.

கொடியோன்-கற்றாழை

கொடிவேலி-ஓர்செடி கொடிவேலி என்னுஞ்சித்திரமூலம்.

தேகத்திலெங்காகிலும் கொப்புளிக்கப்பண்ணுவதற்கு ஆவசிகமாயிருந்து இதற்கு வேறே ஒன்றுங்கிடையாவிட்டால் கீழ்ச்சொல்லியதைப் பிரயோகிக்கவேண்டியது சிவந்த கொடுவேலிவேரைப் பறித்தவுடன் அதன் தோலியை உரித்துக் கொஞ்சங் கஞ்சித்தண்ணீர்விட்டுக் கட்டியாய் அரைத்து ஒரு துண்டுத துணியில் தடவிக் கொப்புள முண்டாக்கவேண்டும். வேண்டிய இடத்தில் வைத்துக் கட்டவேண்டும், 5 நிமிஷ நேரஞ் சென்றபொழுது எரிவும் வலியுமுண்டாக்கி, அது அரைமணி அதிகரித் திருக்கும் இதன்பின் அதை எடுத்துவிட்டால் எரிவும் வலியும் தணிந்து அப்புறம் 12-அல்லது 18-மணிநேரத்தில் பெரிய கொப்பளமுண்டாகும், இதிலுண்டாயிருக்கிற சலத்தைக்குத்தி எடுத்துவிட்டு ஒரு வாழையிலைத் துண்டைவைத்துக் கட்டவேண்டும். புண்சுருக்காய் ஆறிப் போகும். இப்படிக்கொத்த கொப்பளமுண்டாக்கும் ஔஷதங்களை கோரமான இருமலுக்கு நெஞ்சிலும் தலைவலிக்கும் மற்ற நோய்களுக்கும் கழுத்தின் பிடரியிலும் வைத்துக் கட்டினால் நன்று.

கொடுப்பை-பொன்னாங்காணி

கொடுவிஷம்-வெள்ளைப் பாஷாணம், தேள்கொடுக்கி, ஓர்பூண்டு.

கொட்டாவிவிட்டிறுக்கு-நாயுருவி

கொட்டி-ஓர்நீர்ப்பூண்டு

இதன்வகை

கருங்கொட்டி-சின்னி

காரற்கொட்டி-ஓர்பூண்டு

கொட்டிக்கிழங்கு-ஓர்கிழங்கு

தண்ணிற்கொட்டி-ஓர்பூண்டு

கொட்டை-கொட்டைக்கரந்தை

கொட்டைக்கரந்தை-ஓர்பூண்டு

சுகிகம்-புளியாரை
சுசிதம்-பால்
சுச்சு-சுண்டி, சுக்கு
சுடாக்கொடி-ஆர்த்திக்கற்பூரம்
சுகுலை-மீமம், சவுக்காரம்
சுடுதுரத்தம்-சித்திரப்பலாவி
சுடுகாடுமீட்டான்-முடக்கற்றான்
சுணை-சுணைக்கோரை
சுணைவு-மெய்க்கடலை
சுண்டம்-கள்
சுண்டி-தொட்டால்வாடி, சுக்கு, கள், நீர்சுண்டி,
சுண்டிகை-உண்ணுக்கு
சுண்டியுண்டை-கொஞ்சி, சதுரக்கள்ளி, சீரகம்
சுண்டில் - தொட்டால்வாடி, சுண்டி, தொட்டால் சுருங்கி,
சுண்டை-சுண்டைச்செடிகள்
சுண்ணவரிசி-முல்லை
சுண்ணாம்புத்தண்ணீர்

புதிதாய் நீற்றின் அரைத்தால் சுண்ணாம்பில் 6-புட்டித் தண்ணீரைக் கொஞ்சங்கொஞ்சமாய் விட்டுச் சுண்ணாம்பு முழுவதும் அடியில் உரைந்து சலம் தெளியுமட்டும் வைத்திருக்கவேண்டும் அவசரமாய் வேண்டியிருந்தால் அரைமணிநேரம் வைத்திருந்தார் போதும் அநேகவிதங்களில் இந்தஔஷதம்மிகுதியாய்உபயோகப்படுதலால்எப்பொழுதும் முன்னதாகச் செய்து வைத்திருக்க வேண்டும், இதைக் காற்று ஏறுமல்படிக்கு அடைப்புள்ள குப்பிகளில் விட்டு வைத் திருக்கில் கேடில்லாமல் வெகுநாள் இருக்கும் ஔஷதத்துக்குத் தெளிந்த சலமாத்திரம் எடுக்கப்படும்.

குலை யெரிவுக்கும் இரைக்குடலிற் புளிக்கும்புளிப்புத் தேப்பங்கூடிய அசீரணத்துக்கும், வாந்திக்கும் உட்டினத்தா லுண்டாகும் மூத்திரத்துக்கும் இந்த சலத்தில் ஒரு வேளைக்கு ஒன்றரை அல்லது 2-அவுன்சு சமனளவுபாலிற் கொடுக்கலாம். இப்படி தினம் மூன்றுதரம் கொடுக்கவேண்டும், சிலநாள்கொடுத்தபின் வியாதியை மாற்றிக்குணத்தைக் கொடுக்கும். மேற் சொன்ன வியாதிகளுடன் வரும் வயிற்றுப்போக்குக்குமற்ற ஔஷதங்கள் கொடுப்பதுமன்றி மேற்படி சுண்ணாம்புத் தண்ணீர் ஒரு தேக்கரண்டி வீதம் கொஞ்சம் பாலில் தினம் இரண்டுதரம் கொடுக்கவேண்டும்.

இலிங்கம் உபஸ்தம் இவைகளிலுண்டாகும் வருத்தமான எரிவுக்குச் சுண்ணாம்புத் தண்ணீரை வெதுப்பித் தினம் 3 அல்லது 4-தரம் அதைக்கொண்டு நனைக்கில் நீங்கும் உபஸ்தத்தில்நின்றுபுறப்படும் மேகவெள்ளைமுதலானவைகளுக்கு வலியுங்கூட உண்டாயிருக்கில் சுண்ணாம்புத் தண்ணீரையுட்பீச்சினாலும் மற்றெவ்விதமாயாவது உள்ளேற்றினாலும் வியாதிதீர வாசியாகாமற் போனாலும் சாந்தப்படும்.

கண்டமாலைக்கும் முக்கியமாய் விப்புருதிகளும் புண்களும்கூடிய கண்டமாலைக்கும் சுண்ணாம்புத் தண்ணீரில் அரை அவின்சுவீதம் தினம் 3-அல்லது 4-தரம்இப்படி சிலநாள் தொடர்ந்து கொடுக்கில் பலன்படும் நன்னாரி கஷாயத்திற் சேர்த்துக் கொடுக்கின்றது. சில மேகவியாதிற்கு உபயோகப்படும் சலம் மிகுதியாய் வடியும்

கண்டமாலையில் புண்களுக்கும் மற்றும் பலமாதிரி புண்களுக்கும் வெடி சலத்தை விட்டால் குணப் படுத்துகிறதும் தவிர அதிக நீர் வடியப்பட்ட தோலின்மேல்வரும் அநேகவியாதிகளுக்கும்சுண்ணும் புத் தண்ணீர் தனித்தாவது சம னளவு சலத்திற் கலக்கியாவது விட்டால் சவுக்கியப்படும்.

உப்புத்திராவகம் முதலியவை களை நஞ்சாகக் குடித்திட்டால் சுண்ணும்புத்தண்ணீரை யதிகமா கப்பாலிற் சேர்த்துக்கொடுத்தால் மற்ற உப்புகளைப்போல் மிகுந்த காரமற்றது ஆயினும் காரமான மாற்று மருந்தா யிருக்கின்றது பாஷாணத்தை நஞ்சாமத்தின்ற னற்குக்கொடுக்கலாம்.

நீரிழிவுக்கு ஒருவேளைக்கு 2-அவுன்சு சுண்ணும்புத தண்ணீரைப் பாலிற் சேர்த்துத் தினம் இப்படி 3-தரங்கொடுத்தால் அதிகமாய்ப் போகிற மூத்திரத்தைக் குறைக்கும் இராத்திரி படுக்கை சமயத்தில் அரை கிறெயின் அபினும் கொடுக்கலாம்.

தீப்பட்ட புண்களுக்குச் சுண்ணும்புத் தண்ணிவரும் நல்லெண்ணெயும் சமனளவு எடுத்து இரண்டையும் ஒன்றாகச் சேரும்படி நன்றாய்க் கலக்கி இதில் சீலையை நனைத்து இரணங்களில் இட்டு அடிக்கடி நனைக்கிறதுந் தவிர சீலையையும் மாற்றிமாற்றி இடவேண்டும். இப்படி செய்வது நல்ல பிரயோகமாயிருக்கிறது.

சுதம்-நெஞ்சில்

சுதாச்சி } சதுரக்கள்ளி
சுதர்ச்சி }

சத்துரு-கண்டங்கத்திரி

சுபுட்பகொம்பு, பவளமரம்

சுப்பிரமதுவா-கூகைநீறு

சுமங்கை-ஆடுதின்னாப்பாளை, வறட்சுண்டி

சுமலி-கள்

சும்புள்-கடம்பு

சும்மை-ஆவிரை

சுயிரகம் - குசப்புல், தருப்பைப் புல்

சுயோகி } கள்
சுலோகி }

சுரகாமலிகம்-செருந்தி

சுரசம்-அரத்தை. கறுகிழங்கு, பாதரசம்.

சுரசா-துளசி

சுரஞ்சனம்-கமுகு

சுரதாக்கு-அரத்தை

சுரபி-சுதளகொடுக்கி, பிரமி, சாதிக்காய், துளசி, மல்லிகை.

சுரபிபத்திரை-சம்புநாவல்

சுரபி-இளவம்பிசின்

சுரபுன்னை } ஓர்மரம்
சுரபுன்னாகம் }

சுரமதி-சிலந்தி

சுரமலிகம்-செருந்தி

சுரம்-ஓர்நோய், உப்பு

சுராதுருமம்-தேவதாரம்

சுரழ்-இலவம்பிசின்

சுரளிகை-பாலை, பாலைமரம்

சுரா } கள்
சுரை }

சுராகரம்-தென்னை

சுருட்டி-மயிர்ச்சிகைப்பூடு

சுரைக்கந்தகம்-ஓர்கந்தகம்

சுவரொட்டி-ஓர்பூண்டு

சுவர்ச்சாதி-சத்திச்சாரம்

சுவலை-அரசமரம்

சுதன்னியீதி-செப்புமல்லிகை

சுவாசம்-எட்டி, புருமுட்டி, பேரமுட்டி, பேராமுட்டி, விஷமுட்டி, சுவட்டுமண்.

சுவாதுண்டம்-நெருஞ்சில்
சுவாதுகந்தி-துளசி
சுவிகை-கள், கச்சோளம்
சுவேதகம்-சவரிலோந்திரம்
சுவேதகாண்டம்-நெருஞ்சில்
சுவேதகாண்டம்-சீந்தில், வஞ்சிக்கொடி
சுவேதகுசுமம்-வெள்ளெருக்கு
சுவேதசாரம்-நாணற்புல்
சுவேதமூலம்-சாரணை
சுவேதமூலி-கொட்டால்வாடி
சுவேதம்-நாணல், மாவிலிங்கு, வஞ்சிமரம், கள்ளி, வேர்வை
சுழாளை-பொன்னூவிரை
சுளி-முருங்கை
சுளுந்து-கோரகன்
சுள்ளி-அனிச்சை, ஆர்சா, ஞாழல், குங்குமமரம், மயிர்க்கொன்றை, மாமரம்
சுள்ளிடுவான்-மிளகாய்
சுறணம்-கரணை
சுறை-கொற்றான்
சுரோணிதம்-அனிச்சை
சுனக்குடம-சதுரக்கள்ளி
சுனேவு-பேய்க்கடலை
சுன்னைச்சி-சத்திச்சந்திரம்

## சூ

சூக்குமதண்டுலம்-திப்பிலி
சூக்குமபத்திரம் - கொத்தமல்லி, சீரகம், செங்கரப்பு, கடுகு
சூக்குமம்-சீந்தில்
சூக்குமில்-சிலந்திப்பூச்சிக்கூடு
சூக்குளி-வெற்றிலை
சூங்குமம்-வேலிப்பருத்தி
சூசகம்-தருப்பைப்புல்
சூடன்-ஆர்த்திகற்பூரம்
சூடிச்சி-எவட்சாரம்
சூடினர்-கோங்குமரம்
சூதகம்-மா
சூதகபாஷாணம் - இரசத்திலுண்டாகிற பாஷாணம். அது வைப்பு.
சூதமமாமரம்-பாதரசம், இதம் புளிமா, பவளமல்லிகை, மன்மதன்கணை
சூது-ஓரிதழ்த்தாமரை
சூதைதப்பொன்னுக்கி-நாகபாணம்
சூதநோக்கல்-நீலாஞ்சனக்கல்
சூத்திரபுட்பம்-பருத்தி
சூத்துமம்-சிளத்திராயகம்
சூப்பியம்-பாம்புகொல்லி
சூரணம்-கரணைக்கிழங்கு
சூரம்-கடலை
சூரல்-பிரம்பு
சூராஆ-கௌரிபாஷாணம்
சூரி-எருக்கு, நத்தைச்சூரி, புளிச்சக்கீரை
சூரியன்-செவந்தி, செவ்வெருக்கு
சூருமம்-தருப்பைப்புல், குசைப்புல், மாந்தப்புல்
சூரை-சூரைப்பழம், தூதுகளை
சூர்-மிளகுவால், மிளகு, ஓர் நோய்
சூலி-சதுரக்கள்ளி
சூலினி-வெற்றிலை
சூலை-ஓர் நோய்

## அவை

அட்சசூலை, ஆமசூலை, உல்கத்திசூலை, உற்காரசூலை, கர்ப்பசூலை, கற்சூலை, கன்னசூலை, கிருமிசூலை, சுரசூலை, தூரசூலை, நிதம்பசூலை, பக்கசூலை, மூறிதிரிசூலை, மேகசூலை
சூழ்-கடலை
சூழ்தாழை-தாமரை

## சே

செகரிகம்-நாயுருவி
செகனவாதம்-ஓர்நோய்
செக்கவுரி-கற்சூரை
செக்குக்கீரை-செக்கிலேக்கறி
செங்கருங்காலி-சிறுமாரோடம்
செங்கலம்-செந்தாமரை
செங்கழுநீர்-செங்குவளை
செங்களை-குதிரைப்பற் பாஷாணம்
செங்காந்தாள்-ஓர்பூண்டு
செங்கிரந்தி-ஓர்நோய்
செங்கீரை-ஓர்கீரை
செங்குமுதம்-செவ்வாம்மல்
செங்குவளை-செங்கழுநீர்
செங்கொடிவேலி-ஓர்பூண்டு
செங்கோடு-செருந்தி
செத்தச-செந்துளசி, வெட்சி
செஞ்சம்பா-செம்பாளைநெல்
செந்தருப்பை-நச்சுப்புல்
செந்தம்-எழுத்தாணிப்பூண்டு
செந்தாமரை-நச்சுப்புல்
செந்தம்-எழுத்தாணிப்பூண்டு
செந்தாமரை-ஓர் புஷ்பம
செந்தாழை-ஒந்தாழை
செந்திரு-தாளகம்
செந்தினை-கம்பு
செந்து-பெருங்காயம், சடாமாஞ்சில்
செந்துத்தி-ஓர் செடி
செந்தும்பை-ஓர் பூண்டு
செந்தூர்த்தாதி-கெந்தகம்
செந்தொட்டி-சிறுகாய்ஞ்சொறி

சிவப்புதோட்டி

செந்தோன்றி-கார்த்திகைப்பூ
செந்நாடிக்கா-மூக்கிரட்டை
செப்பபுல்-நாணற்புல்
செப்பிடில்-சடாமாஞ்சில்
செப்பிலே-தும்பை
செம்பசளை-சிவப்புப்பசளை
செம்பண்ணை-காவற்பண்ணை
செம்பரத்தை-ஓர்செடி
செம்பிச்சி-செந்தோட்டி
செம்பில்வேலே-சோரபாஷாணம்
செம்பின்பச்சை-நாகப்பச்சை
செம்புக்குள்வேதை-கற்பறி பாஷாணம்
செம்புளிச்சை-செம்பணத்தி
செம்மளத்தி-செம்புளிச்சை
செம்பை-சிற்றகத்தி
செம்மட்டி-மரமஞ்சள்
செம்மரம்-அழிஞ்சில்
செம்மலே-ஆவிரை
செம்மீன்வயிரம்-மீனம்பர்
செம்முருங்கைமரம்-ஓர்முருங்கை மரம்
செம்முள்ளி-ஓர்பூண்டு
செயசேதி-உப்பு
செயநீர்கருத்தன்-நட்சாரம்
செயபாரம்-மரமஞ்சள்
செயபீதம்-கௌரிபாஷாணம்
செயலே-அசோகு
செருக்கம்-மாதளை
செருந்தி-செருந்தி, மணத்தக் காளி, வாட்கோரை
செருப்படி }
சிறுசெருப்படி } ஓர் பூண்டு
செலதம்-கோரைக்கிழங்கு
செமைவம்-கடற்பாசி
செவியம்-இலாமச்சை
செலு-நறுவிலி
செவத்தம்-ஓர் முருங்கைமரம்
செகத்த எருக்கு-ஓர்பூண்டு
செதந்தி-ஓர்பூண்டு
செவப்பம்மான்பச்சரிசி-ஓர் பூண்டு
செவப்பாமணக்கு-செவ்வாமணக்
செவப்புக்கந்தி-ஓர் வைப்புப் பாஷாணம்
செங்களா சுகம், தேகம், பொன் னிறம், புகழ், புத்தியு முண் டாம்.

செங்கத்தாரி பூ தகரப்பான், மேக வெடிசூலையும போம.

செங்கரும்பு-சிவப்புக் கரும்பு, கபம், தாகம், காபித்தமெல்லாம் போம்.

செங்கழு நீர்க்கிழங்கு - காசம், ஸ்திரீகளால் வந்தவழல் திரிதோஷம், பித்தம், மேகமும் போம், கண்குளிர்ச்சி உண்டாம்.

செங்கழுநீர்ப் பூவணிதல்-திரிதோஷங்கள், பலவிதமேகம், வீக்கம், வெட்டையும்போம், சுகம் போகமுமுண்டாம்.

செங்கற்றாழை - சிவப்புக் கற்றாழை தேகக்குளிர்ச்சியுண்டாம், இரும்பு பொன்னும்.

செங்கல்நாரை - பலம், வாதமுமுண்டாம்.

செங்கீரிப்பிள்ளை-தீபனம், பலம் விந்துவுமுண்டாம்.

செங்கீரைத் தண்டு - சிவப்புக் கீரை ஸ்திரீ பெரும்பாடு, பித்த வெப்பும்போம்.

செங்குருவை யரிசி-கரப்பான், சிரங்கு, சொறி, மந்தம், வாய்வுமுண்டாம்.

செங்குளநீர் சிவந்தமண் சலம் உஷ்ணம், தாகம், புத்தியும்போம் மேகம், குழற்சி, திமிர், புண்ணுமுண்டாம்.

செங்குன்றி - சிவப்புக் குண்டு மணிகரப்பான், வாதமும்போம்,

செஞ்சம்பாவரிசி-தீபனம்நல்ல மேனியும்போம்.

செஞ்சோளம்-சிவப்புச் சோளம், கரப்பான், சிறுசிரங்கு, புண் மந்தமுமுண்டாம்.

செண்பகப்பூ-அஸ்திசுரம், அனல், வாதபித்தம், மேகமும்போம் கண் குளிர்ச்சி, தாது போகமுமுண்டாம்.

செந்தாயிலை - அரோசகம், தோஷம் நீர்த்தாரையைப்பற்றிய கொடியசூடு, வாயுக் குத்தலும் போம் தீபனமுண்டாம்.

செந்தாழம்பழம் - சிகப்புத்தாழை பழம், தாகம், தலைவலி, பித்தம் மேகவெட்டை, வாந்தியும் போம், மேனியுண்டாம்.

செந்தாழம்பூ-கபம் காசம் சலதோஷம், தலைநோய் வாதமும் போம்.

செந்திருக் கெண்ணை-அசீரணமநேக வாதகுட்டம், தந்தவாய்வு, மந்தம், மூகஜன்னியும்போம், சரீரகாந்தி தாதுபுஷ்டியு முண்டாம்.

செந்துளசி-சிவந்ததுளசி, எல்லாதோஷங்களும், கடிவிஷம், கபமும்போம்.

செந்தொட்டிவேர்-கபம், கரப்பான், கல்வலி, சுரம், சுவாசம், தாகம்வாயுவும்போம். மாதர் சூதகமுண்டாம்.

செந்நாயுருவி சிவந்த நாயுருவி காமாலை, சூதகம், சோகை பாண்டும் போகாரமும், கைப்புமாக இருக்கும், செப்புநெஞ்சில், சிறுநெருஞ்சில், அனல், கண்டமாலை, கிரந்தி, குஷ்டம் சிறு நீருஷ்ணம் சுக்கிலமேகம், திரிதோஷம் வெப்பம்போம் குளிர்ச்சியுண்டாம்.

செம்பசளை சிவப்புப்பசளை அரோகம் சர்த்தி நீர்க்கடுப்பு நீரடைப்புபோம்.

செம்பரத்தம்பூ செங்கருத்திப் பூ இரத்தப்பித்தம், [illegible]
ளைபிரமி [illegible]
டையும்போ[illegible]

செம்பருத்தி - பித்தகம், மேவழுலும்போம்.

செம்பருத்திபூ-அழலை, இரத்தபித்தம், தாகம், பேதி, வயிற்றுக்கடுப்பு விந்துவை நீற்றும் மேகம், விஷசுசி, வெட்டையும் போம், செம்புக்கலம், தாம்பரக்கலம், இரத்ததோஷம், போம். தேகவாரோக்கியம் விழியொளியும் உண்டாம்.

செம்பையிலை-கட்டிஜந்தி, தினவு துடைவாழை, நீரேற்றம், பிளவை, பீநசங்கள், புண்புரை, மேகம், வாதகமம், விப்புருதி, விரணம், வீக்கம், வெடித்த புண், புரைகளும்போம்.

செம்மறி-ஆட்டிறைச்சி, எப்பிணியும் செங்கரப்பானும் உண்டாம்.

செம்மறிதயிர்-இரத்தக் கடுப்பு கரப்பான், சொறி, வாய்வும் உண்டாம்.

செம்மறி-செய், அம்மம் கண்ணோய், கரப்பான், சொறி சிரங்கு, தினவு, பித்தகம், வாதமும், உண்டாம்.

செம்மறிபால் சிலேட்டுமம்பித்தம் மேல்மூச்சு, வயிறுவிம்மல் வாய்வும் உண்டாம் பத்தியத்திற்காகாது.

செம்மறி வெண்ணெய் ஐயம். கரப்பான், பித்தம், வாதமும், உண்டாம், உருசியாக விருக்கும்,

செம்முள்ளி - சிவந்தமுள்ளி, [illegible] சிலேட்டும் கபம், சிறுவாசு [illegible]ம் மாந்த கணமும்போம் [illegible]த் தெளிவு உண்டா[illegible] [illegible]வதிறப் பசும்பால்-வா

செருக்கு வாது மூலம்போம், கரப்பான், குரல்கம்மல், சித்தந்தெளியாமை. பயித்தியம், பித்தமும் உண்டாம்.

செருப்படி-இசிவு, சிலேர்ப்பனம் சூலை, மந்தம், மேகம், வாதம், வாதகுன்மமும்போம்.

செவ்வகத்தியிலை-சிலேட்டுமம் தாளக வெள்ளை, நவநீத பஸ்பம் பலசிந்தூரம் உண்டாம்.

செவ்வந்தி-சித்தபிர்மைபோம்

செவ்வந்திபூ தலைசுற்றல், மயக்கமும் போம் அனல் கண்ணுக்கொளிதலைமயிர்வளர்ச்சி, மணமும் உண்டாம்.

செவ்வல்லிக்கொடி கரப்பான், குடல்வாதம், குறைநோய், படுவன், மிகுந்த குஷ்டம் மூலமும் போம்.

செவ்வல்லிப்பூ - இரத்தபித்தம் கண்ணோய், நீரிழவு, பலநோய் புண், மேகப்பிணியும்போம்.

செவ்வா மணக்கிலை - குன்மம் தேகவலி, மாந்தம் வாதமும் போம்.

செவ்வியம்-மிளகின்வேர் அருசி, இருமல், ஏளை, கண்ணோய், குரல்கம்மல், ஜந்நி, சூலை, தாவரவின்பம், திமிர் பித்தமூலகரமும், போம்.

செவ்விளநீர் ஆயாசம், சயம், தாகம், பித்தம், வழிநடையிலிளைத்தலும்போம்.

செவப்புக்காய்வேளை-ஓர்பூண்டு

செவப்புக் கொடிபசளை-ஓர்பூண்டு

செவப்புச்சோளம்-செஞ்சோளம்

செவப்புப்பசளை-செம்பசளை

செவப்பு மந்தாரை-செம்மந்தாரை.

செவ்வந்தி-ஓர்பூண்டு

அவையாவன

செண்டிச்செவ்வந்தி அருச்செண்டுச்செவ்வந்தி, துலுக்கச்செவ்வந்தி

செவிரம்-பாசி

செவ்பிம்மான்பச்சரிசி- ஓர்பூண்டு

செவ்வலரி-ஓர்செடி

செவ்வல்நார் } செவ்வாம்பல்
செவ்வல்லி }

செவ்வளி-ஓர்கிழங்கு

செவ்வாம்பல்-செவ்வல்லி

செவ்வாழை-ஓர்வாழை

செவ்வியம்-மிளகு

சே

சே-அழிஞ்சில் சேங்கொட்டை சேகரம்மா

சேகரி-நாயுருவி

சேகிலி-வாழை

சேக்கை-சிவப்புப்பசலை

சேசூரணம்-கௌரிபாஷாணம்

சேங்கொட்டை - ஊரல்மேகம் அடிவிசம், கரப்பான், கட்டி, கயரோகம் கிருகி கிரந்தி குஷ்டம் 18-சூலை சொறி திமூர்மூலம் வாதகுன்மம்போம்.

சேச்சை-பாலைமுல்லை

சேதாம்பல்-செவ்வாம்பல்

சேதாரம்-தேமா, வெட்கி

சேந்து-அசோகு

சேபாலம்-சேங்கொட்டை

சேமரம்-அழிஞ்சில்

சேம்பை-சேம்பு

அவை

கல்லடிச்சேம்பு-நீர்ச்சேம்பு

சேயமயம்-கௌரிபாசானம்

சேயா-கடுக்காய்

சேயிலம்-இலுப்பை

சேயேபசம்-மரமஞ்சள்

சேய்-மூங்கில்

சேரா-கள்

சேராங்கொட்டை - சேரான்கொட்டை

சேரான்கொட்டை - சேங்கொட்டை.

சேர்வை-பிளாஸ்திரி

சேலகம்-சந்தனம்

சேலை-அசோகு

சேவகன்-பெய்வெண்காயம்

சேவகன்பூடு-காந்தள்சிறுபுள்ளடி சிற்றுமுட்டி

சேவகன்பூண்டு-சிற்றுமுட்டி

சேவாலங்கொட்டை - நேர்வாளம்

சேவாலிகம்-கருநொச்சி

சேறு-விளாகள்

சேறுவு-தகரை

சேலகம்-மலையிருவேலிசை

சேவலம்-ஓர்பாசி

சொ

சொக்கலி-மூக்கிலி

சொடக்கு-கடுகு இலுகிலுப்பை

சொண்கி-வேர்க்கொம்பு உலர்ந்த இஞ்சி

சொரங்கம்-கச்சோலம்

சொரத்தோரசி-இலவங்கம்

சொலியன்-முடக்கொற்றான்

சொல்-செந்நெல்

சொறி-காஞ்சொறி

சொற்குறி-சூதபாஷாணம்

சொறணம்-கோடாசுளி

சொர்ணசீரகம்-கரும்பு

சொர்ணமாக்கி-பவள பாஷாணம்

சொனகம்-உத்தாபணி வேல்ப்பருத்தி

சொன்னல்-சோளம், இரும்பு

சோகம்-கடுகுரோகிணி

சோகாரி-கடம்பு

சோங்கம்-அகில், இங்குருப்பல்லி கிச்சிலிக்கிழங்கு

சோனசம்-உள்ளி, வெள்வெண்காயம்
சோணகம்-பெருவாகை
சோணிதம்-மஞ்சள்
சோதிபூணகம்-தீபகற்பூரம்
சோதிமயம்-வாலுளுவை
சோதிமா-சோதிவிருட்சம்
சோதியம்-வாலுளுவை
சோபம்-கள்
சோபாலிகை-அம்பு
சோமவல்லி-சீந்தில்
சோமவல்லரி-பொன்னாங்காணி
சோமவலுக்கம்-தேக்கு
சோமலுப்பு-இந்துப்பு, பச்சைக் கற்பூரம், நீலபாஷாணம்
சோமன்-வெள்ளிமணல்
சோமாக்கியம்-தாமரை
சோம்பலம்-செங்கோட்டை
சோம்ப-நட்சத்திர, சீரகம்
சோரபுட்பம்-பீச்சிவிளாத்தி
சோரி-சிறுசெருப்படி
சோளம்-சோளம், இசங்கு
சோற்றிலை-கற்றாழை

சௌ

சௌகந்தி-கந்தபாஷாணம்
சௌகந்திகம்-வெள்ளாம்பல்
சௌண்டி-திப்பிலி
சௌந்தகம்-கற்கடகபாஷாணம்
சௌபஞ்சனம் - புனம்முருங்கை

க்ஷ

க்ஷயம்-ஓர்நோய்

ஞா

ஞாயிறு திரும்பி-சூரியகாந்தம், பொறுதுவணங்கி
ஞாலம்-ஊமத்தை
ஞாழல்-குங்குமமரம், கோங்கு மரம், பொன்னாவிரை, மயிர்க் கொன்றை, சங்கபுஷ்பம்.
ஞாழல்மாது-ஊமத்தை
ஞாழி-வள்ளைக்கொடி
ஞாளி-கள்
ஞாளிகள்-வள்ளைக்கொடி

ஞெ

ஞெகிழி-கொடுவேலி
ஞெண்டுகா-பெருவாகை

ஞே

ஞேயா-பெருமருந்து

ட

டங்கணம்-வெண்காரம்

டோ

டோழா-இலுப்பை

த

தகட்டுத்தாளகம்-ஓர்பாஷாணம்
தகரம்-ஈயம்
தகரு-புன்முருக்கு
தகரை-ஒருபூண்டு

அவை

கருந்தகரை, காட்டுத்தகரை, வெண்தகரை, தகாபலாசு

தகல், தகன் } திராய்
தகிலமா, தகுவிமா } செங்கொட்டை

தக்காரி-வாதமடக்கி
தக்காளி-நல்லதக்காளி, பசுவின் தக்காளி.

அவை

எருமைத் தக்காளி, குடித்தக்காளி, மணத்தக்காளி, மணித்தக்காளி

தக்கோலம்-வால்மிளகு
தங்கைச்சி-குவளை
தங்கையைக்கொல்லி,சிறியாநங்
தட்டான்-கோட்டம்புடோல்
தட்டான்-கொட்டோசைபுடோ
தட்டி-கோட்டம்

தட்டிலம்-சதகுப்பை
தட்டை-மூங்கில்
தணக்கு-நுணா
தணலம்-எருக்கு
தணவம்-அரசமரம்
தண்டு-மூங்கில்
தண்டுலியம்-சிறுகீரை
தண்ணீர்விட்டான்-ஓர்செடி
ததபத்திரி-வாழை
தந்தக்காரி-வாதமடக்கி
தந்தபத்திரம்-மல்லிகை
தந்தசடம்-எலுமிச்சை, விளா
தந்தயாவனம்-கருங்காலி
தந்தி-நேர்வாளம்
தந்திரகம்-சிந்தில்
தந்துகம்-கடுகு
தந்துசாரம்-கமுகு
தந்துபம்-கடுகு
தந்துவிக்கிரியை-வாழை
தபனன்-கொடுவேலி
தமரகவொலி } கிலுகிலுப்பை
தமரோசை
தமனகம்-மருக்கொழுந்து
தமனி-வன்னிமரம்
தமனியம்-பொன்
தமராக்கவம்-பீர்க்கு
தமாலம்-பச்சிலைமரம்
தமிச-வேங்கை
தமியம்-கள்
தம்பலை-நிலவிந்தை
தயிலபீதம்-அத்திப்பிசின்
தரம்-அரக்கு
தராளம்-பித்து
தாரகதம்பம்-கடம் கடம்பு
தராசு-வெள்ளெருக்கு
தராசுக்கொடி - பெருமருந்து மூலிகை.
தரா-கச்சந்திராய்
தருணம்-ஆமணக்கு, பெருஞ்சீரகம்.
தருணி-கற்றாழை

தருத்தமனி-மரமஞ்சள்
தருமராஜன்-பாலைமரம்
தருமவிராசன்-பனை
தருடம்-தாமரைப்புட்பம்
தலத்தாது-நிலப்பனை
தலைசுறுளி } பெருமருந்து
தலைசுடுவல்லி
தலைத்தாது-நிலைப்பனை
தலைநிம்சம்-சிவனார்வேம்பு
தலைநோய்-ஓர்நோய்
தலைபோடம்-பொடுதலை
தலைவிரிச்சான்-சாறணை, செருப்படி.
தவளம்-வெண்மிளகு
தவளோற்பலம்-வெள்ளாம்பல்
தவனகம்-மருக்கொழுந்து
தவிட்டுச்செடி-மலைக்கொய்யா
தவுசயம்-முருக்கு
தவுசெலம்-முருங்கை
தழல்-கொடுவேலி
தழை-இலை
தளப்பம் } ஓர்மரம்
தளப்பமரம்
தளப்பத்துமரம்-கூந்தற்பனை
தவளம்-முலைக்கொடி
தளவு-முல்லை
தளுதாழை-வாதமடக்கி
தற்பதி-கமுகு
தற்பலம்-வெள்ளாம்பல்
தனவனு-ஆச்சாமரம்
தனவை } சிறுகாஞ்சொறி
தனவையாதம்
தனிகம் } கொத்துமல்லி
தனிசா
தனியா
தனிவலிப்பெருமாள் } குப்பைமேனி
தனிவள்
தனுத்திருமம்-மூங்கில்
தனுவிருக்கம் } ஆச்சா
தனுவிருட்சம்

தன்யராசா-பாலைமரம்
தன்மலோசிதம்-செஞ்சந்தனம்
தன்மன்-திப்பிலிமூலம்
தன்யைவாதம்-சிறிகாய்ஞ்சொறி
தன்னினி-வேங்கை

தா

தாகமடக்கி-புளியாரை
தாசி-மருதோன்றி
தாச்சி-சோளைப்புல்
தாடகம்-நீர்முள்ளிவிழி
தாடிமஞ்சம்-சற்திக்கொகி
தாடிமம்-தாதுமாதளை, சிற்றேலம்.
தாட்கம்-கொடிமுந்திரிகை
தாத்தி-ஆத்தி
தாது இரசம்-இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்புதோல் விக்கல் தாதுமாதளை, பூமாதளை.
தாதை-பேய்க்கொம்மட்டி
தாத்தாரி-நெல்லி, ஆடுதின்னைப் பாளை.
தாபமாறி-தான்றி
தாம்பிஞ்சம் - ஆமணக்கு, பச்சிலை மரம்.
தாமர்-கொன்றை
தாமரசம்-தாமரை
தாமரை-ஓர்புட்பம்

அவை

ஆகாசத்தாமரை - கற்றாமரை, செந்தாமரை.
தாமரைச்சத்துரு-ஓர் பாஷாணம்
தாமரைமணி - தாமரைக்கொட்டை.
தாமரையால்-ஓர் மஞ்சள் பாஷாணம்.
தாமலகி-கீழ்க்காய்நெல்லி
தாமளை-புன்னை
தாம்புலோவல்லி-மஞ்சாடி
தாம்பூரவல்லம்-வாழை
தாம்பூரவல்லம்-வாழை
தாம்பூலவல்லி-வெற்றிலை
தாம்பூவி-வெற்றிலைக்கொடி
தாயைக்கொன்றான் - புல்லாஞ் வாழை.
தாரம்-சிற்றரத்தை, தேவதாரம், நாரத்தை.
தாருகதலி-காட்டுவாழை
தாருசம்-செம்புளிச்சை
தாழிணி-நத்தைச்சூரி
தாலபத்திரி-மரமஞ்சள்
தாலபோதம்-ஆவிரை
தாலமூலி-நிலப்பனை
தாலம்-கூந்தற்பனை, பனை
தாலம்-பாஷாணம், ஓர்பாஷாணம்
தாலி-கீழ்க்காய்நெல்லி [ம்
தாலியம்-பாதிரி

தாம்பூலத்தில்-காய்ச்சுக்கட்டி, சுக்கு, இலவங்கம் இவைகள் சேருதல், காய்ச்சுக்கட்டிநீரால் பல் பூச்சுகள் சாகும் சுக்கு இலவங்கமும் சேர்த்தால் இன்பமும் தேகபிணியும் போம்.

தாம்பூலந் தின்னும் காலபேதம்-காலையில் பாக்கை அதிகப்படுத்த மலபாதை யுண்டாம் உச்சியில் சுண்ணத்தை அதிகப்படுத்த பசி யுண்டாம், மாலையில் வெற்றிலையை அதிகப்படுத்த வாயில் மணமுண்டாம்.

தாம்பூலமாகாத வியாதியாளர்-அதிசுரம், இரத்தபித்தம், எரிகுன்மம், க்ஷயம், சுவாசம், நேத்திரரோதம் பாண்டு, மூர்ச்சை, விஷக்கடி இவ் வியாதியாளர்க்கு தாம்பூலமாகாது

தாம்பூலரசம் - அருசி, உதரதோஷம், சுவாசகாசம், மந்தவாய்வு, பீநசமும்போய், உடற்குக்

காந்தியும், கண்ணிற்கு நலமும் புத்திக்கு உணர்வும் உண்டாம்.

தாம்பூலரசம் விழுங்கும் வகை தாம்பூலம்போட்டவுடன் வாயிற் சுரக்கும முதல் நீர் நஞ்சாம் இரண்டாவது நீர் பித்தம், மூன்றாவது நீர் அமிர்தம், நான்காவதுநீர் மதுரம், ஐந்தாவது ஆறுவது நீர் பாண்டு பித்தம், மந்தமும் உண்டாம்.

தாராக்கறி-அரோசகம், கபம், கரப்பான், தாதுடன் மருந்து முறிவு வாந்தியும் உண்டாம்.

தாராமுட்டை-அதிகபலமுண்டாம்.

தாழமூலச்சாறு - மேகமும், விஷமும போம்.

தாழம்பால் - தலை சுழற்றல், நீராமை, நீரிழவு, பாண்டு, பித்தம், வாந்தியும் போம்.

தாளகம்-அழுகண், கபம், கபாலப்புண், குஷ்டம், குளிர் காய்ச்சல், நாக்குப்புண், பறங்கிப்புண், மண்டைநோயும் போம்.

தாளிக்குவளை - இருமல், ஈளையும் போம்.

தாளிசபத்திரி - அஸ்திசுரம், அருசி, கழுத்துப் பிணிகள், காசம், சர்த்தி, சிலேட்டுமம், சுவாசம், நாசிநோய்கள், மந்தம், மேகம், மேலிரைப்பு வாய்வும் போம்.

தாளிப்பனை-நீரிழிவு போம்

தான்றிக்காய்-அனல், ஆண்குறிப்புண், இரத்தபித்தம், சிலந்திவிஷம், சிழ்மேகம், சுவாசம், பித்தம், மேகம், வாதம், வாய்வு, வெப்பும்போம். தேகவலகு ஒளி உண்டாம்.

தாலுகண்ணி-வெள்ளைகாக்கணம்
தாவணி-கண்டங்கத்திரி
தாழைதாரை-தாழஞ்செடி

அவை

கற்றாழை, ஆனைக் கற்றாழை, செந்தாழை, வெண்டாழை, பேய்கத்தாழை, கழுதாழை.

கழுதாழை இலைச்சாறு கொஞ்சங் கசப்பாயிருக்கிறது. இதை சுதேச வைத்தியர் நோய் பேதிக்கிற மருந்தாக யோசிக்கிறார்கள். அவர்கள் இதை இரணவாதரோகங்களுக்கும், சந்துவாத ரோகங்களுக்கும், சந்துவாத ரோகங்களுக்கும் உபயோகப் படுத்துகிறார்கள்.

தாளகம்-அரிதாரம்

இருதாளகம், இலாமிச்சுகாட்டு தாளகம், தகட்டாரிதாரம், தாளிதாளி-பனை

அவை

நேரளைதாளி, நாகதாளி, பெருந்தாளி.

தாளிசபத்திரி-ஓர் மருந்து

இது ஒரு வாசனையுள்ள பூண்டின இலைகளாகவும் துளிர்களாகவும் இருக்கின்றது. ரூபார்ப்பினுடைய உருசி உண்டாயிருக்கின்றது. ஆனால், அதின் கசப்பில்லை. இது சீரணமருந்தாகவும் துவர்ப்புடையதாகவும் இருக்கின்றது. வயிற்றுளைவுக்கும், சயரோகத்திற்கும் உபயோகப் படுகின்றது.

தாளினி-சிவதை, நிலரைசை
தாருகண்ணி-வெள்ளைகாக்கணம்
தானியம்-கொத்தமல்லி
தான்றிமரம்-ஓர்மரம்

தி

திகசம்-அசமதாகம்
திகனு-கொடுவேலி
திகிரி-மூங்கில்
திக்கு-கொடுவேலி
திக்குறு-புன்முறுங்கை
திகசம்-அசமதாகம்
திசைநா-கொடுவேலி
திசைபிலம்-மருக்காரை
திடமை-வெள்ளெருக்கு
திடற்சுண்டி-வறட்சுண்டி
திட்டணம்-இலுப்பை
திட்டி-தினை
திட்டை-வெள்ளெருகு
திண்டகம்-கிலுகிலுப்பை
திண்டி-அரசு, பசலை
திகளம்-மாமரம்
திசனி-தேமல்
திக்தகம் } மலைவேம்பு, நில
திக்தம் } வேம்பு கசப்ப.
திக்தா-பீதரோகனி, வட்டத் திருப்பி.
திக்திகம்-பேய்ப்புடோல்
திக்திசாகம்-மாவிலக்கு
திக்திரம்-அரத்தை
திக்திருச்சி-நாணல்
திக்திரு-நாணல்
திந்திடம-புளி
திந்திருணி-புளியமரம்
திபதிசம் } வாலுளுவை
திபதிச்சம் }
திப்பியம்-ஓர்மரம், அசமதாகம்
திப்பிலி-ஓர்பூண்டு

அவை

கண்டதிப்பிலி, யானைத் திப்பிலி, திப்பிலிக்கட்டை, திப்பிலி மூலம் திப்பிலியரிசி.

திப்பிலி மிளகு வகையில் சேர்ந்தது இந்துஸ்தானி தேசத்தில் அதிகமாய் விளைகின்றது. சிலோன் இராச்சியத்திலிருந்தும் இவ்விடத்திற்கு வருகின்றது. வைத்தியர் இதன் குடிநீரில் கொஞ்சந் தேன் கலந்து மார்வலி நோய்களுக்குப் பரிகாரமாய்க் கொடுக்கிறார்கள்.

திமிசு-வேங்கை
திமில்-வேங்கை
தியசம்-மரமஞ்சள்
தியந்தி-திநாய்
தியாமம்-இருவேலி, முயற்புல்
தியேசயே-மரமஞ்சள்
திராமூலம்-முடக்கொற்றான்
திரகம்-கொன்றை
திரகூரமம்-செம்பிளிர்ச்சை
திரக்கத்தாரு-கிலப்பனை
திரக்கம்-கொன்றை
திரக்கிரணி-பிரண்டை
திரங்கம் } மிளகு
திரங்கலம் }
திரக்கல்
திரணராசன், நிலப்பனை
திரணபதி-வாழை
திரணி-ஓர்செடி
திரந்திகம்-திப்பிலிமூலம்
திரப்பசம்-கத்தரி
திரம்-தகரை
திரவடி-ஏலம்
திரல்-காட்டாமணக்கு
திரவந்தி-காட்டாமணக்கு
திரளாரம்-நிலம்பனை
திரள்கோரை-கஞ்சாங்கோரை

திராட்சம் - ஓர் பழம், கொடி முந்திரிகை.

திராமரம்-பவளமல்லிகை
தியாகபந்தி-கம்பந்திரா
திராய்-ஓர் கசப்புக்கீரை

இதை சுதேச வைத்தியர் மிகவும் மதிக்கிறார்கள் இது ஜீரண மருந்தாகவும் சுகபேதி மருந்தாக

வும் மாமிசம் அழுகாமற் பரிகரிக்கும் மருந்தாகவும் யோசிக்கிறார்கள் காது நோய்க்குப் பரிகார மருந்தா யிருக்கிறது பிரசவித்த ஸ்திரீக்கு அழுக்கு தாராளமாய் வீழாவிடில் குடிநீராகக் கொடுக்கப்படுகிறது.

திராவடி-ஏலம்
திரிகண்டகம்-நெருஞ்சில்
திரிகாதோசிதம்-தருப்பைப்புல்
திரிசை-கொடிமுந்திரிகை
திரிபுடியலம்-ஆமணக்கு
திரிபுரமெரித்தான் - நொச்சி, மாவிலங்கை

திரிபுரி-சாறணை
திரிலோகி-விட்டுணுகாந்தை
திருகம்-சாதிக்காய்
திருகுகள்ளி-ஓர்கள்ளி

இதின் பால்பெலமான பேதி மருந்தாகவும் இளக்குகிற மருந்தாகவு மிருக்கின்றது வெகுசொற்ப அளவு பணம் வெல்லத்தில் வைத்து உட்கொள்ளப் படுகின்றது. தனிப்பாலாய் வைத்தால் சொப்புளங் கொள்ளச் செய்யு மருந்தாக விருக்கின்றது. ஆனால் விளக்கெண்ணெயோடு சேர்த்தால் திமிர்வாதம் நடுக்கம் வாதம் சோர்வாதம் விறைப்பு நாட்பட்ட வாதம் இவைகட்கு உபயோகமுள்ள மதிப்பு தைலமாகின்றது.

திருசோமம்-வெண்டாமரை
திருடகாண்டம், திருடக்கிரந்தி } மூங்கில்
திருடமூலம், திருடமும் } தேங்காய்
திருடன்-விஷ்ணுகாந்தை
திருடி-கள்ளி

திருணகேது-மூங்கில்
திருணசாரை-வாழை
திருணசூனியம்-தாழை
திருணராசன்-பனை
திருநீற்றுப்பச்சை-விதை ஓர்விந்தை

இது மிகவும் வாசனை யுள்ள செடியின் விதையாக விருக்கின்றது குளிர்ச்சியைத்தருகிற சளித்தன்மையுடைய சுபாவ முடையதாயிருக்கிறது. இதன் குடிநீர் மேகவெள்ளை நீர்க்கடுப்பு கல்லடைப்பு வியாதிகளுக்கு விலைபெற்ற பரிகாரமா யிருக்கின்றது. இலையின் சாறு காது நோய்க்கு காதில் பிழிந்து விடப்படுகின்றது. சுதேசஸ்திரீகளுக்குபிரசவகாடுகள் நீங்குதற்கு கொடுக்கப்படுகின்றது.

திருமரம்-அரசு
திருமலர்-தாமரை
திருமானுந்தி-தாமரை
திருமால்கொப்பூழ்-தாமரை
திருமணியழகி-குப்பைமேனி
திருகட்டி-கள்ளி
திருவாத்தி-ஆத்தி
திருவிளம்சிவதை-திராய்
திரேசந்தி-திராய்
திரேந்தி-திராய்
திரையல்-வெற்றிலை
திலகம்-சிந்தூரம், மஞ்சாடி, பஞ்சாட்டி

திலபருணி, திலபருணிகை } சந்தனம்
[illegible]

[illegible]-வெண்டாமரை
திவிதிராட்சம்-கொடி முந்திரிகை

திரிகண்டம்-நெருஞ்சில்
திறிதியம்-செவ்வள்ளி
திறிதேகி-பற்பாடம்
திறிலிங்கம்-தான்றி
திறிபாதி-சிறுபுள்ளடி
திறியம்-செவ்வள்ளி
திரிலேகறி-விஷ்ணுகரந்தை
திறிவாசம்-கக்கரி
திறிலச்சதா-மூக்கிரட்டை

திப்பிலி - அரோசகம், ஆசன நோய், இருமல், இரைப்பு, ஈளை ஊதைகயப்பிணி, காது நோய், குளிர், குன்மம், சகல தோஷம், சந்நியாசம், சிரப்பணி, சுரம், தொண்டை நோய், நாசி நோய், பாண்டு, பித்தபீலிகம், புழுபொருமல், மகோதரம் மலப்பெருக்கு மூத்தோஷம், மூர்ச்சைபிடக்கம் விழிநோயும் தாதுவிர்த்தி உண்டாம்.

திப்பிலிமூலம் இருமல், குரல் கம்மல், சுரம், சோகம், தாகக் கடுப்பு, பித்தம், மேகமும் போம்.

திப்பிலியரிசி-உம்பிசம், கபம், சிலேட்டுமம், மேகம், வாதசுரமும்போம், தாதுவிர்த்தி, உண்டாம்.

திரிகடுகு, அபஸ்யாரம், அருசி, அர்ப்புதப்புண், ஆசியநோய் இருமல், யீளை, எலும்பைப் பற்றியநோய்கள், தன்னப்பிணி சந்நியாசம், சர்க்கராற் புதம், பித்தம் தலைநோய், தேள் விஷயம், நாக்குநோய், பாண்டு புழு மூலமும் போம்.

திரிகாதிகம் - அஸ்திசுரம், அரோசகம், தேமலும்போம்.

திரிபலம்-ஆசனப்புண், இரைப்பு, குஷ்டம், குத்திருமல், குன்மம், சர்வவிஷம், நாம்பி லுண்டாகுங்கட்டி, நாசிநோய், பாண்டு பிரமியம்புண், பீலிகம், புண் மதர் மூர்ச்சை வயிற்றுவலி வெண்குஷ்டம் போம்.

திருவாத்தி-அதிசாரம், சேற்றுமமும்போம்.

திருவிருத்திக்கடுக்காய்-விரணம்போம் பஞ்சவர்ன கொடிபோன்ற, மூன்றுவரம்பாக விருக்கும்.

திருகு கள்ளிப்பால்-கரப்பான் கிரந்தி, குருமி, குட்டம்சீதம், பக்கநோய், வாதமுடக்கும் போம்.

திரிக்கைமீன் - சோபம், பித்தமும்போம் தாதுவாத மூண்டாம் திருநாமப்பாலைபித்தம்போம்.

திருநீற்றுப்பச்சை-சிலேட்டுமசர்த்தி, சுறத்தால்பிறக்கின்றாத் தவார்த்தி சுரம் அருசியும் போம். திருவட்டப் பிசின் நாற்ற நீர் போம்.

தில்லைப்பால்-குஷ்டம், ஜன்னி சூலை பாரிசவாதம், 18 விஷமும் போம்

தில்லைவித்து கபம் - குஷ்டம் சிறுவிஷம், திமிர்வாய்வு பெரு விஷமும்போம்.

தினப்புணர்ச்சி-அநேக நோய்களுண்டாம்.

தினை அரிசி-ஐயம், சன்னி, சுரம் வாதம் வீக்கமும்போம், பசிபித்தமுமுண்டாம்.

தினைக்கஞ்சி - சோமை, தோஷமும்போம்.

தினைசாதம்-வாசம்போம் பித்தம் சோபமுமுண்டாம்.

தினைமா-கபவாதம்போம்.

## தீ

தீபதைலி-ஆமணக்கு
தீப்பியம்-அசதமாகம்

தீப்பிரகாசி-குங்கிலியம்
தீயுபுட்பம்-சண்பகப்பூ
தீயளி-காசா
தீயாக்கீரை-பொன்னாங்காணி
தீர்க்கதாரு-நிலப்பனை
தீர்க்கபாதபம்-தென்னை
தீர்க்கமூலம்-முடக்கொற்றான்
தீர்க்கலோகிதம் - சிலிந்திதருப்
தீர்க்கவிருக்ஷம்-பெருமரம் [பை
தீவிதிராட்சம் - கொடிமுந்திரிகை
தீவிளங்கும்-வைரம், மீனம்பர்

தீகாய்தல் - சீதம், வாதமும் போம், இரத்தக்கொதிப்பு, இரத்தபித்தம்,உட்டிணம் தாகமுமுண்டாம்.

தீப்பாலைமரம்-இரத்தம், ஜன்னி, சாத்தி, சலக்கோவை, சூதகம், நேத்திரநோய், பீநசம், மூத்தோஷம், மேகவெட்டை, விஷபாகரோகமும்போம்.

தீப்பிரண்டைஐயம் இரைப்பு-சீதக்கட்டு, வசியமாம், வாதம் விக்கலும்போம்.

து

துதுகிர்தாளி-பவளமல்லிகை
துகிலின்பீசம்-பரித்திவிதை
துசகம்-கொம்மட்டிமாதளை, மாதளை.
துசம்-குங்கிலியம்
துச்சத்தாரு-ஆமணக்கு
துச்சம்-கொம்மட்டி
துடக்கறுப்பான் - துடக்கொற்றூ
துடி- அகில, இசங்கு ஏலம்
துடிகம்-தும்பை
துடியாஞ்சி-இசங்கு
துடை-அரசு, விஷமூங்கில்
துட்ட-தொடரி
துட்பிரதருசணி-சேம்பு
துணவு-தனக்கு
துதியம்-சமரிலோத்திரம்

துத்தம் நாணற்புல், நாய்ப்பாகல், நீர்முள், பாகல், நான்முகப்புல் கண்மருந்து.

அவை

பாற்றுத்தம் மடற்றுத்தம், மயிற்றுத்தம், துரிசி.

துரிசி

துத்தமணு-முயற்புல்
துத்தி-தேமம், ஓர்பூண்டு

அவை

எலிச்செவித்தி ஐயிதல்துத்தி, ஒட்டுத்துத்தி, கண்டுத்துத்தி, காடுதுத்தி, கொடித்துத்தி, சிறுதுத்தி, செடிதுத்தி, நாமதுத்தி, நிலதுத்தி, நிலதுத்திமணி, ராத்துத்தி, பெருந்துத்தி, இரணாந்துத்தி, வயிற்றுத்துத்தி, துத்தியிலை.

இது இளக்குகிற அல்லது மிருதுவாசிக்கிறபற்று ஒற்று வெய்துகாட்டுகை இவைகள் செய்யவேண்டிய சங்கதிகளில் இதன் இலைக்கஷாயம் ஐரோப்பிய தேசத்தாராலுபயோகப் படுத்துகிறார் இதை இடித்துப் பிழிந்தரசம் மேகவெள்ளைக் குளிர்ச்சி மருந்தாகக் கொடுக்கப் படுகின்றது. இதன் வேர் குடிநீர் சுரங்களில் கொடுக்கப்படுகின்றது.

துப்பிரசம்-சுருஞ்சொண்டி
துப்பு-அரக்கு
துப்பகர் - தும்பை, தும்பமரம், அத்தி
தும்பகர்-தும்பை
துமம்ராஷ்டகம்-பேராத்தை
தும்பரம்-அத்தி
தும்பலை-சுரை
தும்பி-கொற்றான்சுரை
தும்பிகரும்பு-நெருஞ்சில்

தும்பை-தும்பை, வெற்றிலை ஓர் பூண்டு.

அவை

கறிந்தும்பை, கவிழ்தும்பை, கழுதைத்தும்பை, பேய்த்தும்பை, தும்மிட்டி, சிறுதும்மிட்டி, பேரீந்து.

தூகதமூலம்-நீர்முள்ளி
தூங்கப்பிரியம்-கோதுமை
தூமி-தூதளை, தொடரி
தூர-ரோகம்பனை
தூாலபம்-சிறுகாய்ஞ்சொறி
தூரிஞ்சுல்-உசில்
தூரிசி-ஓர்மருந்து

இது ஔஷதத்துக்குத் தெரிந்தெடுக்கப்பட்ட தூரிசு துப்புரவான இருண்ட நீல நிறமுள்ளதாயும் பருந்துண்டுகளாயும் இருக்கவேண்டும். அவற்றின் மேல் வெண்பச்சை அல்லது வெண்ணிறமான தூள்பற்றியிருக்கில் உள்ளுக்குக் கொடுக்குமுன் நன்றாய் துடைத்துக் கொள்ளவேண்டும். இது அனேக கடைகளில் நற்சரக்காக அகப்படும்.

சுரமின்றி அனேக நாளாயிருக்கப்பட்ட வயிற்றுப் போக்குக்கும் வயிற்றுக்கடுப்புக்கும்6-கிறெயின் தூரிசு நேர்மையாய்ப்பொடித்து 6-கிறெயனபினுடன் நன்றாய்ச்சேர்த்தரைத்து 12-மாத்திரையாகப் பங்கிட்டு நாளொன்றுக்கு மூன்றுதரமாக ஒவ்வொரு மாத்திரைவீதங் கொடுக்கவேண்டும். வயிற்றுக் கடுப்புள்ளவர்களுடைய வயிற்றின்மேல் பிளானில் அல்லது கம்பிளியைச் சுற்றிக்கட்டியிருக்கவேண்டும் வெளிறி பெலவீனமாய் நெடுநாளாய்ச் சுகமில்லாமலிருக்குங் குழந்தைகளின் தீராத வயிற்றுக் கழிச்சலுக்கு 1-கிறெயின் தூரிசை நன்றாய்ப் பொடித்து 12-சரிபங்கு செய்து இதிலொருபங்கை 3-கிறெயின் கறுவாயின் தூளுடன்தேன் அல்லது பஞ்சதாரையில் தினம் 3-தரங் கொடுக்க வேண்டும் மேற்சொல்லிய வியாதிகளை யுடையவர்கள் பிராய மானவர்களாவது, குழந்தைகளாவது சிலநாள் இந்த ஔஷதம் தின்றதில் சவுக்கிய மடையாவிட்டால் அதை நிறுத்திவிடவேண்டும். ஏனெனில், அதை நெடுநாள் தொடர்ந்து தின்னுமளவில் வாந்தியும் குன்மவாய்வு முண்டாகும்.

குளிர்சுரங்கள், முறைசுரங்கள் இவைகளுக்குமுன் கொடுத்ததில் சவுக்கியப் படாமலிருக்கில் தூரிசைக் கீழ்ச் சொல்லியபடி கொடுக்கலாம். நேர்மையாய்ப் பொடித்த தூரிசித்தூள் 48-கிறெயின் அபின் 6-கிறெயின் இவைகளைத் தேன்விட்டு நன்றாயிடித்து 12-மாத்திரையாகப் பங்கிடவேண்டும். இதில் முதலாவது ஒரு வேளைக்கொருமாத்திரை வீதம் தினம் மூன்றுநேரங் கொடுத்து இதில் பலன்காணாவிட்டால் தினம் நாலைந்து தரமாவது கொடுக்கலாம் மேற்சொன்ன பிரயோகம் பிராயமானவர்களுக்கே கொடுக்கத்தகும். ஆதலால் குழந்தைகளுக்குக் கொடுக்கக்கூடாது அதுவும் மற்ற மருந்துகள் கொடுத்துப் பார்த்தபின் தான் கொடுக்கலாம்.

நெடுநாள்பட்ட புண்களில் விளிம்பைச்சுற்றி தூரிசை மெதுவாய்த் தடவிவந்தால் சுறுக்காய்வா

சியாகும் இனியொரு முறையாவது 3-கிறெயின் தூரிசை 1-அவுன்சு தண்ணீரில் கலக்கி தினம் இரண்டுதரம் புண்களில் விட்டுப் பின்பு மூன்று அல்லது 4-நாளைக் கொருதரம் தூரிசின் எட்டையை ஒவ்வொரு கிறையின் வீதம் வியாதிக்காரரின் உணர்வுபோல் அதிக நோவும் சூடு இல்லாமல் சிற்றெரிவும் உட்டணமு மாத்திரம் கொடுக்கும்படியாய் 10-கிறெயினுருமட்டும் நீரை அதிகரித்துக் கொள்ளவேண்டும் அதில் அதிக எரிவுண்டானால் தூரிசின் காரம் குறையும்படி சற்றதிகமாய்ச் சலத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டும் மேற்படி சலத்தைக் காலமேயும் சாயந்திரமும் புண்களில் விட்டு இடைவேளைகளில் அரிசிப் போல்ட்டீசைக் கட்டவேண்டும். துன்மாமிசத்துக்கு அதின் மேல் தூரிசை மூன்று அல்லது நாலு தினத்துக்கு ஒருதரம் தடவ வேண்டும், பிராயமானவர்களுக்காவது, குழந்தைகளுக்காவது வாயினுள் வரும் புண்களுக்கு 5-கிறெயின் தூரிசை நேர்மையாய்த் தூள்செய்து அரை அவுன்சு தேனிற்கலந்து விரலால் தொட்டு இடவேண்டும். பிள்ளைகளுக்கும் பாலர்களுக்கும் மிகுதியாய் நீர் வடியும் கண்ணோய்களுக்கு 1-கிறெயின் தூரிசை 1-அவுன்சு சலத்தில் கலக்கி தினம் மூன்று அல்லது நாலுதரம் கண்ணைக் கழுவினால் குணம்வரும் கடினமான கண்ணோய்களுக்கு 1-அவுன்சு தண்ணீரில் 2-கிறெயின் தூரிசைக் கூட்டிக்கொள்ளவேண்டும். படர்தாமரைக்கும் தலைச்சொறிக்கும் தூரிசின் தூள் 20-கிறெயின் மாசிக்காய்த் தூள் 1-அவுன்சு, மெருழு பிளாஸ்திரி 1-அவுன்சு இவையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்தரைத்து வியாதியுள்ள தலத்தில் நன்றாய் தேய்க்கவும் சொரி சிரங்குக்கு 1-அவுன்ஸ் தூரிசை அரைபுட்டி தண்ணீரிற் கலக்கி இடவேண்டும்.

அட்டை கடித்தவாயில் நின்று இரத்தம் போகிறதற்கு கொஞ்சம் தூரிசை தூள்செய்து கடிவாயில் வைக்க நிற்கும் மூக்கில் நின்று மிகுதியாய் இரத்தம் போகிறதற்கு 4-கிறெயின் தூரிசை 1-அவுன்சு தண்ணீரில் கலக்கி மூக்கினுள் விடவேண்டும் ஆனால் இது படிகாரத்துக்குத் தாழ்ச்சியாய் இருக்கின்றது.

அபின், ஊமத்தை, எட்டிக்கொட்டை மற்றும் மயக்கத்தக் காஞ்சுகளை விழுங்கினவர்களுக்கு 5-கிறெயின் தூரிசை அரைப்புட்டிச் சுடு தண்ணீரில் கலக்கி அவ்வளவையும் ஒருதரமாய்க் குடிக்க வேண்டும் உடனே அரைமணி நேரத்துக்குள் வாந்தி போகாவிட்டால் பின்னுங் கொடுத்தால் அது வயிற்றிலிருந்து நஞ்சாகவே தீருமாகையால் அதிகமாய்த் தொடர்ந்துக் கொடுக்கக் கூடாது. இதைக் கொடுத்தபின்பு உடனுடன் வாந்தி நன்றாயாகும்படி மிகுதியாய் சுடுதண்ணீரை அடிக்கடி கொடுக்கவேண்டும், நஞ்சுண்டவர்களுக்குத்தான் உடனே வாந்தி யாகிறதற்கு தூரிசை கொடுப்பது புத்தியானதால் மற்ற வியாதிகளுக்கு அது நவமான வாந்தி ஔஷதமல்ல. இந்த மரு

தும்பை-தும்பை, வெற்றிலை ஓர் பூண்டு.

அவை

கறிந்தும்பை, கவிழ்தும்பை, கழுதைத்தும்பை, பேய்த்தும்பை, தும்மிட்டி, சிறுதும்மிட்டி, பேரீந்து.

துரகதமூலம்-நீர்முள்ளி
துரங்கப்பிரியம்-கோதுமை
துரமி-தூதளை, தொடரி
துரா-ரோகம்பனை
துராலபம்-சிறுகாஞ்சொறி
துரிஞ்சல்-உசில்
துரிசி-ஓர்மருந்து

இது ஔஷதத்துக்குத் தெரிந்தெடுக்கப்பட்ட துரிசு துப்புரவான இருண்ட நீல நிறமுள்ளதாயும் பருந்துண்டுகளாயும் இருக்கவேண்டும். அவற்றின் மேல் வெண்பச்சை அல்லது வெண்ணிறமான தூள்பற்றியிருக்கில் உள்ளுக்குக் கொடுக்குமுன் நன்றாய்த் துடைத்துக் கொள்ளவேண்டும். இது அனேக கடைகளில் நற்சரக்காக அகப்படும்.

சுரமின்றி அனேக நாளாயிருக்கப்பட்ட வயிற்றுப் போக்குக்கும் வயிற்றுக்கடுப்புக்கும்6-கிறெயின் துரிசு நேர்மையாய்ப்பொடித்து 6-கிறெயனபினுடன் நன்றாய்ச்சேர்த்தரைத்து 12-மாத்திரையாகப் பங்கிட்டு நாளொன்றுக்கு மூன்றுதரமாக ஒவ்வொரு மாத்திரைவீதங் கொடுக்கவேண்டும். வயிற்றுக் கடுப்புள்ளவர்களுடைய வயிற்றின்மேல் பிளானில் அல்லது கம்பிளியைச் சுற்றிக்கட்டியிருக்கவேண்டும் வெளிறி பெலவீனமாய் நெடுநாளாய்ச் சுகமில்லாமலிருக்கும் குழந்தைகளின் தீராத வயிற்றுக் கழிச்சலுக்கு 1-கிறெயின் துரிசை நன்றாய்ப் பொடித்து 12-சரிபங்கு செய்து இதிலொருபங்கை 3-கிறெயின் கறுவாயின் தூளுடன்தேன் அல்லது பஞ்சதாரையில் தினம் 3-தரங் கொடுக்க வேண்டும் மேற்சொல்லிய வியாதிகளை யுடையவர்கள் பிராய மானவர்களாவது, குழந்தைகளாவது சிலநாள் இந்த ஔஷதம் தின்றதில் சவுக்கியமடையாவிட்டால் அதை நிறுத்திவிடவேண்டும். ஏனெனில், அதை நெடுநாள் தொடர்ந்து தின்னுமளவில் வாந்தியும் குன்மவாய்வு முண்டாகும்.

குளிர்சுரங்கள், முறைசுரங்கள் இவைகளுக்கு முன் கொடுத்ததில் சவுக்கியப் படாமலிருக்கில் துரிசைக் கீழ்ச் சொல்லியபடி கொடுக்கலாம். நேர்மையாய்ப் பொடித்த துரிசித்தூள் 48-கிறெயின் அபின் 6-கிறெயின் இவைகளைத் தேன்விட்டு நன்றாயிடித்து 12-மாத்திரையாகப் பங்கிடவேண்டும். இதில் முதலாவது ஒரு வேளைக் கொருமாத்திரை வீதம் தினம் மூன்றுநேரங் கொடுத்து இதில் பலன்காணாவிட்டால் தினம் நாலைந்து தரமாவது கொடுக்கலாம் மேற்சொன்ன பிரயோகம் பிராயமானவர்களுக்கே கொடுக்கத்தகும். ஆதலால் குழந்தைகளுக்குக் கொடுக்கக்கூடாது அதுவும் மற்ற மருந்துகள் கொடுத்துப் பார்த்தபின் தான் கொடுக்கலாம்.

நெடுநாள்பட்ட புண்களில் விளிம்பைச்சுற்றி துரிசை மெதுவாய்த் தடவிவந்தால் சுறுக்காய்வா

சியாகும் இனியொரு முறையாவது 3-கிறெயின் துரிசை 1-அவுன்சு தண்ணீரில் கலக்கி தினம் இரண்டுதரம் புண்களில் விட்டுப் பின்பு மூன்று அல்லது 4-நாளைக்கொருதரம் துரிசின் எட்டையை ஒவ்வொரு கிறையின்வீதம் வியாதிக்காரரின் உணர்வுபோல் அதிக நோவும் சூடு இல்லாமல் சிற்றெரிவும் உட்டணமு மாத்திரம் கொடுக்கும்படியாய் 10-கிறெயினாகுமட்டும் நீரை அதிகரித்துக் கொள்ளவேண்டும் அதில் அதிக எரிவுண்டானால் துரிசின் காரம் குறையும்படி சற்றதிகமாய்ச் சலத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டும் மேற்படி சலத்தைக் காலமேயும் சாயந்திரமும் புண்களில் விட்டு இடைவேளைகளில் அரிசிப்போல்ட்டீசைக் கட்டவேண்டும். துன்மாமிசத்துக்கு அதின் மேல் துரிசை மூன்று அல்லது நாலு தினத்துக்கு ஒருதரம் தடவவேண்டும், பிராயமானவர்களுக்காவது, குழந்தைகளுக்காவது வாயினுள்வரும் புண்களுக்கு 5-கிறெயின் துரிசை நேர்மையாய்த் தூள்செய்து அரை அவுன்சு தேனிற்கலந்து விரலால் தொட்டு இடவேண்டும். பிள்ளைகளுக்கும் பாலர்களுக்கும் மிகுதியாய் நீர் வடியும் கண்நோய்களுக்கு 1-கிறெயின் துரிசை 1-அவுன்சு சலத்தில் கலக்கி தினம் மூன்று அல்லது நாலுதரம் கண்ணைக் கழுவினால் குணம்வரும் கடினமான கண்நோய்களுக்கு 1-அவுன்சு தண்ணீரில் 2-கிறெயின் துரிசைக் கூட்டிக்கொள்ளவேண்டும். படர்தாமரைக்கும் தலைச்சொறிக்கும் துரிசின் தூள் 20-கிறெயின் மாசிக்காய்த் தூள் 1-அவுன்சு, மெருழு பிளாஸ்திரி 1-அவுன்சு இவையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்தரைத்து வியாதியுள்ள தலத்தில் நன்றாய்த் தேய்க்கவும் சொரிசிரங்குக்கு 1-அவுன்ஸ் துரிசை அரைபுட்டி தண்ணீரிற் கலக்கி இடவேண்டும்.

அட்டை கடித்தவாயில் நின்று இரத்தம் போகிறதற்கு கொஞ்சம் துரிசை தூள்செய்து கடிவாயில் வைக்க நிற்கும் மூக்கில் நின்று மிகுதியாய் இரத்தம் போகிறதற்கு 4-கிறெயின் துரிசை 1-அவுன்சு தண்ணீரில் கலக்கி மூக்கினுள் விடவேண்டும் ஆனால் இது படிகாரத்துக்குத் தாழ்ச்சியாய் இருக்கின்றது.

அபின், ஊமத்தை, எட்டிக்கொட்டை மற்றும் மயக்கத்தக் காஞ்சுகளை விழுங்கினவர்களுக்கு 5-கிறெயின் துரிசை அரைப்புட்டிச் சுடு தண்ணீரில் கலக்கி அவ்வளவையும் ஒருதரமாய்க் குடிக்கவேண்டும் உடனே அரைமணி நேரத்துக்குள் வாந்தி போகாவிட்டால் பின்னும் கொடுத்தால் அது வயிற்றிலிருந்து நஞ்சாகவே தீருமாகையால் அதிகமாய்த் தொடர்ந்துக் கொடுக்கக் கூடாது. இதைக் கொடுத்தபின்பு உடனுடன் வாந்தி நன்றாயாகும்படி மிகுதியாய் சுடுதண்ணீரை அடிக்கடி கொடுக்கவேண்
டவர்களுக்குத்த
வாந்தி யாகிற
கொடுப்பது புத்தியானதால் மற்ற வியாதிகளுக்கு அது நலமான வாந்தி ஔஷதமல்ல. இந்த மருந்

தைக் கொடுத்தபின் நஞ்சுப் போன்ற இலட்சணங்கள் யாதேனும் உண்டாகில் முட்டையின் வெள்ளைக்கற்கு மாற்றுமருந்தாய் இருக்கின்றது.

துருக்கம்-குந்துருக்கம்
துருத்தூரம்-ஊமத்தை
துருபவருணி-காட்டாமணக்கு
துருமசிரோட்டம்-பனை
துருமவருணி-காட்டாமணக்கு
துருமம்-குங்குமம்
துருமேசுவரம்-மனை
துருமோற்பலம்-கோங்கு
துருவாட்டி-சிற்றேலம்
துருவாதி-காட்டாமணக்கு
துருளக்கம்-குந்தரிக்கம்
துரோணம்-தும்பை
துரோணிகை-ஆவிரை
துர்த்தூரம்-ஊமத்தை
துவியாசுனம்-செம்முருங்கை
துலோபம்-கருஞ்சுண்டி
துவரை-துவரை (மரம்) துவரை பயறு, ஓர்செடி

அவை

கருந்துவரை, காட்டுத்துவரை
துவர்-பவளம்
துவர்ச்சிசை-கடுக்காய்ப்பிஞ்சு
துவர்பத்து

அதாவது

நாவல்கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு, மாந்துளிர்.

துவன்-வட்டத்திருப்பி
துவிகபா } வட்டதிருப்பி
துவிகாபா }
துவிகாயாசின்-செம்முருங்கை
துவிதாத்திமகம்-சாதிக்காய்
துவிபுத்துறு-தண்ணீர்விட்டான்
துவை } துளசி
துழாய் }
துழாயவனம்-துளசி
துளசி-ஓர்பூண்டு

அவை

கரியமால் துளசி, கருந்துளசி, கற்பூரத்துளசி, செந்துளசி, காட்டுதுளசி, சிவதுளசி, சிறுதுளசி, நாய்துளசி, நிலத்துளசி, பெருந்துளசி.

துளபம்-துளசி
துளம்பிக்கிரி-ஆதொண்டை
துளவம்-துளசி
துளவன்-சோரபாஷாணம்
துளவி-திப்பிலி
துளவு-துளசி
துளை-மூங்கில்
துறட்டிச்செடி-ஓர்பூண்டு
துறட்டி-சிற்றேலம்
துற்பறிகம்-சிறுகாய்ச்சொறி
துறுவி-திப்பிலி

தூத்திநாகம்-அழலை, கிராமணி, பேதி, பயித்தியம், முளைப்புண், மேகம், வெட்டையும் போம்.

தூத்திப்பூ - இருமல், வாயால் விழுகிற ரத்தமும்போம். மெய்க்குளிர்ச்சி, விழுந்தும் உண்டாம்.

தூத்தியிலை-கட்டி, புண், புழுமுளைமூல நோயும் போம்.

தூத்துவிரை - குஷ்டம், கைகாவிற்படர்ந்த கருமேகம், வெப்பும் போம்.

தூம்பக்ஷாரம்-இரைப்பு, ஈளை, குன்மநோய், வாதமும் போம்.

தூம்பயிலை-கண்புகைச்சல், கபம், காலங்கையசதி, குளிர், சீதசன்னி, சுரங்கள், சோம்பல், தலைவலி, தாகம், பாம்பு முதலான விஷங்கள், மாந்தம், மேகம், வாதமும் போம்.

தூம்பைபூ-கண்ணோய், ஜன்னிபாதம், மேகம், வாதமும் போம்.

துயிலிக்கீரை-அழகு, பழமலம் வெட்டையும்போம், சிறுசிறங்கு சீதம், புண்ணுமுண்டாம்.

துருசு-ஆண்குறிப்புண், கண்ணோய், சுரம், புண், மூத்தோஷம், வாய்நோயும்போம், பேதி வாந்தியுமுண்டாம்.

துவரம்பருப்பு பித்தம்கிராணி ஜன்னிவாதம், சேட்டுமம் மூலம் சீதம், விஷமும்போம், தாதுபலமு முண்டாம்.

துவரம்பருப்பின் ரசம் - கெட்ட வாதங்கள்போம்.

துவரை-மந்தம், மலம், மெலிந்த தேகம், புஷ்டியும், வாய்வு முண்டாம்.

துளசி-அஸ்திசுரம், அரோசகம், ஐயம், ரணம், சுவாசகாசம், சுரமாந்தம், தாகம், வயிறுளைச்சல் பல புண்ணும்போம், சாரம் சூடு முண்டாம்.

துளசிதை-அருசி,கபமும்போம்
தூங்குமூட்டு-கோரைக்கிழங்கு
தூசிகம்-புளியாரை
தூசுப்பு-தண்ணீர்விட்டான்
தூட்டிகம்-தும்பை
தூணியங்கம்-அத்திப்பிசின்
தூதனம்-மூங்கில்
தூதுணை } தூதுவளை
தூதுனை
தூதுளை
தூதளை

இதன்வேர், இலைகள், புட்பங்கள், துளிர்கள் எல்லாந் தமிழ் வைத்தியரால் மருந்தில் உபயோகப்படுத்தப்படுகின்றன வேரும், இலைகளும் கசப்பாயிருக்கின்றன காயரோகங்களுக்கு செய்யப்படும். லேகியத்தில் கஷாயமாகவாவது சூரணமாகவாவது,சேர்க்கப்படுகிறது.

தூமம்-புளிநறளை
தூமம்-பலகறை
தூம்பு-மூங்கில்
தூரம்-ஊமத்தை
தூரச்சூலை-ஓர்நோய்
தூரோத்தி-கம்மத்திராய்
தூரோணம்-கவிழ்ந்தும்பை
தூர்த்தம்-ஊமத்தை
தூர்மம்-தேள்கொடுக்கி
தூர்வை-அறுகு
தூர்ணு-முகற்புல்
தூலகம்-பருத்தி
தூலம்-இரவு,நீர்முள்ளி, பருத்தி, பஞ்சுகோரை.
தூலினி-இலவு
தூறவம்-நாவல்
தூதுதிராய்-மஞ்சள்
தூறுகுணம்-கடம்பு
தூருட்டி-சிற்றேலம்
தூறுதலையன் } யிராய்
தூறுதலைவன்
தூறுபுட்பம்-சீந்தில், சிலிந்தி,
தூறுபுளப்பம்-சீந்தில்

தூர்க்கணங்குருவிக்கறி-அருசி ஐயம், மலமும்போம், அழகு பசியும் உண்டாம், பத்தியத்திற்காகும்.

தூதுளங்காய் - அரோசகம், ஐயம், கபம், குடல்வாதம், மலம் வாதபித்தமும்போம்.

தூதுளைப்பத்திரி-காசம், காதுமந்தம், காதெழுச்சி, சூலை, தாதுநஷ்டம், தினவு,மதம்,மந்தம்,மூத்தோஷம் மேலுளைப்பும் போம்.

தூதுளம்பழம் - கபக்கட்டு, கோழை, திரிதோஷம், நீர்கோவை விஷமும்போம்.

தூதுளம்பூ அழகு, தாதுபுஷ்டி

டி, பலமும் உண்டாம், தளர்ந்த தேகத்திற்காகும்.
தூதுளம்வேர்-பலநோய் போம்.

## தெ

தெகுட்டிகை } தேள்கொடுக்கி
தெகுட்டி }
தெங்கு-தென்னை, ஓர்மரம்
தெருவித்தேங்காய்-ஓர்பூண்டு
தெறுந் தேங்காய் - சமுத்திராப் பழம், தேங்காய்ப்பழம்.
தெசலாம்-தேமா
தெசுவம்-மா
தெளி-பஞ்சன், பெருங்குரும்பை
தெந்தி-நேர்வாளம்
தெருவிலழகு-குப்பைமேனி
தெவம்-மாமரம்
தென்னங்கள்ளு-ஓர்கள்ளு
தென்-தென்னை

வழக்கமாயிருக்கிற வலச்சிக்கு மலபந்த வியாதிக்குச் சுகமான விலைபெற்ற பரிகாரமாயிருக்கின்றது. தென்னமரத்து பஞ்சு ஓர் பஞ்சு.

இது காயங்கள் அட்டைக்கடி முதலாகியவைகளி லிருந்துவரப் பட்ட இரத்தத்தைநிற்கச்செய்ய உபயோகப்படுத்துகிறார்கள்.
தென்னி-வாழை

தெங்கின்கற்கண்டு-கபம் திமிர் வாதம், வாய்வும் உண்டாம்.

தெங்கின்குருத்து உதிரமூலம் சிலேட்டும் வலியும்போம்.

தெங்கின்பூ - அகக்கொதிப்பு, அசிர்க்கரநோய், இரத்த பித்தம் பிரமியம், மேகம் விஷமும்போம்.

தெங்கின்மது கரப்பான், கிராணிசோபை, நாதவிந்து பாண்டு, பேதி, வாதபித்த முண்டாம்.

தெங்கின் வெல்லம்-உடலுதல், கணை, கரப்பான். காமாலை, கிரங்கு சோகை. சோபம், கிரை பாண்டு, மதிகெடல், மாந்தம் வாதமும் உண்டாம்.

தெலிங்கதேன்-இருமல், கண்ணோய், காசம், சுரம், சுவாசம் விஷமும்போம், குரலோசையுண்டாம்.

## தே

தேகனி-மஞ்சள்
தேகி-புல்லூரி
தேக்கு-தேக்குகமுகு
தேங்காய்க்கீரை-ஓர்பூண்டு
தேங்காய்ப்பூநாறி-தேங்காய்ப் பூக்கீரை
தேங்கிட்டி-தேள்கொடுக்கி
தேசனி-மஞ்சள்
தேசாவாம்-ஓர்கிழங்கு

இது சூடுள்ள கார்ப்புள்ளகுணமுள்ள கிழங்காயிருக்கின்றது. இதைச் சுதேசவைத்தியர் சுரங்களுக்கும் அசீரண வியாதிக்கும் குன்ம வியாதிக்கும் குடிநீராக உபயோகப் படுத்துகிறார்கள்.
தேசி - எலுமிச்சை, எலுமிச்சம் பழம்.
தேவகந்தம்-குங்கிலியம்
தேவகந்தர் } சிதேவிர்
தேவகந்தாறு }
தேவதரு-தேவதாரம்
தேவதாரம்-தேவதாரம், செம் புளிச்சை.
தேவதாளி-ஓர்பூண்டு
தேவபணம்-அரசு
தேவமாமரம் - அனிச்சை, குளிராவல்.
தேவர்வசு-அரசு
தேவலதை-அடுக்குமல்லிகை
தேவதனம்-தாமரை

தேவாப்பீட்டை-வெற்றிலை
தேவி-சீதேவியார்
தேள்கொடுக்கி-ஓர்பூண்டு

இதின் இலைச்சாறு கசப்பாயிருக்கும் இதைச் சுதேச வைத்தியர்நோயுள்ள பல்லின் ஈறுக்கும் முகப்பருவுக்கும் உபயோகப்படுத்துகிறார்கள் கண்ணோய்களுக்கும் உபயோகப் படுத்துகிறார்கள்.

தேறு-தேற்றுமரம் துண்டு
தேற்றுங்கொட்டை-ஓர்விதை
தேளி-கடுகுரோகணி
தேக்கு-சிரங்குபோம்

தேங்கா நெல்-சிரங்கு, தீபுண் படர்தாமரை, பல்நோயும் போம் தலைமயிர் வளர்வுண்டாம்.

தேங்காய்ப்பால் - அன்னமிரங்குதல், கரப்பான், தாதுவிர்த்தி பித்தம், வாதமும் உண்டாம்.

தேங்காய்ப் புண்ணாக்கு - கரப்பான் சொறி, சிரங்கு, வயிற்றில் புழுவுமுண்டாம்.

தேட்கட்டை-சிரங்குபோம்
தேட்கொடுக்கு - கரப்பான், சில விஷம் தினவு, நாட்பட்ட புண் புரந்த கணமும் போம்.

தேயு-உள்வலி, கண்டைக்கால் நோய் பலபிணிகளும்போம்.

தேவதாரமரம்-அனல், சிலேட்டுமம், நீரேற்றம், பிரிசம், பழய சுரமும்போம்.

தேளி-உலர்ந்தது, இருமல், ஈளை, கிராணி, மேகவாய்வுபோம்.

தேற்றுங்கொட்டை-அகக்கடுப்பு உள்புண், கண்ணெரிவு கிரிச்சரம், தீபனம், வெட்டை,வெள்ளையோடலும் நீர்த்தெளிதல், மந்தமும் உண்டாம்.

தேற்றுங் கொட்டை - மேல் தோல் அதிகவாந்தியுண்டாம்.

தேற்றும் பழம் காசம், சுவாசம் முத்தோஷமும்போம்.

தேற்றுனிலை எல்லாசுரமும், எல்லாவீக்கமும்போம்.

தேனி லுண்டாகுங் கற்கண்டு சுரம், வாதம், விழியிலிருக்கின்ற படலமும் போம், தொனி பசியுமுண்டாகும்.

தேன்குத்தல் உட்டினம் கபவாதம், தாகம், மந்தமுமுண்டாம்.

தேன்பாகு அருசி, சர்த்தி மற்ற வியாதிகளும்போம், கோழையுண்டாம்.

தை தைவிளை, கைவேளை, அரசதண்டர், தைலபீதம், அத்திப்பிசின்.

தைலங்களின் பத்தியம்-ஸ்திரீ செம்மறித்தயிர், நித்திரை பாகற்காய் பால், புகையிலை, புளி, மீன் இவைகளால் பத்தியத் தாழ்வுண்டாம்.

தைலம் தேய்க்கும்விதி-காதுக்கு 6-துளி நாசிக்கு4-துளிவிட்டு உச்சிக்கும் பாதங்களுக்கு தேய்த்து ஊறினபின் ஸ்நானஞ் செய்யவும்.

தைலம் புகை - முத்தோஷங்களாற் பிறக்கின்ற நோய்களெல்லாம்போம்.

தைலாதிகளின் குணம்-வாரத்திற்கு இரண்டுவிசை தேய்த்து ஸ்நானஞ் செய்தால் நோய்களணுகா தோடிப்போம்.

## தொ

தொக்கி-சமுத்திராப்பச்சை
தொங்கின-சீனமல்லிகை

தொடரி-புலிதொடக்கி
தொட்டவிரல்-தறித்தான் பெருங்குறிஞ்சா
தொட்டால் வாடி - தொட்டாற் சுருங்கி

இந்தப் பூண்டிகன் வேர்க்கஷாயம் கல்லடைப்பு வியாதிக்கு உபயோகப் படுத்தப் படுகின்றது, சுதேசவைத்தியர் புண்களுக்கும் புண் புரைக்கும் இதன் இலையையும் வேரையும் உபயோகப்படுத்துகிறார்கள் இலையைக் கொஞ்சம் அரைத்துப் பாலில் கலந்து கொடுக்கப் படுகிறது.

தொட்டாற்கருங்கு-ஓர்பூண்டு
தொட்டி-காய்ஞ்சொறு
தொட்டிப்பாஷாணம்-ஓர் பாஷாணம்.
தொண்டிகள்
தொண்டை-ஆதொண்டைச் செடி, கோவைச் செடி, காற்றோட்டி.
தொதி-பப்பாப்புளி
தொலியாகரம்பை - நத்தைச் சூரி
தொவசனுகம்-பாவட்டை
தொன்மரம்-ஆலமரம்

தொக்கணத்தின் குணம்-வாயு போம் உறக்கம் புணர்ச்சியும் உண்டாம்.

தொட்டால்வாடி - ஜந்நி, வெட்டை வெள்ளையும் போம், ஸ்திரீ விநோதம் உண்டாம்.

தொட்டிப் பாஷாணம்-கிரந்தி சுரம், மந்தம், முனைத்தட்டி வாய்வும் போம் வாதவித்தை உண்டாம்.

தொய்யாக்கீரை சதை வீக்கங்கள் விஷமுள்ள புண்களும்போம்

தொழுக் கண்ணி - துணிந்த தசை கூடும்.

## தோ

தோகலி-அசோகு
தோகல்-சோனைப்புல்
தோக்குளம்-பருத்தி
தோஷம்-ஓர்நோய்
தோடகம்-தாமரை
தோட்டி-செங்காந்தன்நெல்லி
தோண்டி-வறட்சுண்டி
தோதிபேலா-பேராமுட்டி
தோரை-குழநெல்
தோலாயா-இலவு
தோலா-ரூபா எடை
தோல்-மூங்கில்
தோளி-அவுரி
தோன்று-காந்தன்
தோசை-கபம், பித்தம், வாய்வும், போம்.

தோஷம் நீங்காத பாதரசம் இரசத்திற்கு எட்டுவகை தோஷமுண்டு அதாவது கந்தி காளம் சர்ப்பம் சாஞ்சலம் மந்தம் மலம் வங்கம் வன்னி என்பவைகளால் இந்ததோஷத்தை நீக்காமல் உண்பவர்கள் அக்கினி எரிச்சல் குஷ்டம் கொப்பளம் கோதுபோன்ற தேகநிறம் மரணம் மூர்ச்சை விந்து கஷ்டமென்கின்ற 8 விரோதங்களுமுண்டாம்.

தோப்பு நெல்விக்காய் அரோசகம், உஷ்ணம், சித்தலக்கலக்கம், சிலேட்டுமம், பித்தம், பிரமகம் பீநிசம், புண்மலர் வாதம், வாந்தி வாயிலைப் விக்கலும்போம்.

## ந

நகசிறிதம்-குன்றி
நகதிபீசம்-புலித்தொடக்கி
நகநோக்கி-வேலிப்பருத்தி
நகரி-வறட்சுண்டி
நகாதுரோணம்-தும்பை

நகவியாக்கிரம்புலி-தொடக்கி
நகிர்-தேள்கொடுக்கி
நகுலி-பட்டப்பருத்தி
நகுத்தம்-புன்கு
நகேசிறு-புல்லூரி
நகைநோக்கம்-மஞ்சள்
நகையால்-பகண்டை
நக்காரி-தறட்சுண்டி
நக்கிபூ-ஓர் பூண்டு
நக்கிறு-தேள்கொடுக்கி

நங்கை-சிறியாநங்கை, பெரியாநங்கை.

நசாரி-காஞ்சிரை
நசியரி-குப்பைமேனி
நச்சிளி-கேழ்வரகு
நச்சுமரம்-எட்டி
நஞ்சறப்பாஞ்சான் வேர்-ஓர்கள்ளி

இதன் சிறுவேர்சிலும்பு உவாந்திமருந்தாக விருக்கின்றது இது சூரணமாகச்செய்து பிரயோகிக்கப்படுகின்றது.

நஞ்சறப்பாஞ்சான்-கொடிப்பாலை

நஞ்சறுப்பான்-ஓர் பூண்டு, கொண்டை சாணிக்கிழங்கு, கொடிப்பாலை நஞ்சி குன்றுமணி கொண்டைசாணிக் கிழங்கு.

நஞ்சு-விஷம்
நடவை-தணக்கு
நடபத்திரிகை-சேம்பு
நணாந்தம்-புன்கு சணல்
நண்பன்-சணல்
நதீசம்-தாமரை
நத்தை-ஓர் பூண்டுகடுகு
நத்தைச்சுண்டி-நத்தைச்சூரி
நத்தைச்சூரி-ஓர் பூண்டு
நந்தப்பிலா-எருக்கு
நந்தமாலம்-புன்கமரம்
நந்தம் பின்கு-வாழை எருக்கு
நந்தம்-கஸ்தூரி

நந்தாமணி - உத்தாமணி, வேலிப்பருத்தி.

நந்திபத்திரி-நந்தியாவட்டம்
நந்திப்பூசணி-சாம்பற்பூசணி
நந்தியாவட்டம்-ஓர் பூ

இதன் ரசம், கண்ணோய்க்குப் பியப்படுகின்றது.

நந்தியாவர்த்தம்-நந்தியாவட்டம்
நந்திவிருட்சம்-சின்னிமரம்
நந்தை-கொத்தான்செடி
நமக்காரி-வறட்சுண்டி
நம்பு-நாவல்
நரகஞதி-தேள்கொடுக்கி
நரந்தம்-நாரத்தை
நரந்தை-கொற்றான்
நரளி-கடலை
நரிகொன்றை-ஓர்மரம்
நரிப்பயறு-மின்னி
நரிப்பாகல்-காட்டுப்பாகல்
நரிமருட்டி-கிலுகிலுப்பை
நரிமுருக்கு-ஓர்முருக்கு
நரிமெருட்டி-கிலுகிலுப்பை
நயிலந்தை-ஓர்மரம்
நரியுடை-மொசுமொசுக்கை
நரிவாற்புல்-ஓர்புல்
நரிவிளா-நிலவிளா
நரிவெங்காயம்-ஓர்வெண்காயம்
நரைக்கொள்ளு-சீர்கோழி

நடுக்கட்டு - கபம், கபாலசூலை, வாத பித்தமும் போம். அழகு நடைபலம், புஷ்டியும் உண்டாம்.

நண்டுக்கல்-ஐயம், நீரடைப்பு, நீருகல், நீரொழுக்கு, பெருவயிறு மேக வெட்டையும்போம்.

நண்டுக்குழிநீர் காந்தல் தாகம் தேக எரிவு, மாறுதவிக்கல், வாந்தியும் போம்.

நத்தைக்கறி மலரோகம், மூலமும் போம், தாதுவிர்த்தி நித்

தக் தின்றால், செரியாக் குண மும் உண்டாம்.

நத்தைச்சூரி-கல்பொன்ற விக் கமெல்லாம் கரைந்து போம், வியாதிகளுக்குப் பலவித விசேஷ தமாம்.

நந்தியாவட்டப்பூ - கண்காசம், கருவிழி நோய்கள் படலம், மண் டைக்குத்தலும் போம்.

நமன்கத்துவயம்-தம்பனேயுண் டாம்.

நமிட்டுக்கறி-கயம், கரப்பான், சோபை, வாதமும்போம், எல் லாக் கறிகளுக்கு மேலாகிய உரு சியாக விருக்கும்.

நரளைக் கிழங்கு - கரப்பான், புண், மூலம், மேகமும் போம்.

நரளையிலை-ஸ்திரீகள் வயிற்றில் உருளுகிற இரத்த குன்மமும் போம்.

நரிக்கொன்றை மரம்-அரிப்புப் பட்டை, கிருமிப்புடை, யானைச் சொறியும் போம்.

நரிப்பயறு - கணம், குளிர்தே ரை, தோஷம், பித்த மஞ்சள், மாறள் சுரமும்போம்.

நரிப்பயற்றங்கொடி-ஐயம் கரப் பான், பித்தம், பித்தவெட்டை, மேகவெட்டையும் போம்.

நரிமுருக்கு-சயம்போம்

நரிவெங்காயம்-இரைப்பு, சீத கபம், நஞ்சு, மூல பகாதரமும் போம்.

நருமதாந்திநீர் ஐயம், காமாலை, கை காலெரிவு, கோழைக் கட்டு, சரமதோஷம், நீர்கட்டு, பொரு மல் வாதம், வாந்தி, விக்கலும் போம்.

நல்லநெருஞ்சில்-அனல், கல்ல டைப்பு, கிரிச்சரம், கூன்வாதம், சுரமதாகம், திரிதோஷம், நீர்க் கட்டு, நீர்ச்சுருக்குபுண், மேக வெட்டை, வெப்பும்போம், போக முண்டாம்.

நல்லவெல்லம் - பித்தகுன்மம் போம், கோழை, மதுமேகம், மலப்புழுவும் உண்டாம்.

நல்லவேளை-ஐயம், சயித்தியம், சிரநோய், சோகை, மார்புநோய், வலி, குடைச்சல் வாதமும்போம், அச்சரம், அனல், பசிபத்தமும் உண்டாம்.

நல்லவேளைப்பூ - கணபாந்தம், கோழை, மாந்தம், சுரம், வாய் வும்போம்.

நவபாஷாணம்-கனத்த நோய்க ளெல்லாம் போம், சிந்தூரித்து தின்றால் கபயமிறுதல் உண்டாம்.

நவரை - வாழைப்பழம், கரப் பான் நமைச்சல், மாந்தம், வாத கபமும் உண்டாம்.

நவச்சாரம்-கல்லடைப்பு,குடல் சூலை, குன்மம், தோலின்கவிச்சு, நாற்றம், மகோதரம், மூத்ரோதோ ஷம், வாதமும்போம்.

நவரத்தின மணிதல்-நேத்திர ரோகம்போம், சரீரகாந்தி, திடம் பலம் உண்டாம்.

நறுவலிப்பழம்-இரத்தபித்தம் மேகமும் போம்.

நறுவலிவேர் - எலும்புருக்கி, நாப்புண்ணும் போம்.

நற்பரிசி-அரோசி, அனல், கல் லடைப்பு, நீர்க்கடுப்பு, பயித்தி யம், வாதம், வாந்தி, வெட்டை யும் போம்.

நன்றாய்ச் சமைத்த துவரம் பருப்பு-நெய்யோடு சாப்பிட்டால் பிடிக்குப் பிடிசதை உண்டாம்.

நன்றாய் சமையாத அன்னம் பலம்போம், மலசல சிக்குகளும் மற்றுநாளுமூண்டால் மந்தமும் உண்டாம்.

நன்னாரிவேர்-ஸ்திரீகளா லுண்டாகுஞ் சூடு, உழலை, சலதோஷம், சுரம், தாகம், பித்தம், புண் மது மேகமும், கற்றாழைச்சோற்றிற் கலந்துண்ண வண்டுகடியும் தேனிலரைத்துவெதுப்பியுண்ண வெறியும்போம்.

நல்லமிளகு-மிளகு

இது நல்லதாயும் புதிதாயுமிருக்கில் ஔஷதத்துக்குப் பலவிதமாய் உபயோகப் படுத்தப்படும்.

வாந்திபேதிக்கு பங்காளத்தில் அனேகவருஷமாக கீழ்ச்சொல்லியிருக்கிற மாத்திரைகள் நன்றாய் அனுகூலப்பட்டிருக்கின்றன. நல்ல மிளகு காயம் அபின்வகைக்கு 20-கிறெயின் இவைகளை ஒன்றாய்ச் சேரும்படி இடித்து 12-மாத்திரைகளாகப் பகுத்துருட்டி அரை அல்லது ஒருமணி நேரத்துக் கொருதரம் ஒரு மாத்திரை வீதம் வியாதி சுகப்படுமட்டும் கொடுக்க வேண்டும். வியாதிக்காரன் தேவையானமட்டும் தண்ணீராவது கஞ்சித்தண்ணீராவது குடிக்கலாம். மேற்சொன்ன மாத்திரை பிராயமானவர்களுக்கும் அதில்பாதிமாத்திரை 7 முதல் 14-வயசுவரையுள்ள வாலிபருக்கும் நிதானித்துக் கொடுக்கவேண்டும்

குளிர்சுரம் அல்லது முறைக் காய்ச்சலுக்கு நல்ல மிளகு 40-கிறெயின் காயம், 20-கிறெயின் கழற்சிக்காயின் பருப்பு 100-கிறெயின் இவைகளைத் தேன்விட்டு ஒன்றாக யிடித்து 3-மாத்திரை செய்து சுரம்விட்டிருக்கிற பொழுது தினம் இரண்டு அல்லது மூன்றுதரம் 2-மாத்திரை வீதம் விழுங்கவேண்டும். பிராயமானவர்களுக்கு இந்தப்பிரமாணமும் குழந்தைகளுக்கு இதில் பாதியும் கொடுக்கவேண்டும். இந்த மாத்திரைகளைக் கொடுக்குமுன் எப்பொழுதும் வயிற்றை ஆமணக் கெண்ணெயாவது கொடுத்துச் சுத்தி பண்ணிக்கொள்ள வேண்டும்.

படர்தாமரைக்கு நல்லமிளகின் தூள் 2-அவுன்சு நெய் 4-அவுன்சு இவை யிரண்டையும் நன்றாயரைத்துத் தினந்தோறும் இரண்டுதரம் படர்தாமரையின்மேல் நன்றாய்த் தேய்க்கவேண்டும்.

மேகவெள்ளைக்கு வால்மிளகு கிடையாவிட்டால் நல்ல மிளகு தேனிலரைத்து ஒருதரத்துக்கு 10-கிறெயின்வீதம் தினம் மூன்றுவேளை சாப்பிட வேண்டும். இது வால்மிளகினும் குறைந்ததாகையால் அது கிடையாத பொழுதுதான் நல்ல மிளகைக் கொடுக்கலாம்.

நரையல்லி-வெள்ளாம்பல்

நலம்-சுக்கு

நல்லவேளை-ஓர்பூண்டு

நல்லவம்மான்பச்சரிசி-ஓர்பூண்டு

நவஞ்சம்-அசமதாகம்

நவட்சாரமர்-ஒருமருந்து

இது கடைகளில் கிடைக்கும் நவசாரம் சுத்தமற்றதாயிருக்கிறதினால் அதை உள்ளுக்குக் கொடுக்குமுன் கீழ்ச் சொல்லியிருக்கிற பிரகாரம் சுத்திசெய்துக்கொள்ள வேண்டும். 2-இராத்தல் நவசார

த்தைக் கொதிக்கிற தண்ணீரில் கலக்கிச் சூடுடன் வடிக்கட்டி ஆறினபின் ஒரு தட்டையான பாத்திரத்தில் விட்டு வெயிலில் வைத்து பின்பு காய்ந்து கட்டி உபரிப்போலாகியதை எல்லாம் உடனுடன் பேர்த்தெடுத்துக் குப்பியில் வைத்துக் கொள்ள வேண்டும். இப்படி சுத்தி செய்யப்பட்ட நவசாரம் அனேக பாகங்களுக்கு உதவும்.

ஸ்திரீகள் பால் கொடுக்கும் போது அவரவர்கள் மார்பிலுண்டாகும் விப்புருத்திக்கு கடை நவசாரம் 2-திரும் அரைப்புட்டி பன்னீரில் கலக்கி இதில் சீலையை நனைத்து வியாதியின்மேல் விட்டு வைத்து சீலையை இரவும் பகலும் அடிக்கடி மாறிமாறி நனைக்க விப்புருதி யுடைந்தபின் மார்பில் கட்டியிருக்கிறதைப் போக்குவதற்கும் மேற்படி மருந்து உபயோகமா யிருக்கும்.

அதிகநாள்பட்ட இருமல்களுக்கும் கபம் போகாமலும் இருமலுடனேயும் இருக்கும் நெஞ்சு வலிகளுக்கும் அந்த உப்பில் 10-கிறெயின் நாட்டு அதிமதுரத்தில் சேர்த்து மூன்று நான்கு மணி நேரத்துக்கு ஒருதரம் கொடுக்கவேண்டும். மேற்படி கஷாயம் செய்கிறவிதம் எப்படியென்றால் 2-அவுன்சு குன்றிவேரை அரைப்புட்டி தண்ணீரில் 10-மினிட்டு நேரம் வேகவைக்க வேண்டும். இதில் ஒருதரத்துக்கு 3-அவுன்சு வீதம் குடிக்கவேண்டும். கக்கிருமலுக்கு ஒரு தரத்துக்கு 1-முதல் 5-கிறெயின் வரை அதற்குச் சமன் கறுவாய்த்தூளைக்கூட்டி குழந்தையின் வயசுபோல் நிதானித்துக் கொடுக்கில் மிகுந்த பலனைத் தரும்.

நுரையில் இரைக்குடல் மற்றெந்த உள்ளுறுப்பில் நின்றாவது இரத்தம்போனால் 2-திரும் நவசாரம் அரிசிக் கஷாயம் அரைப்புட்டியில் கலக்கி வியாதியின் கடினம்போல் 2 அல்லது 3-மணி நேரத்துக்கு ஒருதரம் ஒன்றரை அவுன்சு வீதம் கொடுத்து வியாதிக்காரனைக் குளிர்ச்சி யாகவும் அமைதியாகவும் படுக்க வைத்திருக்கவேண்டும் முக்கியமாய் குளிர் சுரத்தையாவது மற்றெந்த சுரத்தையாவது தொடர்ந்து வரும் நீர்க்கோவைக்கு நவசாரத்தை தினம் 3-கிறெயின் வீதம் நன்னாரிவேர் கஷாயம் 2-அவுன்சில் சேர்த்துக் கொடுக்க வேண்டும். கழுத்து முதலான ஸ்தலங்கள் விசை நரம்புகளி லுண்டாகும் கட்டிகளுக்கும் மேற்சொன்னபிரமாணம் உள்ளுக்குக்கொடுக்கலாம்.

முகத்தில் ஒரு ஸ்தலத்திலாவது அதின் ஒரு பக்கத்திலாவது முக்கியமாய் சீதளத்தினாலும் வாத சம்பத்தினா லுண்டாகும் முகவலிக்கு நவசாரம் பிரயோசனமுள்ளதா யிருக்கிறது. சுத்திசெய்த நவசாரம் 20-கிறெயின் 2-அவுன்சு சுரணீரிற் கலக்கிக்கொண்டு நாலுமணி நேரத்திற் கொருதரங் கொடுக்கவேண்டும். இப்படி நான்குதரங் கொடுத்தபின் வலி நிற்காவிட்டால் அதைப் பின்னுங் கொடுக்கிறது பலனில்லாததால் நிறுத்திவிடவேண்டும்.

நசிவுகள், கருக்குகள், நாள்பட்டகட்டிகள், வாத வீக்கங்கள்,

விசைநரம்பி லுண்டாகும் வீக்கங்கள், மூட்டு வீக்கங்கள், அரையாப்புக் கட்டிகள், பயங்கரமான விப்புருதிகள், பருக்கள் இவைகளுக்கெல்லாம் மேற்படி உப்பைக் கடையில் வாங்கினபடி சுடு தண்ணீரிற் கலக்கி வியாதியின் மேலிட்டு அடிக்கடிநனைத்தால் வலியை நீக்கிவீக்கத்தைக் குறைத்துசவுக்கியப்படுத்தும்தேகத்தின் எந்தப் பக்கத்திலாவது தோலின் மேல் வலியுஞ்சுடும் சிவப்புநிறமு முண்டாகில் இரத்தச் சுரப்பென்று பெயர். இதற்கு அரைபுட்டி நவசாரத்தை 1-புட்டி தண்ணீரில் கலக்கி இடிவ்வலி சூடு முதலானதைத் தணிக்கும் பந்நீர் கிடைக்குமாகில் சுத்த சலத்தைப் பார்க்கிலும் அதிக உத்தமம்.

நவதி-பொடுதலை
நதநாகம்-அசமதாகம்
நவம்-சாறணை
நவ்வல்-நாவல்
நளத்தம்-சடாமாஞ்சி
நளம்-தாமரை
நாவடம்-அனிச்சம், குங்குமம், ஞாழல், தேன்
நறவு-குங்குமமரம், தென், கள், குங்குமம்
நறளை-ஓர்கொடி

அவை.

சிறுநறளை, பெருநறளை, புளிநறளை, யானைத்தடிப்பு
நறிவெங்காய்-ஓர்வெங்காயம்
நறுகள்-தேன்
நமருப்பு-இஞ்சி
நறுவிலி } ஓர் மரம்
நறுவுளி

இந்த மரத்தின் பட்டையால் மைசூர் தேசத்தில் கப்பல் கயிறுகள் செய்யப்படுகிறது.

சிறுநறுவிலி-ஓர்மரம்
நறைகள்
நற்சீரகம்-கருஞ்சீரகம்
நற்பலம்-வெட்பாலை
நற்பிரியம்-பற்பாடம்
நற்றுளி-அத்திமரம்
நனந்தம்-பன்கு
நனை-கள்
நனையாவிருட்டி-கொட்டைப்பால்
நன்பன்-சணல்
நன்னாரி - ஓர்மருந்துபூண்டு, நன்னாரி புற்கொடி
நன்னாரிவேர் - ஓர்வேர்

நன்னாரிவேர் பறித்தவுடன் 4-அவுன்ஸ் எடுத்துச் சதைத்து 1-புட்டி கொதிக்கிற தண்ணீரிலிட்டு 2-மணிநேரம் மூடி வைத்துப் பின்பு வடிகட்டவும் பிராயமானவர்களுக்கு ஒரு நேரத்துக்கு 3-அவுன்ஸ்வீதம் தினம் 3-நேரங் கொடுக்கவும், குழந்தைகளுக்கு ஒருநேரத்துக்கு ஒன்றரை அவுன்சு வீதம் கொடுக்கலாம் இதில் பஞ்சதாரையும் பாலுஞ் சேர்த்துச் சூட்டுடன் குடித்தால் சாரமதிகப்படுவதுமன்றி இன்பமான உருசியுள்ளதால் அதைக் குழந்தைகள் உடனே குடிக்கும் ஏது காரணத்தாலாவது வரும் பலவீனம்மாறி பெலப்படுவ, மிகுந்த உபயோகமாதுந் தவிர தேகம் வெளிறி பலக்குறைவா யிருக்குங் குழந்தைகளுக்கும் சுகத்தைக் கொடுக்கும். மேகவியாதிகள் பருக்கள் தொலிவியாதிகள் அசீரணம் பசியின்மை

நெடுநாளாய்ச் சென்ற வாதம் இவைகளுக்கெல்லாம் மிகுந்த பிரயோசனமுள்ள ஔஷத மிருக்கின்றதுந் தவிர அது சாதாரணமாய் வழங்கப்பட்ட ஒரு நேர்த்தியான பெலன் கொடுக்கிற மருந்தா யிருக்கின்றது.

நாககெந்தி-வஞ்சிக்கொடி, நேர்வாளம்

நா

நாகணம்-நேர்வாளம்
நாகதாளி-ஓர்பூண்டு
நாகதாளிகள்ளி-ஓர்கள்ளி

இது சில வருஷங்களுக்குமுன் 'கெபடியன்' 'நீலன்' என்பவரால் தென் அமெரிகா தேசத்திலிருந்துக் கெண்டுவந்து பயிர் செய்வித்ததாக விருக்கின்றது.

நாகெதாதி-நேர்வாளம்
நாகதேனி-பெருமருந்து
நாகமல்லி } அனிச்சம்
நாகமல்லிகை } அனிச்சம்
நாகமல்லி-ஓர்வேர்

புதுசாய் வெட்டிய இந்த வேரைச் சிதைத்து எலுமிச்சம் பழரசத்தோடு சேர்த்து படர்தாமரைக்கும் தோலைப்பற்றி வந்த சொறி சிரங்குக்கும் பூசினால் வியாதி நீக்கும்படியான மேலான பூச்சுமருந்தாக உபயோகிக்கப் படுகின்றது.

நாகம்-ஓர்பஞ்சலோகக் காரீயம்
நாழல் - புன்னைமரம்
நாகரங்கம்-தென்றோடை
நாகரங்-சுக்கு
நாகரி-குருக்கத்தி
நாகரு-குருக்கத்தி
நாகரும்-தோன்றோடை
நாகரேணு-செவ்வியம்
நாகரை-ஓர்பூண்டு
நாகவல்லி-வெற்றிலை
நாகவள்ளி-ஓர்வெற்றிலைக்கொடி
நாகினி-வஞ்சிக்கொடி வெற்றிலை
நாகுலி-அரத்தைகிரி புரண்டான்
நாகேசரம்-ஓர்செடி [பூ
நாக்குழிஞ்சான்-ஓர்செடி
நாசுகம்-பீர்க்கு
நாடி,

அசத்தியநாடி, சாத்தியநாடி, வாதநாடி, பித்தநாடி, சிலேஷ்மநாடி, தசநாடி.

நாட்டு சவுக்காரம்-ஓர் சவுக்காரம் வைத்தியர் இதை குன்மவியாதிக்குச்சேர்க்கப்பட்ட மருந்தில் சேர்க்கிறார்கள்

நாட்டு வாதுமைக்கொட்டை - ஓர் வாதுமைக்கொட்டை.

இது வைத்தியரால் பலவீனமானபேருக்கு இலேசான ஆகாரமா யோசிக்கிறார்கள்.

நாணல்-ஓர்புல்
நாணமுகப்புல்-ஓர்புல்
நாதவத்தம்-பெருநெருஞ்சில்
நாதேரம் - இந்துப்பு, வஞ்சிக்கொடி, சீந்தில்
நாதேனி-மணத்தக்காளி
நாபி-ஓர்விஷமூலிகை

அவை

வச்சநாபி, பச்சைநாபி, வசம்பு.

நாபியின் ஜாதிவிவரம்

1 - பிரமநாடி, 2-அந்தணநாபி, 3-சத்தியநாபி, 4-அரசநாபி, 5-வைசியநாபி, 6-குத்திரநாபி.

நிறங்கள்

அந்தணநாபி - வெண்மை
சத்திரியநாபி - செகப்பு

வைசியநாபி-நீலம்
சூத்திரநாபி-கறுப்பு
நாமம்-திருமணதும்பை
நாமவக்ஷம்-பெருநெருஞ்சில்
நாமவெகுண்டம்-ஒருபூண்டு

நாகணம் - உதரரோகம், சோகை, தலைகுத்தல், தலையிடிப்பு, தலைவலி, நீரேற்றம், மலட்டு, நோய் விழிநோயும்போம்.

நாகதாளி செடிவிஷங்கள்-செந்து விஷங்கள், வாதமும் போம்.

நாகமல்லி-அதிசாரம், இரத்தமும், குஷ்டம், குறல் கம்மல், சுவாசகாசம், சூடு, தேள்விஷம் நீரிழிவு பிரமியம், புகைச்சல் மதமூர்ச்சை மேகம், வண்டு விஷம், விந்துநஷ்டமும்போம்.

நாகம்-இருமல், ஈளை, கிரந்தி, சுவாசகாசம், சூலைமந்தாரகாசம், மூலரோகம், வட்டகாசங்களும் போம்.

நாட்சென்ற காடித்தெளிவுநீர்-அதிசாரம், அரோசி, கிராணி, நாடிநிமிரல், பித்தமும்போம் வரணவுடல் தெளிவு உண்டாம்.

நாட்டுக் கருவாழை - திரிதோஷம் போம்.

நாட்டுக்கரு வாழைக்கிழங்கு-சுரம், உண்டாம்.

நாணல்-துண்மாங்கிஷம்போம்.

நாணற்கரும்பு- அதிதூலநோய் ஈளை, பாண்டு, பித்தம், வயிற்றுள் நோய் வாந்தி, வாய்வும் போம்.

நாயுருவியிலை-கபம்தந்திமேகம் பேதி, மந்தம், மூலஉதிரம் வியர்வும் போம்.

நாயுருவிவிரை-பசிபோம்

நாயுருவி சமூலம்-மாதர் சூதக அழுக்கு போம், வங்க சிந்தூரம் உண்டாம்.

நாயுருவிவேர்-வசியமுண்டாம்

நாய்கடுகு-உதிரவாதம், குன்மம், சூதகவாய்வு, வாதவலியும் பேய்க்குப் புகையும் போடப்போம் மலக்கட்டு உண்டாம்.

நாய்த்துளசி-அழல், கபம்,குத்திருமல், முத்தோஷமும் போம் உடற்குப் பொழிப்பு உண்டாம்.

நாய்ப்பாகல்-பீநசம்போம், சாதிலிங்கசுத்தி, பாஷாண சுத்தியும் உண்டாம்.

நாய்வேளை உடற்கடுப்பு, காதிரைச்சல், சூலை, பீநிசம், வாதமும் போம் மலக்கட்டு உண்டாம்.

நாரத்தங்கச்சல் அரோசி, எரிப்புழு சீதம், வயிற்றுப் பொருமலும் போம் தாது தீபனமும் உண்டாம்.

நாரத்தங்காய் குன்மம், வாதம் வாலுள்ளபுழுவும் போம், தீபனம் தேகசுத்தமும் உண்டாம்.

நாரத்தம்பழம் - பித்தகுன்மம் போம் தாது தீபனமும் உண்டாம்.

நாருவடி சந்தி, சளி, நீரேற்றம், வாய்வு போம், தேக சுத்தி உண்டாம்.

நாரைக்கறி - நீரிழிபு போம், நாறு கரப்பான், புண் மேகம், வாதமும் உண்டாம்.

நாரைப்பசும்பால் முயல்நோய் போம்.

நாபிலூறும் நீர் - அதிசாரம், மேகமும்போம், ஐயம், சிதம், பலம், ஈந்தம், விந்து, வெப்பும் உண்டாம்.

நாவல்பட்டை-காசம், சுவாசம் பாலகர் கிரகதோஷம், பெரும், பாடு, பிறவிமறு, மச்ச பேதங்கள், வாய்நோய் போம்.

நாவல்பழம்-கடுப்பு கொதிப்பு, தாகம், நீரிழிவு, வாய்வு போம் ஐயம், கரப்பான், மாந்தமும்உண்டாம்.

நாவல்பூ-கமல விரணம், நீரிழிவு, மேகமும் போம், மலக்கட்டு உண்டாம்.

நாவல்வித்து கிராணி, நீரிழிவு மூலச்சூட்டின், கிராணிபோம்.

நாவல்வேர்-கரப்பான், சீதாத் தம் சுரம், நீரிழிவு, மேகம், வாதம், விரணமும்போம்.

நாவி-கபம், சூடு, குன்மம், தேள்விஷம், நீரிழிவு, மந்தம், வாதவலியும் போம், சுத்தி செய்ய வேண்டியது.

நாயகம்-தலைமை
கிரந்திநாயகம்-ஓர்பூண்டு
சன்னிநாயகம்-ஓர்பூண்டு
நாயநஞ்சி-நாயுருவி
நாயிறுதிருப்பி } பொழுது
நாயிறுவணங்கி } வணங்கி
நாயுருவிவேர்-ஓர்வேர்

சில வயிற்றுளைவு வியாதிக்குச் சுதேச வைத்தியர் மருந்தாகக் கொடுக்கிறார்கள்.

நாய்க்குருவி-நாயுருவி
நாய்க்கடுகு-ஓர்பூண்டு
நாய்க்கரந்தை-குன்றி
நாய்ச்சிரகம்-ஓர்பூண்டு
நாய்த்துளசி-ஓர்பூண்டு, கஞ்சாங்கோரை.
நாய்நாக்கு-இலைக்கள்ளி
நாய்ப்பயறு-ஓர்பூண்டு
நாய்ப்பாகல்-ஓர்பூண்டு
நாய்ப்புடுக்கன்-ஒருவகைமரம்
நாய்புகோல்-ஒருவகைபூண்டு
நாய்வேம்பு-ஓர்பூண்டு
நாய்வேளை-ஓர்பூண்டு, நாய்க்கடுகு
நாய்க்கடுகு-ஓர்பூண்டு [டை
நாரங்கம்-நாரத்தை, தேன்ரு
நாரத்தை } ஓர்மரம்
நார்த்தை }
நாரம்-நாரத்தை, பாசி
நாராயணம்-அரசமரம்
நாராயணி - தண்ணீர் விட்டான் கிழங்கு.
நாரிகேளம்-தென்னை
நாவி-கார்த்திகைப்பூ
நாவல்-ஓர்மரம்
நாவல்பட்டை-ஓர்மரப்பட்டை

இந்த பட்டையின் கஷாயம் சுதேச வைத்தியர் வயிற்றுக்கழிச்சலுக்கு உபயோகப் படுத்துகிறார்கள் கெட்டப்புண்களை இதனல்சுத்தி கரிப்புச்செய்யப் படுகின்றது.

அவை

குழிநாவல், சிறுநாவல், ஐம்புநாவல், நிழல்நாவல், பெருநாமல்
நாவிவசநாவி-ஊமத்தை
நாவிதண்டை-பிநாறி
நாவியம்-கார்த்திகைப்பூ
நாளகம்-இலாமச்சை
நாளிசம்-வள்ளைச்செடி
நாளினி-புளிப்புள்ளமாமரம்
நாலணு-சடைச்சிச்செடி
நார்ணு-சடைச்சி
நாறி-கற்றாளை
நாற்றம்-வசம்புகள்ளி

நி

நிகாவா-பிரமி
நிகும்பம்-நேர்வாளம்
நிக்குரோதம்-காட்டாமணக்கு
நிகாசம்-வெள்ளாம்பல்

நிசாடு-மஞ்சள்
நிசாயிசா-மரமஞ்சள்
நிபாபுட்பம்-செவ்வாம்பல்
நிசி-மஞ்சள்
நிசுளம்-நீர்க்கடம்பு
நிச்சள்-தாளி
நிச்சியம்-வெள்ளைப்பூண்டு
நிட்பவம்-மொச்சைப்பயறு
நிதகம்-நீர்முள்ளி
நிதிந்திகம்-கண்டங்கத்திரி
நித்திறம்-கண்டங்கத்திரி
நித்தில்-நொச்சி
நிமிளை-பஞ்சலோகத்தொன்று

இரசதநிமிளை, வெள்ளி வெண்கலநிமிளை, நிமிளை, கருநிமிளை, கருமாநிமிளை.

பொன்னிநிமிளை-சத்திநாதம்
லோகநிமிளை-துரைச்சி
நிம்பசேதம்-முடக்கற்றான்
நிம்பம்-வேம்பு
நியக்குரோதம்-ஆல்
நியாசம்-வேம்பு
நியாதம்-வேம்பு
நிரம்பியபுட்பம்-வாழை
நிர்க்குண்டி-நொச்சி
நிலஆவிரை-நிலவாகை
நிலக்கடிம்பு-ஒருவகைப்பூண்டு
நிலக்குமிழ்-ஒருவகைசெடி

நிலக்கொட்டை-ஒருவகைப் பூண்டு.

நிலப்பிருங்கி-ஒருவகைபூண்டு
நிலத்துளசி-ஒருவகைபூண்டு
நிலப்பனை-ஒருவகைபூண்டு
நிலப்பாகை-ஒருவகைபூண்டு
நிலம்-ஒருவகைபூண்டு
நிலம்கள்ளி - பூமி நிலம்பு, தாளி
நிலவரை-ஆவிரை நிலப்பாகல்.

கடைகளில் கிடைக்கும் நிலவாகை மிகவும் தாழ்ந்தரசக் காயும் பழம் இலைத்துள்கள், காம்புகள் முதலிய குப்பைகள் உள்ளதாயும் இருக்கின்றது. இந்தியாவில் முக்கியமாய் திருநெல்வேலி நாட்டில் வளரப்பட்ட இலை அபிதேசத்திலிருந்து வருகிற சென்னைக்கி அல்லது வக்காசென்னை என்னும் நிலவாகையிலும் விசேஷம் இலை. முழுமையாயும் சுத்தமாயும் முறியத் தக்கதாயும் வெளிரின் பச்சை அல்லது மஞ்சள் நிறமாயும் கடினவாடையுள்ளதாயும் இருக்க வேண்டும் அது பேதிக்கு மிகவும் நல்ல ஔஷதம். கொடுக்கவேண்டும் முறையாவது. நிலவாரை 1-அவுன்சு, சதைதகசுக்கு, கிறம்பு இவைகளை அரைப்புட்டி கொதிக்கிற தண்ணீரில்விட்டு ஒருமணி நேரம் வைத்திருந்து பின்பு வடிகட்டவும் இதில் ஒருநேரத்துக்கு 4-அல்லது 5-அவுன்ஸ்வீதம் கொடுக்கில் எல்லா மலபந்தங்களையும் நீக்கும், குழந்தைகளுக்கு மேற்சொன்ன அளவில் பாதியாவது அதிலுங் குறைத்தாவது கொடுக்கவும். இதைப்பார்க்கிலும் குழந்தைகளுக்கும் ஆமணக் கெண்ணெய் உத்தமம்.

நிலவிழுது-நிலப்பனை
நிலவிலா-ஒருவகைசெடி
நிலவுமாரி-ஒருவகைப்பூண்டு

நிலவேம்பு- ஒருவகைமருந்துப் பூண்டு,கிரியத்துவேர், என்பதின் கீழ்பார்க்க.

நிலாவிரை-ஒருவகைப்பூண்டு
நிறைகருதுறு-சீந்தில்
நின்றுசிணிங்கி-சிறியாநங்கை

நித்தியஅப்பியங்கனம்-அருசி, ஐயம், யோம்பல்,தந்தநோய்,முத்தோஷமும் போம், தோல் மினிமினிப்பு, புஷ்டியுமுண்டாம்.

நித்திரை செய்வதின் குணம்- இந்திரியஅசௌக்கியம். அயர்வும் போம், ஆயுள்விர்த்தி, மனமூர்ச் சாகமுமுண்டாம்.

நிமிளைவகை 4-க்கும், ஜன்னி ருட்சைதோஷம், மேகமும்போம் தாதுபுத்திவிவேகமுமுண்டாம்.

நிம்பவித்து - சர்த்தி, பித்தம், விக்கலும்போம், அறிவு, குளிர்ச் சியுமுண்டாம்.

நிலாஆவாரை- ஐயம், கிரந்தி, குன்மம்,சொறி,தேமல்,மலக்கட்டு மூலவாய்வு,வெப்பும்போம், பேதி யுண்டாம்.

நிலக்கடம்பு - ஆசிரணம், இர ணம், கிருமி, ஜன்னி நேத்திர நோய்பலவிஷம், மண்டையிலுண் டாகும் நீரும்போம்.

நிலக்குமிள் - கண் சோருதல், சல்லடைப்பு, கொட்டாவி, சீத ளம் பேதி, மாந்தம், வாதவலியும் போம் தாது திரேகக்குளிர்ச்சியு முண்டாம்கெர்ப்பம்வெளியாகும். நிலக்குராம்-கர்த்திபோம்.

## நீ

நீட்டினவிரல் குறித்தான் கிரந்தி நாயகம்.
நீத்தம்-தண்ணீர்விட்டான் கிழங்
நீபம்-கவண்கடம்பு
நீரடி அல்லது நீரொட்டிமுத்து } ஒருமருந்து வகைவிதை
நீரடைப்பு-ஒருவகைநோய்
நீரத்தி-ஒருவகைமரம்
நீரலறி-ஒருவகை நீர்ப்பூண்டு
நீராரை நீருளாரை } ஓர்ப்பூண்டு
நீருதிபாசம் கடற்பாசி
நீரெரிப்பு-ஓர்நோய்
நீரொட்டி-நீராரை
நீரோகம்-தாமரை
நீர்சலம்-தண்ணீர்

### அவை.

இளநீர், உமிநீர், குடிநீர், குளி நீர், சிறுநீர், தென்னீர், சிநீர், சுவேதநீர், ஜெயநீர், சுண்ணும்பு, நவாச்சாரமுங் கலந்து பனியில் வைத்திறக்கிய நீரென்பதாம்.

### தண்ணீர்.

இது ஒரு எடை மருந்தல்லா திருக்கினும் எல்லாத் தேசங்களி லும் கிடைக்கப்பட்டதா யிருப்ப தால் அதின் ஔஷதப் பிரயோ கங்களில் சிலவற்றைக் காட்டு கின்றோம்.

ஒரு பிராயமான மனிதனுக்கு சஷனியாவது சன்னிவலியாவது தளர்ச்சியாவது அறிவுகேடாவது அசதிசன்னியாவது உண்டாவிரு ப்பதற்கும் சூரியனுடைய காந்தி கொண்டு மூர்ச்சையடைந்து விழு ந்துபோவதற்கு இரண்டு மூன்று அல்லது பெரியசட்டிகளின் அதிக குளிர்ச்சியான சலத்தைத் தயார் செய்து வைத்துக்கொண்டு வியா திக்காரனுடைய தலையின்மேலும் தோள்மேலுமிருக்கிற சிலைகளை எடுத்துவிட்டுத் தலையின்மேலுள் ள உரோமத்தைச் சவரம் பண் ணுவதுஉத்தமமானதால் அப்படி செய்வித்து அவனை உட்காரவை த்து ஒருவன் அவனைப்பிடித்துக் கொள்ளவேண்டும். மற்றொருவன் ஒரு உயர்ந்த நாற்காலி அல்லது திண்ணையின்மேலேறி சட்டிகளி லிருக்கும் குளிர்ந்தசலத்தை நோ யாளியின் தலையின்மேலும் முது கின்மேலும் பெருந் தாரையாய்

விடவும் வேண்டும் ஒன்றிரண்டு மினிட் நேரங்கழிந்தபின்பு வியாதிக்காரன் பெருமூச்சுவிடும்பொழுது தாரையை நிறுத்தி ஈரமில்லாத இடத்தில் மாற்றி அணலில் வெதுப்பிய சிலையால் தேகத்தை துடைத்து கை, தோள், கால் முதலிய பக்கங்களைச் சூடுண்டாகும்படி தேய்க்கவேண்டும், சுவாரணை கேடு மிகுதியாயுண்டாயிருக்கில பாதங்களிலும் கெண்டைச் சதைகளிலும் சடுகு போல்ட்டீசை வைத்துக் கட்டவேண்டும். சவுக்கியமாகிக் கொஞ்சநேரமான பின்பு மறுபடியும் சன்னிவலிசுவாரணை கேடுவருமாகில் முன்செய்ததுபோல் தலையிலும் முதுகிலும் சலத்தைவிடவேண்டும் சலம் அவ்வளவையும் ஒருதாரமாய் விடாமலும் தலையின்மேல் விசையாய் விழும்படிஊற்றுமலும்சிறுதாரையாய் தொடர்ந்து விடவேண்டும் வியாதிக்காரனுக்கு உணர்ச்சியுண்டானபின்பு தாரையிடக்கூடாது. ஆனால் இப்படி செய்வது மிகுதியாய் வயதுசென்றவர்களும்பலட்சயமுள்ளவர்களுக்குந் தக்கதல்ல பிணியாளி பெண்ணுபிறந்து அவளுக்கு மேற்படி சன்னிவலி முக்கியமாய்ச் சிரிப்பும் அழுகையும் கூடியிருந்தால் சலத்தைம் தலையின்மேல் முன்சொன்னபிரகாரம் உயரத்தில் நின்று விடுகிறதைப் பார்க்கிலும் கைநிறையத் தண்ணீரைக்கோரி முகத்திலும் மார்பிலும் உறைப்பாயடிக்கவும் இவ்விதமாய் மூன்று நான்கு நேரஞ் செய்தால் சன்னியை நிறுத்தும் சலத்தை மெல்லெனத் தெளிக்காமல் சற்றே உறைப்பாயடிக்கவும் ன்னிவலியுண்டாயிருக்கிற ஸ்திரீகளுக்கு சூதகம் இருக்கிறபொழுது மேற்சொன்னபடி குளிர்ந்த சலத்தைப் பிரயோகிக்கக் கூடாது,

சிசுக்களுக்கும் சிறுபிள்ளைகளுக்குவருகிற சன்னிவலிக்கு கலப்பிரயோகத்தை வேறு விதமாய்ச் செய்யலாம் சன்னி ஆரம்பித்தவுடன் ஒருபாத்தசட்டியாவது தொட்டியாவது நிறைசகிக்கத் தக்கதான சலத்தைவிட்டு அதில்குழந்தையின்தேக முழுதையும் தாழ்த்தி தலையை நிமிர்த்தி வைத்து அதின்மேல் குளிர்ந்த ஜலத்தில் நனைத்த சீலையை இட்டுவைக்கவேண்டும்தேகம்சுடும் தண்ணீரிலிருக்கும்பொழுது தலைமேல்குளிர்ந்த ஜலத்தில் நனைத்த சீலையை வைப்பதினல் சன்னிவலியை நிறுத்தும் ஆனல்உடனே ஒருபேதிக்கு ஆமணக்கெண்ணெய் கொடுப்பது நலம் குழந்தையை 5 முதல் 10-மினிட்டு நேரம்வரை சுடுதண்ணீரில் வைத்திருக்கவேண்டும் அப்போது தலையில் குளிர்ந்த ஜலமுள்ள சீலையை மாத்திரம் சில மணிநேரம் வரை எடுக்காமல்வைத்திருக்கவேண்டும் இந்தக்கிரியைத்தினந் தோறும் மூன்று நாலுதரம் சன்னி மறுபடியும் வரும் போதெல்லாம் செய்யலாம் பின்பு கால்களில் கடுகு போல்ட்டீசை சிறிதாய்ச்செய்துவைத்து 5-மின்னிட்டுநேரஞ்சென்றபின் எடுத்துவிடவும் தாமசியாமல் வயிற்றை நன்றாய்ச் சுத்தி பண்ணுவதும் பெரியகாரியம்குழந்தைகளைச்சுடு தண்ணீரில் குளிப்பிக்கிறது அவர்களுக்குவரும் வயிற்றுவலியைச் சாந்தி பண்ணுதலுக்கும், உபயோகமாயிருக்கும்.

வாந்திபேதிக்கு குளிர்ந்தசலம் மிகுந்த சிரேஷ்டமானதாயிருக்கின்றது, நோயாளி வேறே எந்த ஔஷதம் உட்கொண்டுவருகிலும் குளிர்ந்தசலத்தைத் தேவையான மட்டும் எப்பொழுதுங் குடிக்கக் கொடுக்கலாம் நோயாளிக்குத்தாகமிருக்கும் பொழுது தண்ணீர் அதிகமாய்க் கொடுக்கப் படாதென்று கட்டுப்பாடுசெய்கிறது மிகுந்தகெட்ட வழக்கமாயிருக்கிறது சலம் எவ்வளவு குளிர்ச்சியாயிருருக்கிறதோ அவ்வளவுநலம்வியாதிக்காரன் அவன் மனம்போலே தேவையானமட்டுங் குடிக்கும்படியாய் அவன் பக்கத்தில் ஒரு சட்டியில் சலம் வைத்திருக்கவேண்டும். இப்படிக் குடிக்கும்படி செய்வது மற்ற மருந்துகளின் தொழில்களுக்கு உதவிசெய்வதுமன்றி வாந்தியினலும் பேதியினலும் போய் விடுகிறது சலத்துக்குப்பதிலாக சரீரத்தில் சேரும்படி சொல்லுகின்றது.

பிரசவமானபின்பு மிகுதியான இரத்தப் பாய்ச்சலுண்டாகில் உடனே அதிக குளிர்ச்சியான சலத்தை வயிறு அடிவயிறு முதலிய தலங்களின்மேல் சற்றேஉயர்த்திவிட்டு ஒருமெல்லிய சீலைத்துண்டை குளிர்ந்த சலத்தில் நன்ருய் நனைத்து உபஸ்தேதினுள் செலுத்தி வைக்கவேண்டும். மேற்படி சீலையை அடிக்கடிமாற்றி இடுகிறதுமன்றி அதைச் சுருட்டுகிறது வாழைப்பூபோன்ற மாதிரியிலிருருக்கவேண்டும் காடி ஆசாரயிருக்குமாகில் அதில் ஒருபங்கு சலத்தில் ஒருபங்குஞ்சேர்த்து தனிச் சலத்துக்குப் பதிலாக எடுத்துக் கொள்ளலாம் இவை இரண்டும் கூடியமட்டுங் குளிர்ச்சியாயிருக்க வேண்டும் மேற்சொன்ன இரத்தப்பாய்ச்சல் நின்ற பின்பு சீலையைச் சலத்திலாவது காடி கலந்த சலத்திலாவது நனைத்து அடிவயிற்றின்மேல் இடுவது நல்லதாயிருக்கின்றது பிரசவ சமயங்களில் எப்பொழுதும் இரண்டு மூன்று சட்டிகள் நிறைய குளிர்ந்த சலம் பக்கத்தில் வைத்திருக்க வேண்டும். இப்படி செய்யா விட்டால் கிணறு அல்லது ஆற்றில் நின்று சலத்தைக் கொண்டுவா அப்போது தாமசப்பட்டு இரத்தம் ஏற்றமாய்போய் வியாதிக்காரி மரணமடைவதற்கு ஏதுவாம், ஆகிலும் இரத்தம் கிரமமாய் அல்லது சற்றுமிகுதியாய் போவதற்கு இவ்விதக் குளிர்ச்சியான பிரயோகங்களைச் செய்யாமலிருக்கும்படி ஞாபகமாயிருக்கவேண்டும்.

பக்கப்பிளவைகளுக்கும் தசையழுகிய புண்களுக்கும் கீழ்ச்சொல்லியிருக்கிறபடி சலத்தை விடுகில் மிகுந்த உபயோகமாயிருக்கும் வியாதிக் காரனின் மனம்போல குளிர்ந்தசலமாவது செந்நீராவது இரண்டுமூன்று சட்டிகள் நிறைய எடுத்து வைத்துக் கொண்டு அதை ஒரு செம்பிலாவது கெண்டியிலாவது எடுத்துப் புண்ணின்மேல் தொடர்ந்ததாரையாய்விடவேண்டும். இப்படி தினந்தோறும் இரண்டுதரஞ் செய்ய வேண்டும். இதனால் மிகுந்த அசறு எடுக்கப்படுகிறதுமன்றி சில நாளானவுடன்புண்சவுக்கியப்பட ஆரம்பிக்கும் புண் காலிலாவது கையிலாவதிருக்குமாகில் நோ

யாளிதான் தானே சலத்தைவிட்டுக்கொள்ளலாம். மூதுகிலாவது கழுத்திலாவது உண்டாயிருக்கில் வேறே ஒரு மனிதனைக்கொண்டு செய்விக்கவேண்டும். சலத்தைப் புண்ணின்மேல் ஒன்றிரண்டு அடி உயரத்தில் நின்றுவிடவேண்டும். அசறு முற்றும் நீங்கி புண் சிவப்பாயும் சவுக்கியமாகிற லட்சண முடையதாயும் காணும்பொழுது சலத்தை நிறுத்தி புண்களில் மெழுகு பிளாஸ்திரியை இடவேண்டும் சலம் விடுகிறது குறைந்தாலும் ஒரு மணிநேரம் வரையும் வேண்டும் இடைநேரங்களில் கள் சேர்ந்த போல்ட்டீசை வைத்துக் கட்டவும்.

மூத்திரம் போகாமல் தடைபட்டிருக்கிறதற்கு சீலையைச் சுடுதண்ணீரில் தோய்த்து வியாதிக்காரன் சகிக்கத்தக்கதான சூடுடனே வயிற்றின்மேலும் அடிவயிற்றின்மேலும் இட்டு ஆறிப்போகிற பொழுதெல்லாம் வேறே ஒரு சீலையைச் சுடுதண்ணீரில் தோய்த்து இப்படி அடிக்கடி மாறி மாறி இடவேண்டும். இனியொரு பிரயோகம் எப்படி யென்றால் ஒரு தொட்டியாவது பரந்திருக்கப்பட்ட பெருஞ் சட்டியாவது கிடைக்குமாகில் அதில் சுடுதண்ணீரைவிட்டு நோயாளியைப் பார்த்து அல்லது இருபதுமின்னிட்டு நேரம் உட்காரவைத் திருக்கவேண்டும். இப்படிச் செய்தால், மூத்திரம் உடனே போகும்.

தொலி சூடாய் வரண்டும் வாயுலர்ந்தும் தாகம் அதிகமாயும் இவ்விதமான இலட்சணங்களுடன் இருக்கும் சுரங்களுக் கெல்லாம் நோயாளி அரிசிமாவைக்குளிர்ந்த சலத்தில் கலக்கியாவது எலுமிச்சஞ் சாறுவது செழிப்பாய்க் குடிக்கவேண்டும். அப்பொழுது நன்றாய்க் குளிர்ந்திருக்கும் சலத்தினால் தையலே அடிக்கடி நனைத்து வைத்திருக்கவேண்டும்.

வைசூரி சிச்சிலுப்பை என்னப்பட்ட சிறு வைசூரி முதலிய வெடிக்குஞ் சுரங்களுக்குத் தண்ணீரைத் தேவையானமட்டும் குடிக்கக் கொடுக்கிறதுமன்றி வெந்நீரிலாவது ஒருபங்கு காடியும் மூன்றுபங்கு சலமும் கலந்த நீரிலாவது மெல்லிய சீலை அல்லது கடற்காளானை நனைத்து தேகம்முழுதும் பதமாய்க் கழுவுகின்றது மிகுந்த சாந்தமும் சவுக்கியமு முள்ளதா யிருக்கின்றது. வியாதிக்காரனுக்கு வெந்நீரைவிட குளிர்ந்தசலத்தை எடுத்துக்கொள்ள வேண்டும் இவ்விதமாய் தினந்தோறும் 1-அல்லது 2-தரம் தாராளமாய்ச் செய்யலாம்.

தொண்டைப் புண்களுக்கு சுடுதண்ணீரின் ஆவியை உள்ளுக்கு சுவாசம் வாங்கினால் அதிக குணமுண்டாகும். ஆனால் சளித் தன் தன்மையுள்ள வெண்டைக் காய்களில் 12-அல்லது அதிலதிகமெடுத்துத் துண்டுகள் செய்து சலத்தில் வேகவைத்து அந்தச் சலத்தின் ஆவியை சுவாசம் வாங்கினால்பலனை திகரிக்கும் மேற்படி சலத்தை வாய் சுருக்கின பாத்திரத்தில் விட்டு அதனாவி தொண்டையினுள் நன்றாய்ச் செல்லும்படி வாயை பாத்திரத்தின் வாயின்மேல் அடுத்துவைத்துச் செய்யவேண்டும்.

சுடுதண்ணீர் ஒற்றிடம் புதிய விப்புருதிகள் பருக்கள் சுளுக்கு குன்மவாயு, குடல்வலி, சுவாச காசம், சுவாசமூட்டுகளுடனிருக்கும் கடினமான இருமல் இவ்விதமான அனேக வியாதிகளுக்கு மிகுதியாய்உபயோகித்திருக்கின்றது அதைச் செய்யும் சரியான விதமெப்படியென்றால் ஒற்றிடவேண்டும் ஸ்தலத்தைமூடத் தக்க அளவுக்கு சற்றே அதிகமும் கனமுமாக விஸ்தாரமாய்ச் சீலைகளை மடித்து நோயாளி சகிக்கத்தக்க சூடுள்ள சலத்தில் நனைத்து சலம் வடியாமலிருக்கும்படி பிழிந்துவிட்டு இடவேண்டிய பக்கத்தில் வைத்துக்கொண் டிருக்க வேண்டும். 2-அல்லது 3-மினிட் நேரஞ்சென்று சூடு ஆறுமுன் வேறே ஒரு சீலையை முன்போல் பக்குவஞ் செய்து வைத்துக் கொண்டு ஆறினசீலையை எடுத்துவிட்டு இடைவிடாமலுடனே அதை இடவேண்டும். இவ்விதமாய்க் கால்மணி அல்லது அரைமணிநேரம் வரை சூடாக மாறி மாறிச் செய்யவேண்டும். கடினமான தலைநோய்களுக்கும் இந்தச் சுடுதண்ணீர் ஒற்றிடம் மிகுந்த குணத்தைக் கொடுக்கும் பிரவசமானபின் உதிரநீரை நன்றாய்ப் போக்குவதற்கும் அதைப் பலனுடனே பிரயோகிக்கலாம்.

நெடுநாளாயிருக்கும் வாதம் ஒன்றாலும் வாசியாகாத தோல் வியாதிகள் கால்கை மூட்டுகளின் வலி ஆரம்பிக்கிறநீரிழிவும் மகோதரமும் மற்றும் தொனி வரண்டு சரசரப்பாயிருக்கும் வியாதிகளுக் கெல்லாம் சுடு தண்ணீர் ஆவியைப் பிடிக்கில் மிகுந்த பலனுண்டாகும் மேற்படி வியாதிகளோடுகூட சுரமுண்டாயிருந்தால் இந்தப் பிரயோகஞ் செய்கிறது புத்தியல்ல.

சாதாரணமாய்க் கோழிகளையும் கோழிக்குஞ்சுகளை மடக்கப்பட்ட கோபுரம் போன்ற மாதிரியில் ஒரு பருத்த கூட்டை தயார் செய்ததின் உச்சத்தில் ஒரு மனிதனுடைய தலை தாராளமாய் செல்லும்படியாய் வட்டத்தில் ஒரு துவாரத்தை உண்டுபண்ணி இந்தக் கூட்டினுள் ஒரு நாற்காலியை யிட்டதின்மேல் வியாதிக்காரன் இருந்துகொண்டு தலையையும் முகத்தையும் கூட்டின்மேல் துவாரத்தில் வெளியே வைத்துக் கொள்ளவேண்டும் பின்பு அந்தக் கூட்டை கனத்த கம்பளிகளால் பொதிந்து அவைகளின்மேல் ஓரங்களை வியாதிக்காரனின் கழுத்தைச் சுற்றி செருகி இவ்விதமாய் ஆவி வெளியேபோகாமல் எத்தனஞ் செய்துகொண்டு அப்பால் ஒருசட்டி கொதிக்கிற சலத்தைக் கூட்டினுள் வியாதிக்காரனின் கால்பக்கத்தில் வைக்க வேண்டும்.

இப்படிச் செய்வதி விருக்கவேண்டும் நோக்கங்க ளிரண்டாகும் எவையெனில் முதலாவது வியாதிக்காரன் இருக்கப்பட்ட கூட்டினுள் நின்று ஆவி சற்றும் வெளியில் போகாமல் இருக்கும்படியாகவும் இரண்டாவது நோயாளிதன்னுடையதலையைக் கூட்டின் துவாரம்விட்டு நன்றாய்வெளிப்படுத்தி ஆவியை அதிகமாய் சுவாசம்வாங்காம லிருக்கும்படிக்குக்கழுத்தை சுற்றி கம்பிளிகளை நன்றாயடைத்

துச் சொருகி வைப்பது மானதாயிருக்கின்றது மேற்சொன்ன பிரகாரம் நோயாளி ஆவியைக்கொண்டபின் உடனே வேர்வை யுண்டாகஆரம்பிக்கும் அப்புறம் ஏறக்குறைய கால்மணிநேரஞ் சென்றபின் வியாதிக்காரன் கூட்டைவிட்டு வெளியில்வந்துடனே உலர்ந்தசீலையால் வெயர்வை முழுதையும் நன்றாய்த் துடைத்துத் தேகத்தில் குளிர்ந்த காற்றுக்கொள்ளாமல் இருக்கவேண்டும்.

நீர்கூட்டை-குளவட்டை

அட்டைகளைத் தகுந்த வியாதிகளுக்குத் தக்க சமயம் பார்த்து முறையாய்விடுகில் அநேகவியாதிகளுக்கு உபயோகமா யிருக்கும். ஆனால், அவைகளை விடுகிறதில் சாக்கிரதை அவசிய மானதாயிருக்கிறது.

அவைகளைக் கடிக்கப்பண்ணுவதற் கிரண்டுமாதிரியுண்டு. முதலாவது ஒவ்வொரு அட்டையாக கையில்பிடித்து வேண்டிய துகையளவும்கடிக்கவிடவேண்டும் இது மிகுந்தசலிப்பும் தாமதமுமுள்ள விதம். மற்ற நல்லமாதிரி எப்படியென்றால் தேவையான அட்டைகளை ஒரு கிளாசு பாத்திரத்திலாவது கோப்பையிலாவது இட்டுக்கடிக்கவேண்டிய ஸ்தலத்தில் கவிழ்த்துப் பிடித்திருக்க வேண்டும். சற்றுநேரஞ் சென்றபின் அதை நீக்கினால் அட்டைகள் கடித்துக் கொண்டிருக்கிறதைக் காணலாம். கிளாசு பாத்திரமாவது கோப்பையாவது ஆசரில்லாவிட்டால்முதற் சொன்னபடி ஒவ்வொரு அட்டையாகக் கையிற் பிடித்து கடிக்கவேண்டிய ஸ்தலம் தப்பாமல்விடவேண்டும்.

குழந்தைகளின் வயசுக்குத் தக்க அட்டையில் எண்ணம் நிதாய்த்துச் சுடுதண்ணீரால் நன்றாய் கழுவித் துடைத்துப் பின்பு விடுகில் உடனே கடிக்கும். இப்படிச் செய்தும் உடனே கடியாவிட்டால் 15-அல்லது 20-மினிட்டு நேரம் உலர்ந்த அழுக்கில்லாத சீலையில் விட்டு மேலுள்ள இரத்தத்தைப் போக்கின பின்பு விடவும். இதினும் கடியாவிட்டால் தாலிமேற் பாலைத் தடவியும், அதின்பின்னுங் கடியாவிட்டால் கொலிமோற்கொஞ்சங் கீறி அதில்நின்று வரும் இரத்தத்தைக் கடிக்கவேண்டியது ஸ்தலமுழுதும் பூசியும் விட்டாற் கடிக்கும எந்த விதங்களிற் கடியாமலிருக்கினும் கடைசிப்பிரயோகத்தால் நிச்சயமாய்க் கடிக்கும்.

அட்டைகள் இரத்தங் குடித்து 15-அல்லது 20-மினிட்டு கழிந்தபின் விழாவிட்டாலும் வேண்டிய போது அவைகளை நீக்கிவிடவேண்டுமானாலும் கொஞ்சம் உப்பைத் தூவவாவது செய்தால் உடனே விழும்.

அட்டைகடித்த முறிவில்நின்று இரத்தம் போன போதாதிருந்தால் சுடுதண்ணீரால் ஒற்றிடம் கொடுக்கவேண்டும்.

இரத்தம் மிகுதியாய்ப் போகிறதை நிறுத்தவேண்டுமானால் முறிவின்மேல் விரலா லழுத்தி படிகாரத் தூளையாவது வைக்கவேண்டும்.

அட்டைகள் மூலத்துவார மூக்கின் துவாரம் மற்றேழுத் துவாரத்தினுள்ளாவது ஏறிவிட்டால் உப்புத் தண்ணீராவது காடியா

வது உள்ளுக்குச் செலுத்த உடனே விழும்.

முக்கியமாய் கழுத்தில் பொருமிக் காணும் நரம்பின்மேல் அட்டைகள் விடக்கூடாது.

வலியுள்ள கட்டிகளின் மேல் விரலை வைக்கும் பொழுது நாடியடிக்குமானால் அதின்மேல் அட்டைகளை விடாமல் அவற்றின் சுற்றில் சற்றுதூரம் தள்ளிவிடவேண்டும்.

கண்ணிமைகளிலாவது ஸ்திரீகளின் ஸ்தலனத்திலாவது ஆண்குறித்தொலியின் மேலாவது பீசத்திற்கு மேலாவது அட்டைகளை விடுகிற சில சமயத்தில் எரிவந்தமுண்டாகுமாதலால் அந்த ஸ்தலங்களில் விடக்கூடாது.

குழந்தைகளுக்கு அட்டைகளை விட்டால் பிராயமானவர்களைப் பார்க்கிலும் மிகுதியாய் இரத்தம் போம் ஆனதால் மிகுந்த பத்தியம்வேண்டியிருக்கிறது எப்பொழுதும் அட்டைகளை தேகத்தில் எவ்விடங்களிற் கூடியமட்டும் மாமிசம் குறைந்து எலும்பு மேற்பட்டிருக்கிறதோ அந்த ஸ்தலங்களைப்பார்த்து விடவேண்டும் இப்படிச் செய்கிற ஒருவேளை இரத்தம் விடாமற் பாயுமாகில் அதை நிறுத்தும் பொருட்டாய் அழுத்திப் பிடிக்கிறதற்கு இசைவாயிருக்கும் எப்பொழுதும் குழந்தைகளுக்குக் காலையிலவிடவேண்டும் சூரியன அஸ்தமித்த பின்பு ஆனால் இராத்திரி எல்லாரும் தூங்கும் சமயத்தில் கடி வாயில் நின்று அதிக இரத்தம் பாய்ந்து குழந்தைகள் மறிக்கிறதற்கு ஏதுவாயிருக்கும்.

அட்டையை விடவேண்டிய பக்கத்தில் சவக்காரத்தை தெளிக்க அவசியமானதால் கீழ் எழுதியபடி செய்யவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| 6-மாதத்திற்கு கீழ்பட்ட குழந்தைக்கு | | 1-அட்டை | |
| 1-வயசுக்கீழ் | ,, | 2 | ,, |
| 2 ,, | ,, | 3 | ,, |
| 3 ,, | ,, | 4 | ,, |

தலைநோவுடன் வரும் சுரங்களுக்கு அட்டைகள் மிகுந்த பிரயோசனமாயிருக்கின்றன வியாதியின் துவக்கத்தில் பிணியாளி வாலிபனும் பெலவானுமிருப்பானாகில் நெற்றியொன்றில் 4-அல்லது 6-அட்டை விடவேண்டும் பிடரியின் மேற்பக்கத்திலும் கடிக்கவிட்டால் அதிக குணம் கொடுக்கும் சுரத்துடனே மார்பிலும் வயற்றிலும் கடினமான வலிகளுக்கு 8-அல்லது 10-அட்டைகளை உடனே வலியின்மேல் விடவேண்டும்.

மூலமுளையின் ரத்தப்போக்கு நின் காரணத்தால் வரும் தலைவலிக்கு மூலத்துவாரத்தினருகே அட்டையைக் கடிக்கப் பண்ணினால் குணப்படும் அட்டைகள் மூலத்துவாரத்தினுள் ஏறி போய் விடாமல் எச்சரிக்கையாயிருக்கவேண்டும் சூதகம் சடுதியாய் நின்றக் காரணதாலுண்டாகும் தலைநோவுக்கு அட்டைகளை உள்துடையில் விடவேண்டும்.

விப்புருதிகள் பருக்கள் அரையாப்புகள் நசிவுகள் சுளுக்குகள் அடிகள்.

மற்றும் தொலிமேல் வரும் இரத்தச்சுரப்புகள் இவைகளின்

ஆரம்பத்தில் வலியுங் கூடும் அதிகமாயும் பொழுது 6-அல்லது 8-அட்டைகள்விட்டுச் சுடு தண்ணீரால் ஒற்றிடம் கொடுத்தால் வலி தீர்ந்து வியாதியைப் போக்கும் அரையாப்புகளுக்கு முக்கியமாய் ஆரம்பத்தில் அதிக வேதனையாய் இருக்கிறது பொழுது பிரயோசனமாம்.

கக்கிருமல் தொடங்கினபொழுது பிடரியின் மேற்பக்கத்தில்அட்டைவிட்டால் மிகுந்த பலவானுயிருக்கும் செய்யவேண்டியமுறையெப்படியெனில் குழந்தைகளின் வயசு ஒன்றுக்கு ஒவ்வொரு அட்டைவீதம் முறையாய்க்கூட்டி 6-வயசுவரை விடலாம் அப்புறம் எத்தனை வயதாயிருக்கினும் 6-அட்டையே போதுமானதா யிருக்கிறது.

ஆனதால் இப்படிவிட்டு அட்டைகள் விழுந்தபின் ஒரு கடுகுப்போல்ட்டீஸ் ஆவது ஒரு சின்ன பிஸ்டர் ஆவது செய்து கடிவாயைவிட்டுவிட்டு இரண்டு தோள் பட்டைக்கும் நடுவில் வைத்துக் கட்டவேண்டும் அட்டைகளையும் கடுகுப் போல்ட்டீசையும் மறுபடியும் அவசியம்போல் இட்டுக் கொள்ளவேண்டும்.

அனேகவிதகண்ணோய்களுக்கு அதிககூடும் வலியும் வீக்கமும் சிவப்பும் இருக்கிற பொழுது 4-அல்லது 6-அட்டைகளைக்கடைக் கண்களின் அருகே இருக்கும் பொட்டுகளில் யிட்டால் பலன்களைக் கொடுக்கும்.

நீர்க்கடம்பு-ஓர்மரம்
நீர்க்கமல்லி-இல்லி
நீர்க்கமல்லி-இல்லி
நீர்க்குஷ்டம்-ஓர்நோய்
நீர்க்குண்டி-வெண்ணொச்சி
நீர்க்குளறி-ஓர்நீர்ப்பூண்டு, கல்லாச்செடி.
நீர்க்கும்பி-நீர்முள்ளி
நீர்க்குறிஞ்சா-ஓர்பூண்டு
நீர்க்கோவை-ஓர்நோய்
நீர்ச்சங்கு-ஓர்பூண்டுசங்கு
நீர்சின்னி-ஓர்பூண்டு
நீர்ச்சுண்டி-கொட்டிநெட்டி
நீர்ச்செம்பை-ஓர்செடி
நீர்நொச்சி-ஓர்செடி

இது தண்ணீர்சமீபத்தில்வளர்கின்றது இதன் தளிரும் இலையும் கசப்புள்ளதாயும் சுகந்தமுடையதாயுமிருக்கின்றது இதை சுதேசவைத்தியர் பலமாய் வற்றப்பண்ணுகிற அல்லது வடிவிக்கிற மருந்தாக யோசிக்கிறார்கள் வாதம்சுளுக்கு வாதப்பிடிப்பு முடக்கு விரை வீக்கம் இவைகளுக்குச் சுடுகையாய் ஒற்றடம் செய்து காட்டுகை பற்று இவ்விதமாக உபயோகப் படுத்தப்படுகிறது. இந்தஇலைகளை யிடித்து காயத்திற்கு கட்டுகிற நல்லதாயும் மாற்று மருந்தாகவும் யோசிக்கப் படுகின்றது. இதன் காய் அல்லது பழம் சிறியதாகவும் கசப்பாகவு மௌஷதமாகவு மிருக்கும் அது பலமான மண்டைவியாதிக்குமருந்தாகவும் மாதவிடாயை அதிகப்படுத்துகிற குணமுடைய மருந்தாகவும் வைத்தியர் யோசிக்கிறார்கள் திமிர்வாதம் அவயவ பெலயீன முதலாகியவைகளுக்கு சூரணமாயும் கஷாயமாயும் லேகியமாயும் கொடுக்கப் படுகின்றது. வட இந்துஸ்தானியில் இதனிலைகள் தலைநோய் சிரசில் நீரேற்றம்

வது உள்ளுக்குச் செலுத்த உடனே விழும்.

முக்கியமாய் கழுத்தில் பொருமிக் காணும் நரம்பின்மேல் அட்டைகள் விடக்கூடாது.

வலியுள்ள கட்டிகளின் மேல் விரலை வைக்கும் பொழுது நாடியடிக்குமானால் அதின்மேல் அட்டைகளை விடாமல் அவற்றின் சுற்றில் சற்றுதூரம் தள்ளிவிடவேண்டும்.

கண்ணிமைகளிலாவது ஸ்திரீகளின் ஸ்தலனத்திலாவது ஆண் குறித்தொலியின் மேலாவது பீசத்திற்கு மேலாவது அட்டைகளை விடுகிற சில சமயத்தில் எரிவந்தமுண்டாகுமாதலால் அந்த ஸ்தலங்களில் விடக்கூடாது.

குழந்தைகளுக்கு அட்டைகளை விட்டால் பிராயமானவர்களைப் பார்க்கிலும் மிகுதியாய் இரத்தம் போம் ஆனதால் மிகுந்த பத்தியம்வேண்டி யிருக்கிறது எப்பொழுதும் அட்டைகளை தேகத்தில் எவ்விடங்களிற் கூடியமட்டும் மாமிசம் குறைந்து எலும்பு மேற்பட்டிருக்கிறதோ அந்த ஸ்தலங்களைப்பார்த்து விடவேண்டும் இப்படிச் செய்கிற ஒருவேளை இரத்தம் விடாமற் பாயுமாகில அதை நிறுத்தும் பொருட்டாய் அழுத்திப் பிடிக்கிறதற்கு இசைவாயிருக்கும் எப்பொழுதும் குழந்தைகளுக்குக் காலையிலவிடவேண்டும் சூரியன அஸ்தமித்த பின்பு ஆனால் இராத்திரி எல்லாரும் தூங்கும் சமயத்தில் கடி வாயில் நின்று அதிக இரத்தம் பாய்ந்து குழந்தைகள் மறிக்கிறதற்கு ஏதுவாயிருக்கும்.

அட்டையை விடவேண்டிய பக்கத்தில் சவக்காரத்தை தெளிக்க அவசிய மானதால் கீழ் எழுதியபடி செய்யவேண்டும்.

6-மாதத்திற்கு கீழ்பட்ட குழந்தைக்கு 1-அட்டை

| | | |
|---|---|---|
| 1-வயசுக்கீழ் | ,, 2 | ,, |
| 2 ,, | ,, 3 | ,, |
| 3 ,, | ,, 4 | ,, |

தலைநோவுடன் வரும் சுரங்களுக்கு அட்டைகள் மிகுந்த பிரயோசனமாயிருக்கின்றன வியாதியின் துவக்கத்தில் பிணியாளி வாலிபனும் பெலவானுமு மிருப்பானுகில் நெற்றியொன்றில் 4-அல்லது 6-அட்டை விடவேண்டும் பிடரியின் மேற்பக்கத்திலும் கடிக்கவிட்டால் அதிக குணம் கொடுக்கும் சுரத்துடனே மார்பிலும் வயற்றிலும் கடினமான வலிகளுக்கு 8-அல்லது 10-அட்டைகளை உடனே வலியின்மேல் விடவேண்டும்.

மூலமுளையின் ரத்தப்போக்கு நின் காரணத்தால் வரும் தலையிடிக்கு மூலத்துவாரத்தினருகே அட்டையைக் கடிக்கப் பண்ணினுல் குணப்படும் அட்டைகள் மூலத்துவாரத்தினுள் ஏறி போய் விடாமல் எச்சரிக்கையா யிருக்க வேண்டும் ருதுகம் சடுதியாய் நின்றக் காரணத்தாலுண்டாகும் தலைநோவுக்கு அட்டைகளை உள் துடையில் விடவேண்டும்.

விப்புருதிகள் பருக்கள் அரையாப்புகள் நசிவுகள் சுளுக்குகள் அடிகள்.

மற்றும் தொலிமேல் வரும் இரத்தச்சுரப்புகள் இவைகளின்

ஆரம்பத்தில் வலியும் கூடும் அதிகமாயும் பொழுது 6-அல்லது 8-அட்டைகள்விட்டுச் சுடு தண்ணீரால் ஒற்றிடம் கொடுத்தால் வலி தீர்ந்து வியாதியைப் போக்கும் அரையாப்புகளுக்கு முக்கியமாய் ஆரம்பத்தில் அதிக வேதனையாய் இருக்கிறது பொழுது பிரயோசனமாம்.

கக்கிருமல் தொடங்கினபொழுதுபிடரியின் மேற்பக்கத்தில்அட்டைவிட்டால் மிகுந்த பலவானுயிருக்கும் செய்யவேண்டியமுறையெப்படியெனில் குழந்தைகளின் வயசு ஒன்றுக்கு ஒவ்வொரு அட்டைவீதம் முறையாய்க்கூட்டி 6-வயசுவரை விடலாம் அப்புறம் எத்தனை வயதாயிருக்கினும் 6-அட்டையே போதுமானதா யிருக்கிறது.

ஆனதால் இப்படிவிட்டு அட்டைகள் விழுந்தபின் ஒரு கடுகுப் போல்ட்டீஸ் ஆவது ஒரு சின்ன பிஸ்டர் ஆவது செய்து கடிவாயைவிட்டுவிட்டு இரண்டு தோள் பட்டைக்கும் நடுவில் வைத்துக் கட்டவேண்டும் அட்டைகளையும் கடுகுப் போல்ட்டீசையும் மறுபடியும் அவசியம்போல் இட்டுக் கொள்ளவேண்டும்.

அனேகவிதகண்ணோய்களுக்கு அதிகரூடும் வலியும் வீக்கமும் சிவப்பும் இருக்கிற பொழுது 4-அல்லது 6-அட்டைகளைக்கடைக் கண்களின் அருகே இருக்கும் பொட்டுகளில் யிட்டால் பலன்களைக் கொடுக்கும்.

நீர்க்கடம்பு-ஓர்மரம்
நீர்க்கமல்லி-இல்லி
நீர்க்கமல்லி-இல்லி
நீர்க்குஷ்டம்-ஓர்நோய்
நீர்க்குண்டி-வெண்ணொச்சி
நீர்க்குளறி-ஓர்நீர்ப்பூண்டு, கல்லாச்செடி.
நீர்க்கும்பி-நீர்முள்ளி
நீர்க்குறிஞ்சா-ஓர்பூண்டு
நீர்க்கோவை-ஓர்நோய்
நீர்ச்சங்கு-ஓர்பூண்டுசங்கு
நீர்சின்னி-ஓர்பூண்டு
நீர்ச்சுண்டி-கொட்டிநெட்டி
நீர்ச்செம்பை-ஓர்செடி
நீர்நொச்சி-ஓர்செடி

இது தண்ணீர்சமீபத்தில்வளர்கின்றது இதன் தளிரும் இலையும் கசப்புள்ளதாயும் சுகந்த முடையதாயுமிருக்கின்றது இதை சுதேச வைத்தியர் பலமாய் வற்றப்பண்ணுகிற அல்லது வடிவிக்கிற மருந்தாக யோசிக்கிறார்கள் வாதம்சுளுக்கு வாதப்பிடிப்பு முடக்கு விரைவீக்கம் இவைகளுக்குச் சுடுகையாய் ஒற்றடம் செய்து காட்டுகை பற்று இவ்விதமாக உபயோகப் படுத்தப்படுகிறது. இந்தஇலைகளை யிடித்து காயத்திற்கு கட்டுகிற நல்லதாயும் மாற்று மருந்தாகவும் யோசிக்கப் படுகின்றது. இதன் காய் அல்லது பழம் சிறியதாகவும் கசப்பாகவு மழுத்தமாகவு மிருக்கும் அது பலமான மண்டைவியாதிக்குமருந்தாகவும் மாதவிடாயை அதிகப்படுத்துகிற குணமுடைய மருந்தாகவும் வைத்தியர் யோசிக்கிறார்கள் திமிர்வாதம் அவயவ பெலயீன முதலாகியவைகளுக்கு சூரணமாயும் கஷாயமாயும் லேகியமாயும் கொடுக்கப் படுகின்றது. வட இந்துஸ்தானியில் இதனிலைகள் தலைநோய் சிரசில் நீரேற்றம்

இவைகளை நீக்குதற்குத் தலைக் கணைகளிர் அடைத்து வைக்கப் படுகிறதென்று சர்வில்லியம் ஜோன்சுதுரை யவர்களால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

நீர்ப்பனை-புல்லாமணக்கு
நீர்ப்பாடு-நீரிழிவு
நீர்ப்பிரிமியம்-நீர்க்கடுப்பு
நீர்ப்பூலா-ஓர்செடி
நீர்முள்ளி-ஓர்பூண்டு
நீர்மேல்நெருப்பு-கல்லுருவி
நீர்வல்லி } வெற்றிலை தண்ணீர்
நீர்வள்ளி } விட்டான்
நிர்வழுக்கை-ஓர்நீர்ப்பூண்டு

நீர்விட்டான்கிழங்கு- தண்ணீர் விட்டான் கிழங்கு.

நீர்கமலம்-கருங்வளை
நீலகமலம்-கருங்குவளை
நீலக்காக்கட்டான்-ஓர்பூண்டு
நீலபாஷாணம்-ஓர்பாஷாணம்
நிலபுஷ்பம் } காஞ்சிசை விஷ்ணு
நீலபுட்பம் } கரந்தைஎட்டிமரம்
நீலமருந்து-அவுரி
நீலமார்க்கம்-கையாந்தகரை
நீலம்-கருங்குவளை பனை

நீலி-அவுரி, மேகவண்ணப் பூவுள்ளமருந்தோன்றி, கருநொச்சில் நீலியென்னும் அவுரி, பக்கசூலை வியாதிக் குபயோகப்படுகிறது.

நீலோற்பலம்-கருங்குவளை
நீவாரம்-குழநெல்செந்தினை
நீள்சடையோன்-கொன்றை

நீர்முடித்து - கிரந்தி குஷ்டம், சூலை நமைச்சல், வாதம் 18-ம் போம். அனல், பித்தமும் உண்டாம்.

நீரருந்துங்கிரமம் - அண்ணார் தருந்த செவி, மந்தமும், குனிந்த ருந்தகாசமும் நிதானமா யிருந்து பாத்திரத்தை வாயில் கடித்து அருந்தசுகமும் உண்டாம்.

நீராகாரநீர் தாகமும், தோஷமும் வரட்சியும் போம், தாதுபலமுண்டாம்.

நீராரைக்கீரை-இரத்தப்போக்கு, தீரா பயித்தியம், நீரிழிவும் போம் உரிசியாகவிருக்கும்.

நீரொட்டிவிரை - ஊன் வடியுமிரணம், கரப்பான், கிரந்தி, சொறிபுத்தும்போம், விரோசனமுண்டாம்.

நீர்க் காக்கைக்கு - சோகை, பாண்டு பெருவயிறும் போம், கரப்பான், சொறி, புலால்நாற்றமு முண்டாம்.

நீர்த்தாராக்கறி - அக்கினிமந்தம் கிரந்தி, சூலைபித்த வாய்வும், உண்டாம்.

நீர்த்தாளி - குட்டம், சொறி, வறட்சியும் போம்.

நீர்த்திருப்புள்-ஜன்னிபோம்

நீர்ப்பூலாதணம் - சொறி, சிரங்கு, நீரிழிவு, பொருமல், மாந்தமும்போம்.

நீர்முள்ளி - குளிப்பை, நீரேற்றம், நீர்க்கட்டு, பாண்டு, வீக்கமெல்லாம் நீராகப்போம்.

நீர்முள்ளிவித்து - அதிசாரம், இளைப்பு, நீர்வீக்கம், மேகரோகமும் போம். விந்து தாதுவும் உண்டாம்.

நீலகண்ட-நிருவிஷம், ஊரல், கருங்கிரந்தி, ஜன்னி, சூலை, விஷகிரந்தி, விஷங்களும்போம்.

நீலம்-குதிவலி, பாண்டு, பித்தம், மதிமயக்கமும் போம்.

நீலாத்தினம் - காமாலை, குதிவலி, பித்தம், மயக்கம், மருளல்

மேகமும்போம், புத்தி, போகசுக மும் உண்டாம்.

நீசாஞ்சண்டல் - இரத்த பித்த தோஷம், இரசவேகம், கபம், சகலசுரம், ஜன்னி தாகம், நீர்வடிகிற கண்ணோய், வெட்டுப் புண்ணும் போம், அழகு, காந்தி குளிர்ச்சி உண்டாம்.

நு

நுக்கு-எட்டிமரம்
நுக்குடம்-காஞ்சிரை
நுணவு தனக்கு, நுணா, அணிநுணா.

அவை

நுணவை தனக்கு மன்னிலா ஆதந்தா.
நுபம்-எருக்கு
நுரைப்பிர்க்கு-ஓர் பூண்டு
நுவணை-மா
நுணாயிலை-மந்தம், மேகமும்போம் காந்தியுண்டாம்.
நுணாக்காய் - மேகநோய்கள்போம்

நுணாமரம்-பட்டை கரப்பான், கிரந்தி, சிலேட்டும சுரம், புண்ணும்போம்.

நுணாவேர் - அக்கினி மந்தம், உஷ்ணமும் போம், கெர்ப்பத்திலழிந்தபிள்ளை வெளியாகும்.

நூ

நூக்கம்-ஓர்மரம்
நூடி-சிற்றேலம்

நெ

நெட்டைப்பேய்மிரட்டி - கணமாந்தம், பசாசு வயிறு கழிச்சலும்போம்.

நெய்மீன், இரைச்சல், பித்தம், பொருமல், மந்தம், வாதமு முண்டாம்.

நெய்ச் சட்டிக்கீரை - அழல் சீதசுரம், சூதகெந்தங்களாலான வாய்ப்புண், தாகம், பித்தம், மேகம், வாந்தி, வெட்டையுக் போம், அழகு கண்ணொளி, சுக்கிலம், தீபனமும் உண்டாம் நிம்ப எண்ணெயை நெய்யாகச் செய்யும்.

நெய்தநிலம்-அண்டவாதம், உஷ்ணம், துளிப்புவாய்வுண்டாம்.

நெய்தற்கிழங்கு - அக்கி, காந்தல், தோஷம், பித்தம், பயித்தியம், மேகம், வயிற்றுக்கடுப்பு, இரத்தமும்போம், கண்குளிர்ச்சி, விந்தும் உண்டாம்.

நெய்த்தோலி மீன் - தீபனம் போம், மந்தம், வயிறுபொருமல் வாதபித்தம், வாயிலைப்புண்டாம்.

நெய்யன்னம் கிறுகிறுப்பு, பித்தமும்போம், கண்குளிர்ச்சி, சீரணம், பலமுமுண்டாம், பத்தியத்திற்காகும்.

நெருஞ்சில்விதை - கல்லடைப்பு துன்மாங்கிஷமருகல் நீர்க்கட்டும் போம்.

நெல்லிக்காய்கெந்தி - ஒருவித மகோதரம், கண்ணோய், கபம், குன்மவாயு, சுரம், பதினெண்குஷ்டம், பேதி, மந்தம், மேகம், வல்லைக்கட்டி, விஷக்கடியும்போம்.

நெழில்-கொடிக்கொத்தான், படர்கொடி.

நெல்லிவேர் - அரோசி, சுரம், திரிதோஷ ஜன்னி மலக்கட்டும் போம்.

நெல்லிமுள்ளி-அனல் ஆண்குறியிற் சிறு கொப்பிளம் இரத்தபித்தம் என்புருக்கி கண்ணோய், சீதளம், தாகம், தாதுநஷ்டம், நீர்துவாரத்தில், முள்ளருகல், பித்தம், பெரும்பாடு மேக நீரிழிவு, வாந்தியும்போம், தலைமுழுக்கு, கண்குளிர்ச்சி உண்டாம்.

பசுவின்நெய் - முழுக்கு, உடலெரிச்சல், உன்மாதம், இரத்தபித்தம், கபம், தாகம், பேசும் விகாரம், மூர்ச்சையும்போம். மைந்தர் முதல் முப்பருவ மாந்தர்க்கும் ஆகும்.

பசுவின்பால் இளைத்தவர், கிழவர், சூளையர், துர்ப்பலத் தோர் பழஞ்சுரத்தோர், பாலர் புண்ணோர், மேகத்தோர், சாப்பிட சுகமுண்டாகும்.

பசுவின் மூத்திரம் - உதிரம், கண்ணோய், காமாலை, சகலவிஷம், சோவை, தந்தநோய், பலவீக்கம் விஷப்பாண்டுபோம்.

பசுவின்மோர் அனல், குன்மம் தாகம், திரிதோஷம், பாண்டு, பித்தம், மகோதரம், மந்தம், மருந்தினால் வந்த அதிசாரம் வீக்கமும்போம்.

பசுவின்வெண்ணெய்-கண்ணெரிவு, கண்ணோய், கண்பீளை, மேகங்களெல்லாம் போம். தாதுபசியும் உண்டாம்.

பச்சடியின் பேதகுணம்-இனிப்பான பச்சடிக்கு, அருசிபோம் உப்பு புகைத்தான பச்சடிக்கு வாதம் உண்டாம், புளிப்பான பச்சடிக்கு வாதம் உண்டாம், காரம் பான பச்சடிக்கு பித்தம் போம்.

பச்சரிசி-எரிபித்தம்போம் தேகபலம், மந்தம், வாய்வும் உண்டாம் பத்தியத்திற்காகாது.

பச்சரிசி அன்னம்-பித்தம்மூத்திரக்கிரிச்சாமும் போம்.

பச்சரிசிக்கஞ்சி-வாதகபம்போம்.

பச்சரிசி பொங்கல் - தாதுவிர்த்தி உண்டாம்.

பச்சைக் கடுக்காய் - அரோசி, மலமும்போம். தீபனம்உண்டாம்.

பச்சைக்கர்ப்பூரம்- அஷ்டகுன்மம், கபம், சூலை, மேகம், வாதமும்போம்.

பச்சைக் குங்குமப்பூ-கண்தோஷம், சகலதோஷம், சுரதோஷம், செவித்தோஷம், பித்ததோஷம், போகும்.

பச்சைத் திப்பிலிவேர்-சோபம் தாகம், பித்தம், மோகங்களும் போம் போகம் உண்டாம்.

பச்சைநாவி - அஸ்தி வெப்பு, குஷ்டம், குன்மம், ஜந்நி, தாக சுரம் விஷமும்போம்.

பச்சைப் பயறு - பயித்தியம், விஷமும் போம் குளிர்ச்சி வாதமும் உண்டாம்.

பச்சைப்பயறு பொங்கல் - பித்தம்போம். போகம், வாதமும் உண்டாம்.

பச்சைப்பாக்கு-மலம் வாய்வும் போம்.

பச்சைப்புருக்கறி ஐயம் சீதம் பித்தம், வாதமும்போம், தாது பலமும் உண்டாம்.

பச்சை யாற்றுநீர் - இருமல், ஈளை, உதிரக்கடுப்பு, கபம், சுரம் வாய்வும் உண்டாம்.

பச்சையிளநீர் - கபம், கிருமி, சொறி, சேபால தோஷம், பழய சுர மேகமும்போம்.

பச்சைவஸ்திரம் - அழல், ஐயமும்போம் உடல்பூரிப்பு கண் குளிர்ச்சியும் உண்டாம்.

பச்சை விலாமிச்சவேர் - ஈளை, குஷ்டம் சுரவெப்பம், சூலை தாகம் திரிதோஷம், மந்தமும்போம் தேககாந்தி உண்டாம்.

பகம்-கொக்கு, மாந்தாரை
பகர்-பங்கம்பாளை
பகவிருக்கம்-நிலக்கடம்பு
பகன்றை-கிலுகிலுப்பை, சிவதை சிந்தில்.
பக்கசூலே } ஓர்நோய்
பக்கவாதம் }
பங்கணி-பங்கம்பாளை
பங்கநாதம்-தாமரை
பங்கம்பாலே } ஆடுதின்னுப் பாளை
பங்கம்பாளை }
பங்கயம்-தாமரை
பங்கி-கஞ்சா
பங்கூரம்-மரமஞ்சள்
பங்கேசம் } தாமரை
பங்கேருகம் }
பசமந்திரம்-மரமஞ்சள்
பசளே-வசலேக்கொடி

அவை

கொடிப்பசளே-அல்லது, வெள்ளே ப்பசளே, செவப்புப்பசளே, து லுக்கப்பசளே-அல்லது கோழி க்கீரை.

பேய்ப்பசளே-உலோசி. வறுக் கைப்பசளே

பசிரி, அல்லது பயிரி } பசிரியிலேக்கரி

அவை

குதிரைப்பசிரி, பெரும்பசிரி' வெள்ளப்பசிரி.
பசுங்கொடி-அறுகு
பசுண்டி-சிரகம்
பசுநாபி-பிராய
பசும்பயறு-பாசிப்பயறு
பசும்பிடி பச்சிலே(மரம்)
பசுவிந்தக்காளி-ஓர்பூண்டு
பச்சன்னியம்-மரமஞ்சள்
பச்சைக்கொம்பு-இஞ்சி
பச்சிலே-பச்சிலேமரம்

அளத்துப்பச்சை - ஓர்பூண்டு, பஞ்சலோகம்.

அதாவது

1-சுக்கு, 2-திப்பிலி, 3-திப்பி லிமூலம், 4-செவ்வியம், 5-சித்திர மூலம்.
பஞ்சரம்-செருந்தி
பஞ்சவாசம்

அதாவது

1-இலவங்கம், 2-ஏலம், 3-கருப் பூரம், 4-சாதிக்காய், 5-தக்கோ லம்.
பஞ்சாங்குலம்-ஆமணக்கு
பஞ்சாமிலம்-இலந்தை
பஞ்சாய்-கோரை
பஞ்சு-பருத்தி
படகம்-விஷ்ணுகராந்தை
படற்பொறி-துத்தி
படமடக்கி-தாழை
படருருக்கி-செந்நாயுருவி
படரை-ஆவிரை
படர்கொடி-பீர்க்கு
படர்தாமரை-ஓர்நோய்
படர்மல்லிகை-பெரும்பீர்க்கு
படவை-செருப்படி
படாரமூக்கி-வெண்ணாயுருவி
படிகாரம்-அல்லது, சினக்காரம்

இது கடைகளிலெல்லாம் நற் சாக்காய் பெற்றுக்கொள்ளக் கூடி யதாயிருக்கிறது. அது பலவித மாய் பலனுடன் ஔஷதஞ் செய் யப்படும்.

கண்ணோவு உண்டான குழந் தைகளுக்குப் படிகாரம் 3-கிறெயி னும், பிராயமானவர்களுக்கு 6- கிறெயினும் ஒரு அவுன்ஸ் சலத் தில்கலக்கி தினம் 4-5 தரம் கண்

களை கழுவவேண்டும் அதில் ஒரு சீலைத் துண்டை நனைத்துக் கண்களை அடிக்கடி ஒற்றிக்கொள்ளுவது நலம். கண் இமைகள் அதிகமாய் வீங்கியிருந்தால் கால்மணி நேரம் விசேஷமாய் தலையிற்கூடானபாலை விட்டுக்கழுவி இமைகளை மெல்லெனத் திறந்து பின் மேற்சொன்ன சலத்தைச் சொட்டுச் சொட்டாய் விடவேண்டும். கண்களின் கடினமாய் அப்படிப் பின்வலியும் சூடும் நீங்கி சிவப்பு மாத்திரம் இருக்கிற சமயத்தில் அரைகிறும் படிகாரத்தை நன்மையாய்ப் பொடித்து முட்டையின் வெள்ளைக் கருவில் கலந்து அதை இரண்டு துண்டு மெல்லிய பழஞ் சீலையின் இடையில் வைத்துக் கண்ணின்மேல் சிலமணி நேரம் வைத்திருக்கவேண்டும்.

மூக்கில்நின்று மிகுதியாய் இரத்தம்போனால் 120-கிரெயின் படிகாரத்தை 6 அவுன்ஸ் தண்ணீரிற் கலக்கி பீச்சாங்குழலா லாவது மெல்லிய சீலையை நனைத்தாவது மூக்கினுட் செலுத்தினால் நிற்கும் அட்டைக்குத்த காயத்தில்நின்று இரத்தம் பாய்கிறதற்குக் கொஞ்சம் படிகாரம்நுணுக்கிக் கடிவாயி லிட்டு அதின்மேற் சீலைக்குச்சுருட்டிவைத்து விரலால் கொஞ்ச நேரம் கெட்டியாயழுத்தி வைத்திருந்தால் இரத்தம் நிற்கும்.

சுரமில்லாமல் மூலத்தில்நின்று மிகுதியாய் இரத்தம் போனால் 120-கிரெயின் படிகாரத்தை 8-அவுன்ஸ் தண்ணீரிற் கலக்கி ஒரு துண்டு சீலையை நனைத்து மூலத்தில் வைத்திருந்தால் சுகப்படும்.

குழந்தைகளின் மலத் துவார வழியாய் குடல் தள்ளினால் 60-கிரெயின் படிகாரத்தை கடுக்காய் கஷாயம் 8-அவுன்சில் சேர்த்துக் கொண்டு தள்ளின குடலை மறுபடியும் உள்ளுக்குச்செலுத்தி அதின் மேலிந்த கஷாயத்தை நாளொன்றுக்கு 2-3-மணிநேரம் நன்றாய்த் தொட்டுப் போடவேண்டும் இப்படிச் செய்வதினால் மலத்துவாரத்தைச் சுருக்கிக் குடலிறங்குகிறதை நிறுத்தல்செய்யும்.

நுரையீரல் இரைக்குடல் முதலிய இரத்தம் போகிறதற்கு படிகாரம் 8-அல்லது 10-கிறெயின் ஒருதரம் உள்ளுக்குக் கொடுத்து இந்தப்படி தினம் மூன்றுதரங் கொடுக்கவேண்டு மிதனுடன் சுரமாவது மேற்சொன்ன ஔஷதங் கொடுக்காம லிருக்கிறதுந் தவிர இரண்டொருதரங் கொடுத்தபின் வியாதி அதிகப்பட்டால் பின்பு கொடுக்கக்கூடாது. மேற்படி வியாதிகளுக் கிசைந்த மற்றொரு பிரயோகம் எப்படியென்றால் 12-கிறெயின் படிகாரத்தை அரைப் புட்டிப் பாலிட்டு ஒரு சட்டியில் வார்த்து அடுப்பில்வைத்துப் 10-மினிட் நேரங் காய்ச்சி உடனே சீலையில் வடிகட்டிக்கொண்டு ஆறினபின் ஒருதரத்துக்கு ஒன்றரை அவுன்ஸ் வீதம் தினம் மூன்று தரங் கொடுக்கவேண்டும். இதனுடன் ஒரு கிறெயின் அபினுங் கூட்டிக்கொடுத்தால் மிகுந்த பலனுண்டாகும் ஆனாலப்படி அபினுடன் பிராயமானவர்களுக்கு மாத்திரமே கொடுக்கக்கூடும் பெண்களுக்குச் சுரோணிதநீர் அதிகமாயும் இடைவிடாமலும் போகிற

தற்கும் மூலமூலையில் நின்று இரத்தம் போகிறதற்கும், மேற்சொன்ன ஔஷதம்பிரயோசனப்படும்.

தொண்டையிற் புண்ணும் அல்லது சிவப்பாயிருக்கிற தொண்டைநோய்க்குக் கடுக்காய் கஷாயம் அரைப்புட்டியில் 120-கிறெயின் படிகாரத்தைச் சேர்த்துக் கொஞ்சந் தேனுங்கூட்டி தினம் மூன்று நாலுவேளை இந்த ஜலங்கொண்டு வாயலம்பவேண்டும். இரசத்தில் ஔஷதம் சாப்பிட்டதினாலாவது மற்றெந்தக்காரணத்தினாலாவது பல்லீறி லுண்டாகும் இரணமுதலிய வியாதிக்குப் படிகாரத்தைக் கடுக்காய் கஷாயத்தில் கலக்கி வாயைக் கழுவினால் குணமுண்டாகும். இதுவுந்தவிற சிறு குழந்தைகளுடைய வாயில் உண்டாகும் வெண்ணிறமான புண்களுக்கு 20-படிகாரத்தை நுணுக்கி ஒரு அவுன்ஸ் தேனில்சேர்த்து அதை விரலால் தொட்டு வாயினுள் பூசவேண்டும்.

குழந்தைகளுக்குக் கக்கிருமல் உண்டாகும் 5-கிறெயின் படிகாரத்தை நுணுக்கித் தேனிற்கலக்கிக்கொண்டு இந்தவிதம் ஒரு நாளில் இரண்டு மூன்றுதரங்கொடுக்கவேண்டும். இதிற்குணங்காணவிட்டால் படிகாரத்தின் எடையை அதிகமாக்கி அதினுடன் கொஞ்சம் காயமுஞ் சேர்த்துக்கொண்டால் மிகுந்த குணத்தைக் கொடுக்கும். (காயத்தைக் றித்துச்சொல்லியதில் காண்க) ஆண்குறித் துவாரமன்றி அதிரித் தோலில்நின்று ஒருவித மேகவெள்ளைப்போன்ற நீர் வருகிறதற்கு ஒரு அவுன்சு சலத்தில் 30-கிறெயின்படிகாரத்தைக் கலக்கி அத்துலையிலுள் விட்டுக்கொள்ளவேண்டும். பெண்களிற் காணும் மேகவெள்ளைக்கும் படிகாரத்தை கடுக்காய்க் கஷாயத்திற்சேர்த்து பீர்ச்சாங்குழலால் செலுத்தி அலம்ப வேண்டும். இது சாவகாசப்படாவிட்டால் அதில் ஒருதுண்டு சீலையை நனைத்து உபஸ்தத்தினுள் செலுத்தி வைக்கவேண்டும். இப்படி செய்யுமளவில் உள்ளுக்கும் ஒருவேளைக்கும் 10-கிறெயின் படிகாரத்தைத் தேனிலாவது வெல்லத்திலாவது தினம் மூன்றுதரங் கொடுக்கவேண்டும்.

நெடுநாள்பட்ட நாற்றமுள்ள படரும் புண்களுக்கு நுண்மையாய்த் தூள்செய்த படிகாரம் 8-கிராம் காசுக்கட்டி 2-கிரும் அபின் 1-கிரும் மெழுகு பிளாஸ்திரி 2-அவுன்சு இவையில் அபினை முன்னாக பிளாஸ்திரியுடன் நன்ருய்க்கலந்துகொண்டு பின்பு மற்ற மருந்துகளை யெல்லாங் கூட்டி அரைத்து இதை ஒரு துண்டுச் சீலையில் தடவி காலையிலும் சாயந்திரமும் புண்ணி விடவேண்டும். வேதனையை யுண்டாக்குமாகில் மேற்படி சேர்வையின் காரத்தைக் குறைக்கும்படியாய் மெழுகு பிளாஸ்திரியை யதிகரித்துக் கூட்டிக்கொள்ளவேண்டும். இரணங்களில் அதிகமாய் வளருந் துர்மாமிசங்களுக்கு பொரித்த படிகாரத்தூளில் கொஞ்சந் தூவினால் பலனுண்டாம்.

மூட்டு வீக்கங்களுக்கும் அடிசதைகளுக் கிவையின் காரணத்தால் உண்டாகிற வீக்கங்களுக்

கும் அரைப்புட்டி காடியும் அவ்வளவு சாராயமும் ஒன்ருய்க் கலந்து 4-கிரும் படிகாரத்தைக் கரைத்ததில் சீலையை நனைத்து ஷெடிவீக்கங்களில் இடவேண்டும்.

வாந்திபேதிவியாதிக்கும் அது ஆரம்பிக்கிறதற்கு முன் காணப்பட்ட வயிற்றுப் போக்குக்கும் படிகாரம் 8-கிறெயின் காசுக்கட்டி 10-கிறெயின் இவற்றை தேனிலரைத்து உடனே கொடுக்க வேண்டும் இப்படி ஒன்று அல்லது இரண்டுமணி நேரத்துக்கு ஒருதரம் வியாதியின் ஸ்திதிபோல் கொடுக்கவேண்டும் பிராயமானவர்களுக்கு பேதி கடினமாயிருந்தால் மேற்சொன்ன மருந்தில் அபின் 1-கிறெயினைக் கூட்டிக்கொள்ளவேண்டும். குழந்தைகளுக்கிது மிகவும் சாவதானமாய்க் கொடுக்க வேண்டுவதால் 1-கிறெயின் அபினியில் 8-அல்லது 10-ல் ஒருபங்கு கொடுக்க வேண்டும். ஒன்றிரண்டுதரம் கொடுத்தபின்பு மயக்கங்காணுகில் கொடுக்கக்கூடாது நெடுநாள் சென்றவயிற்றுப்போக்குக்கு படிகாரம் 10-கிறெயின் வசம்புப் பொடி 15-கிறெயின் அபினரை கிறெயின் இவை மூன்றையுங்கலந்து ஒருதரத்துக்குக் கொடுக்க வேண்டும்இப்படிநாளொன்றுக்கு மூன்று நான்கு நேரங் கொடுக்கலாம்.

கீழ்ச்சொல்லிய மருந்து தீர நிறுத்தாவிட்டாலும் நீர் அதிகமாய்ப் போகிறதைக் குறைக்கும் ஒருபுட்டிப் பசுவின்பாலைக்கொதிக்கவைத்து அதில் 2-கிரும் படிகாரத்தூளையிட்டு கொஞ்சநேரங் கலக்கியபின் இறக்கிவைத்து வடிகட்டி அதை நாளொன்றுக்கு மூன்றுதரம் 1-வேளைக்கு 4-அவுன்ஸ் வீதங் கொடுக்கவேண்டும்.

படிரம்-சந்தணம்
படுவநாயதி-பாற்சோற்றி
படோல்ராசி-பேய்ப்புடோல்
படோலிகை-வெள்ளரி
பட்டகம்-புழுக்கொள்ளி
பட்டி-ஓர்பூண்டு
பட்டிடை-நந்தியாவட்டம்
பணியாரதுத்தி-ஓர்செடி
பணியிநாக்கு-தண்ணீர்விட்டான் கிழங்கு.
பணை-அரசு, மூங்கில்
பண்டாகி-சேம்பு
பண்டுகம்-செவ்வகத்தி, அசமதாகம்.
பதம்-அறுகு
பதரி-இலந்தை
பதறை-வெந்தோன்றி
பதிகம்-பாசி
பதிச்சம்-வாலுளுவை
பதுகரை-பழமுண்ணிப்பாலை
பதுமம்-தாமரை
பதுமார்க்கம்-கவிழ்தும்பை
பத்தறு-மொசுமொசுக்கை
பத்திராசிராயம்-சந்தணம்
பத்தியாகாரி-சிறுகீரை
பத்தியம்-கடுக்காய்
பப்பரப்புளி-பெருக்கமரம், கொ[டி
பப்பாளிப்பால்-ஓர்பால்

இந்தப் பால் வயிற்றில் கிருமிகளுக்கு மிகுந்த அனுகூலத்துடனே நூதனமாய்ப் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது. பப்பாளிக்காயைக்குத்தி அதில் நின்றுவடியும் பாலைச் சேர்த்தெடுத்து பிராயமானவர்களுக்கு1-மேசைக்கரண்டியளவு அல்லது அரைஅவுன்ஸ் பாலைச் சமன அளவு தேனில் கலக்கி இதினுடன் 2-அவுன்ஸ் கொ

திக்கிற தண்ணீர்விட்டு எல்லாம் ஒன்றாய்க் கலக்கிக்கொண்டு ஆறினவுடன் குடித்து 2-மணிநேரஞ் சென்றபின் ஒரு அவுன்சு ஆமணக்கெண்ணெயை அரை அவுன்சு எலுமிச்சஞ் சாற்றுடன் கலந்து குடிக்கவேண்டும் இந்தப்படி 2-நாள் தொடர்ந்து செய்ய வேண்டும். மூன்று வயது முதல் ஏழு வயது வரையுள்ள குழந்தைகளுக்கு ஷை அளவில் பாதிபோதும், மூன்று வயதுக்குகீழ் முன் சொன்ன அளவில் மூன்றிலொரு பங்காவது ஒரு தரமாவது கொடுக்கலாம். இந்த பாலைக்கொடுத்த பின் வயிற்றுவலி கண்டால் சருக்கரையும் தண்ணீரும், அல்லது சருக்கரையும் பாலுமாக பூர்த்தியாய்க் கொடுக்கலாம்.

பம்மம்-திராய்
பம்பிகை-வீர்க்கு
பயசி } திருநாமப்பாலை
பயருதி } திருநாமப்பாலை
பயறு-ஓர்பிரணியம்

அவை

எலிப்பயறு, கறுப்புப் பயறு, சடைப்பயறு, சிறுபயறு, தட்டைப்பயறு, துலுக்கப்பயறு, நரிப்பயறு, நன்னிப்பயறு, பச்சைப்பயறு.

பயிரவி-முடக்கொத்தன்
பயிருகம்-பழம்பாசி
பயிலியம்-குப்பைமேனி
பரத்தை-ஓர்செடி
வெம்பரத்தை-செம்மரத்தை
பாரகம்-சந்தனம்
பாராய்-பிராய்
பரி-பருத்தி
பரிமணி-காந்தை

பருத்தவழுகை-மல்லிகை
பருத்தி-பருத்திச்செடி

அவை

உப்பம்பருத்தி, ஐம்பருத்தி, காட்டுப்பருத்தி, குப்பைப்பருத்தி, செம்பருத்தி, தாளிப்பருத்தி, நாடன்பருத்தி, பூப்பருத்தி, வேலிப்பருத்தி.

பருவயோனி-கரும்பு
பருவி-தில்லை
பலகேசரம்-தென்னை
பலசாடவம்-மாதளை
பலசிரேட்டம்-மாமரம்
பலச்சரீடம்-குன்றி
பலண்டுறுகம்-ஓர்பூஷணம்
பலதாசு-புளியாரை
பலபூரகம்-மாதளை
பலப்பிரேதம்-திப்பிலிமூலம்

அவை

1-கடுக்காய்
2-நெல்லிக்காய்
3-தான்றிக்காய்

பலம்பலம்-சேங்கொட்டை
பலவு-பலாமரம்
பலன்-ஈரவெங்காயம்
பலாக-பலாமரம், முருக்கு
பலாசு-புன்முருக்கு, நரிமுருக்கு, முருக்கு
பலாண்டு-ஈரவெங்காயம்
பலாதவம்-பூனைக்காலி
பலால்தோகதம்-மாமரம்
பலினி-கோங்கு, ஞாழல்
பலோருகம்-பாதிரி
பலோற்பதி-மாமரம்
பல்லகி-சேங்கொட்டை
பல்லம்-சேமரம்
பல்லவத்தி-அசோகு
பல்லாதகி-சேங்கொட்டை, சேமரம்

பல்லினர்-சதுரக்கள்ளி
பல்லினர்குழவி-மலைப்பச்சை
பல்லிகி-சேங்கொட்டை
பல்லிப்பூடு-கொல்லைப்பல்லி
பல்லுமம்-பெருவாகை
பவளம்-ஓர் அரதனம்

செவப்பான பவளம் ஐரோப்பிய தேசத்தில், அவுஷதத்தில் உபயோகப் படுத்துகிறார்கள். அது ஜப்பான் தேசத்தில் சாதாரணமாயிருக்கிறது கமத்திராநீபம் மேற்கு கடற்கரையில் செழுமையாய் வளருகின்றது தமிழ் வைத்தியர் இதனால் செய்யப்படும் பற்பத்தை நீரிழிவு மூலக்கிராணி இவைகளுக்கு உபயோகப் படுத்துகிறார்கள்.

பவளக்குறிஞ்சி-ஓர்செடி
பவளப்புற்றுப் பாஷாணம் - ஓர் பாஷாணம்
பவளப்பூலா அல்லது பூன் } ஓர்செடி
பவளமல்லிகை-ஓர்செடி
பவளவங்காரவாச்சி-ஓர்பூண்டு
பவித்திரி-தருப்பை
பழப்பாசம்-கருஞ்சீரகம்
பழப்பேசி-செப்புநெருஞ்சில்
பழுபாகற்-துப்பை
பழுமரம்-ஆல்
பளிதம்-கருப்பூரம்
பறங்கிக்கொடி-பூசனி
பறங்கிக்கிழங்கு-சீனப்பலா
பறங்கிப்பட்டை-ஓர்மருந்து

இந்தக் கிழங்கு சீன தேசத்தி லிருந்து கொண்டுவரப் படுகின்றது. அவ்விடத்தில் விஸ்தாரம் உண்டாகின்றது. இதைத் தமிழ் வைத்தியர் நாட்பட்ட மேகவியாதிக்கும், மேகவாய்வுக்கும், கைகால் முடக்குக்கும் உபயோகப் படுத்துகிறார்கள்.

பறிவை-சீந்தில்
பறுணி-கொள்ளி, சீந்தில், பெருகுமிழ், பெருங்குரும்பை
பறைசிவி-சிறுநன்னாரி
பற்பம்-தாமரை
பற்றை-செங்காந்தள்
பனசம்-பலாமரம், பாற்சோற்றி
பனசயித்தி-அரசு
பனை-நெய்க்கொட்டான்
பனிச்சர்-பனிச்சா, கஞ்சாங்கோரை
பனை-ஓர்மரம்

ஆல்குபனை, கூந்தற்பனை, அளிப்பனை, நிலப்பனை

பன்றிக்குறும்பு-நிலப்பனை
பன்றிக்கொம்பு-ஓர்கொழுப்பு

இது பிளாஸ்திரியிலும் தைலங்களிலும் சேர்க்கப் படுகின்றது. பழுப்பாகல் கொடியின் வேரை உலர்த்திச் சூரணமாக்கி அதனோடு இதைச் சேர்த்து மூளைமூலம், இரத்தமூலம், சீழ்மூலம், இவைகளுக்கு உள்ளுக்கு கொடுக்கிறார்கள்.

பன்றிமொத்தை - சிறுகுறட்டை
பன்னல்-பருத்தி
பன்னி-சணல்

பஞ்சகற்பம்-கடுக்காய் தோல், கஸ்தூரிமஞ்சள், நெல்லிப்பருப்பு, மிளகு, வேப்பம்வித்து இவைகள் வகைக்குப் பலம் கால், பசுவின் பால்விட்டு அரைத்துக்கொதிக்கவைத்துச் சிரசில் தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ் செய்ய அதிதூலரோகத்திற்கும், அதி சுட்க ரோகத்திற்கு இடமில்லை இதுவே பஞ்சகற்பவிதி.

பஞ்சபாஷாணம்-ஆணிப்பற்று கண்புற்று, காய்ச்சல், குளிர்தன் மாங்கிஷம் மேகமும் போம்.

பஞ்சமுஷ்டிகஞ்சி - இளைப்பு, பித்தகபம், வாய்வும்போம், லங்கணத்திற்காகும்.

பஞ்சமூலம்-கண்டுபாரங்கி, சித்திர மூலம், சுக்கு, செவ்வியம், பேராத்தை இவைகளுக்கு அநேகவியாதிக ளெல்லாம் போம்.

பஞ்சலோகம்-இரும்பு, ஈயம், செம்பு, பொன், வெள்ளி, இவைகளால் கண்ணோய்களும், பல நோய்களும் போம்.

பஞ்சவில்வம்-ஆத்திமா, முட்கிளுவை, முல்லை, வில்வம், இவைகளால், கபம், காசம், சுவாசம், ஸ்தனக் காம்பிலுண்டாகும் கட்டியும் போம்.

பஞ்சவுப்பு-இந்துப்பு,கல்லுப்பு கறியுப்பு, வளையலுப்பு, வெடியுப்பு இவைகளுக்கு அற்புதகப் புண், கிராணி, குன்மம், சிலேட்டுமம், சீதக்கடுப்பு, சூலை, திரிதோஷம், நீராமை, நெஞ்சுவலி, பீலிகம், பயித்தியகுன்மம், மந்தம், வாய்வும்போம்.

பஞ்சவலக்கம் - அத்தி, அரசு நால், பூவரசு, வேல், இவைகளின் பட்டையால், கபம், காசம், சுவாசமும்போம்.

பஞ்சுமெத்தை - விரகதாபம், விந்தும், உண்டாம்.

பட்டுவஸ்திரம்-பித்தம், கபம் போம். காந்தி, புத்தி, மகிழ்ச்சி, வியர்வையும் உண்டாம்.

பண்ணைக்கீரை-கரப்பான், சிரங்குப்புண், சீதமும்போம், குடலுக்குட் சூடும், மலமிளகலும் உண்டாம்.

பதுமகம்-பாலைபாம்

பத்தியமுள்ளவர்கள் பகல் நித்திரை செய்வதின் குணம், இரத்த பித்தரோகம், நேத்திர நோய்கள், விந்து நிற்றினமும் உண்டாம்.

பத்திரி - சாதிபத்திரி, தாளி சாதிபத்திரி, லவங்கப்பத்திரி, இவைகளால், தாகம், மலக்கடுப்பு, வாந்தி விக்கலும்போம்.

பப்பாளிப்பழம் உடலில் நீரோடல், பித்தமும் உண்டாம்.

பயிற்றங்காய்- அரோசி, ஐயம், உதிர வாய்வும் போம், அமிழ்த நாசம், தீபனமும் உண்டாம்.

பாட்டைக்கீரை - கபம், கரப்பான், வாதமும்போம், பித்தம் உண்டாம், பத்தியத்திற்காகும்.

பாத்தையர் முலைப்பால் - கிரந்தி சொறி, புண், கால்நோய், முத்தோஷம், வாதமுமுண்டாம்.

பருத்தி-பெரும்பாடுபோம்.

பருத்திப்பஞ்சனை-அனல் போம், இரத்தம், சுரம், விந்து, விரகமும் உண்டாம்.

பருத்திலையு மொக்கும் பாலில் அரைத்து, சாப்பிட்டால் இரத்த பித்தம், இரணவீக்கம், நீரெரிவு, மேகமெல்லாம் போம்.

பருப்புக்கோரை - பித்தமும் போம் இளமையுண்டாம்.

பருப்புப்பொங்கல் - பித்தமும் போம், போகம், வாதமுமுண்டாம்

பலகரை - கண்ணோய், கபம், கால்சூலை, கிராணி, தாகம், மந்தம், விஷசுரமும்போம்.

பலமெழுகுகள்-கொசுமெழுகு, வசியம், எந்திரம், இவைகளுக் காகும், நன்மெழுகு புண்ணேய் போம், பொன்மெழுகு மாறல் சுரம்போம்.

பலமிருகப்பல்-விழிநோய்கள், பலதும்போம்.

பலாக்காய்-இளைப்பு, இறைப்பு மந்தம், வாதம், விந்தும் உண் டாம்.

பலாக்கொட்டை - மலக்கட்டு, மலக்கருகலுமபோம்.

பலாப்பழம்-கரப்பான், சிலேட் டுமம், பித்தம், வாதம், மற்று மநேக வியாதிகளுமுண்டாம்.

பாலப்பிஞ்சு-தாகம், பித்தமும் போம், குன்மம், போகம், மந்த மும் உண்டாம்.

பலாவிலையிற்சாப்பிடல் - குன் மம், மகோதரநோயும்போம், பித் தம் உண்டாம்.

பல்லக்கேற்றம்-பித்தம்போம், தாது, பசி, வாய்வும் உண்டாம்.

பல்லிப்பூண்டு - தோஷ சுரம், பல்வலி, புத்தம், வலவிடம், வாய் வும்போம், தாளகமும் பாஷாண மும் சுத்தியாகும்.

பல்விளக்கத்தகாத வஸ்துக் கள்-கரிகல், பானை மணல், கைக் கோல் இவைகளால் விளக்கினல், சிதேவிபோய் மூதேவி வந்து சேருவாள்.

பல்விளக்கத்தக்க கொம்புகள்- ஆலுக்கு சரஸ்வதி, கடாட்சம், உண்டாகும், நாயுருவிக்கு வசிக ரம் உண்டாகும், பூலாவுக்கு போ கம் பொழியும், வேம்புக்கு பல் துலங்கும், வேலுக்குப் பல்லிறு கும்.

பவளக்குன்றிக் கொடி-இரத்த பித்தகபம், கடுவன், கரப்பான், கிரந்தி, சொறி, புண், மறுகரப் பான், மேகமும்போம்.

பவளம் - அதிதாகம், அருசி, ஐயம், காரம் காமாலை, சயரோ கம், கரதோஷம், காரம், நாவாட்சி பித்தபாண்டு புழுவிடம், விந்து நஷ்டமும்போம்.

பவளவறுகு-சுவாசம்போம்.

பழங்காடிநீர் - அதிசாரம், அ ரோசகம், கிராணி, பலபிணி, பித் தமயக்கமும்போம், தேகக் குளிர் ச்சி உண்டாம்.

பழஞ்சோறு-பித்தவாதம்போ ம், ஒளி, தாது, நித்திரை, மயக்க மும் உண்டாம்.

பழந்தேன்-மூலம்போம், தேக பலம் வயிற்றெரிவு, வாயுவிந்தும் உண்டாம்.

பழம்பாசி-மேகநாந்தல், வெள் ளை யொழுகலும் போம்.

பழம்புளி - கண்ணோய், கபம், சர்த்திசுரம், சூலை, திரிதோஷம், பித்தம், வாதமும் போம்.

பழையவரிசி - ஐயம், பலநோ யும்போம், உடல்குளிர்ச்சி, தீபா க்கினியும் உண்டாம், பத்தியத் திற்காகும்.

பழையவிளநீர் - பலவகை நோ யுண்டாம்.

பள்ளநீர் - அக்கினி, மந்தம், கபம். கபால ரோகம், பித்த ரோகம், பீநசம், மூலரோகம், வாதமும் உண்டாம்.

பள்ளையாட் டிறைச்சி-தீபனம் போம், அரோசகம், கபம், தொந் தநோய், மந்தம், வாய்வுமுண் டாம்.

சீனம்-படிகாரம்
சீலை-மனோசிலை
சீனி-சருக்கரை
சீதபீரு-மல்லிகைக்கொடி
சீதபுஷ்பம்-எருக்கு
சீதப்பிரபம் } கருப்பூரம்
சீதம்யூகம் }
சீதவற்கம்-அத்திமரம்
சீதளகம்-வெள்ளாம்பல்
சீதுகந்தம்-மகிழமரம்
சீதேவியார்செங்கழுநீர்-ஓர்பூண்டு
சீரவட்டம்-ஈயம்
சீரிணபன்னம்-வேம்பு
சீவப்பிரியம்-கடுக்காய்மரம்
சீனவங்கம்-ஈயம்
சீனை-வன்னிமரம்

சு

சுடுதூரத்தம்-சித்திரம்புலாவி
சுத்திநதி-மூளைஜலம்
சுருவணுதியுப்ப-சத்தியுப்பு
சுராபி-கள்
சுள்ளி-பாந்துளிர்
சுணங்கன்-நாய்
சுவை-கறிபதார்த்தம்
சுறவை-வீக்கம்
சுத்தி-மாங்கிஷப்பொறியல்
சுடுதூரத்தம்-சித்திரப்பாலை
சுகபலம்-எருக்கஞ்செடி
சுகுடம்-சேம்பு
சுகோதரம்-தாளிசபபத்திரி
சுக்கிகை-புளியாரை
சுசித்திருமம் } அரசமரம்
சுபதம் }
சுவை-மூங்கில்
சுரிப்புறம்-சங்கு நத்தை
சுல்-வெள்ளி
சுல்லம்-தாமிரம்
சுவர்ணகதலி-ஓர்வாழை

சூ

சூதயிலை-மாஇலை
சூரியன்விந்து-வாலைரசம்
சூதசிந்தூரம்-ரசசிந்தூரம்
சூகரம்-பன்றி, மான்
சூபதூபனம் } பெருங்காயம்
சூரபங்கம் }
சூலைகிருது }
சூர்ணபாரதம்-இங்குலிகம்
சூலைசத்துரு-ஆமணக்கு

செ

செந்தார்-செந்தூரா
செந்தாழம்பழம்-அன்னாசிப்பழம்
செங்கொட்டி-செம்பிச்சி
செங்கழுநீர்-மூளை சலம்
செங்கடிவாயுப்பு-வெடியுப்பு
செங்கெருஞ்சல்-செப்பு நெருஞ்சி
செங்கரிப்பான்-கையாந்தகரை
செவ்வாலம்பரும்பு-வாளம்
செம்மறி-செம்மறியாடு
சென்னிஉள்ளி-ஒருதலை வெள்ளை பூண்டு
சென்னை-பிறசென்னைமீன்
செடம்-கெந்தியுரிபாஷாணம்
செங்கொட்டி-செங்காஞ்சொறி
செங்கத்தாரி-சுருள்பட்டை
செங்கையான்-ஓர்பூடு
செச்சை-வெட்டிமரம்
செடிக்குடிபுக்கி-நாகவரண்டு
செம்போத்து-சண்பகம்
செலக்குறு } வாச்சாரம்
செலக்கூர்மை }
செலப்பிரீதி-கருப்பூரச்சிலை

சே

சேங்கொட்டை-சேராங்கொட்
சேவகனார்கிழங்கு-கொங்கிலவன் வேர்

சேனை-செரப்பகை
சேனுமரப்பட்டை - அருசிப்பட்
சேபாலிகை-கருநொச்சிமரம்
சேவியம்-வெள்ளைவெட்டிவேர்

சை

சைஸ்வர்-பாவியர்
சைதன்னியம்-வாலைரசம்
சைந்தவம்-இந்துப்பு

சொ

சொகுசா-உயர்ந்தசெம்பு
சொக்காளி-ஓர்பூடு
சொறியன-தவளை

சோ

சோகி-பலகறை
சோபாலிகை-அடுப்பு
சோமன்-சந்திரன்
சோரி-இரத்தம்
சோம்பறை-சோம்பு
சோரக்கதண்டு-கருவண்டு

சௌ

சௌகந்திசை-ஓர்வகை தாமரை
சௌபன்னம் } சுக்கு, மரகதம்
சௌவர்னம் }
சௌமேருகம்-பொன்
சௌவீரம்-இலந்தைக்கனி, ஓர் மருந்து
சௌவீரகம்-இலந்தைமரம்

ஞ

ஞமலி-கல், நாய், மயில்
ஞலவம்-மின்மினிப்பூச்சி

ஞா

ஞானவழி-மூளை
ஞாலம்-பூலோகம்
ஞாழல்பூ-குங்குமப்பூ
ஞானள்-நாதம்
ஞாளிமலம்-நாய்மலம்
ஞாளி-கோழி

த

ததியோதனம்-தயிரிட்டசாதம்
தந்தம்-நகம், பல்
தனுராகம்-படிகாரம்
தனஞ்செயசாரம்-படிகாரம்
தசநாள்-பத்துநாள்
தள்ளடா-ஆதண்டை
தவசிவேர்-தவசிமுருங்கை வேர்
தண்டு-பொலிமதம்
தங்கம்-பரி
தளம்-அடியில்
தவளம்-வெண்மை
தகட்டரிதாரம்-தாளகம்
தகழிச்சி-கருப்பூரம்
தக்காளிப்பிள்ளை-பிள்ளைப்பூச்சி
தக்கிஷராயன்-பொன்னம்ப
தடம்-ஓர்மரம்
வண்டகாகம்-செம்போத்து
தண்டுல்பலை-திப்பிலிச்செடி
தண்டுலீகம்-ஓர்செடி, நெல் முதலியன, வாய்விளங்கம்

ததச்சதை-வாழைமரம்
ததிபலம் } விளாமரம்
தந்தபலம் }
தத்துவண்டியன்-ஓர்பூச்சி
தநம்-சந்தனம்
தநுத்துவசம் } சிறு நெல்லிச் செடி
தநுத்துவசை }
தந்தபீஜகம்-மாதுளை
தபசியம்-முல்லைப்பூ
தப்பளை } தவளை
தாரந்தம் }
தமயந்தி-மல்லிகையிலோர் பேதம்
தரகண்டிகை-யானைநெருஞ்சில்
தருசாரம்-கர்ப்பூரம்
தலபுஷ்பம்-தாழை
தவபோடகம்-ஆவிரை
தலாகிநி-நிலநெல்லிச்செடி
தவராஜம்-வெள்ளைச்சாரை
தனியுப்பு-அமுரியுப்பு

தா

தாளி-தாழி, மிடா
தாமரை-ஓரிதழ்தாமரை
தாலு-நாவு
தாரை-சின்னி, கெவுரி பாஷாண
தாரவாசற்பீடம்-போனி
தாரம்-அரிதாரம்
தாங்கி-மலைதாங்கி
தாதுமாதளை-ஓர்மாதளை
தாத்திரிபலம்-நெல்லிக்கனி
தாநகம் }
தாநாகம் } கொத்துமல்லி
தாநி }
தாபசப்பிரியை-கொடிமுந்திரி
தாபல்கிளதம்-தாளியபத்திரி
தாமிரபல்லவம்-அசோகமரம்
தாமரிகை-குன்றிக்கொடி
தாமோதரன-ஆமை
தார்பததம்-மிளகு

தி

திரிகடுகு-சுக்கு, திப்பிலி, மிளகு
திரிபலம்-கடுக்காய், நெல்லிக்காய்
தான்றிக்காய்.

திருகடல்வாழ்காரம்-வெடிகாரம்
திருகோணவுப்பு-சத்தியுப்பு
திருமேனி-குப்பைமேனி
திருகியகள்ளி-திருகுகள்ளி
திரி-மூன்று
திருப்பி-வட்டத்திருப்பி
திருசம்-சுத்தரசம்
திரேதாயி-பஞ்சசத்தியினென்
திந்திடிசம்-புளியமரம்
திமிர்-சோம்பு
திரடம்-வெண்ணெச்சிமரம்
திரிசம்-வில்வமரம்
திரிபலம்-முருங்கை
திரிபலாசம்-முருக்கமரம்
திரிபுரமல்லிகை-ஓர்மல்லிகை
திரிமஞ்சள்-கஸ்தூரிமஞ்சள், மஞ்சள், மரமஞ்சள்.

திருகுதாழை-ஓர்தாழை
திருக்கொன்றை-ஓர்மரம்

தீ

தீம்பாலை-துறுதிவாதிமரம்
தீரவுப்பு-சத்தியுப்பு
தீநீர்-திராவகம்
தீச்சலம்-கடனுரை
தீச்சுடர்-வெடியுப்பு
தீட்சணகந்தகம்-ஈரவெண்காயம்
தீத்தோபலம்-சூரியகாந்தக்கல்
தீநிறம்-மாந்துளிர், கல்
தீப்புட்பம்-சண்பகப்பூ
பாந்தம்-பெருச்சாளி
தீர்க்கணம்-வெண்சீரகம்
தீர்க்ககாண்டம்-கோரைப்புல்
தீர்க்கசாலம்-சாலமரம்
தீர்க்கசரணம்-பாம்பு
தீர்க்கரதம்-பன்றி

து

துங்கநதி-மூளைஜலம்
துடங்கணம்-வெண்காரம்
துரிகாரம்-பொரிகாரம்
துழாய்-துளசி
துளி-ஆமை
துத்தம்-பாற்றுத்தம்
துரோணிதலம்-தாழை
துவிதாகதி-நண்டு
துறட்டிச்செடி-ஓர்முட்செடி

தூ

தூது-தூதுவேளை
தூமம்-புகை
தூயபிரகருப்பம்-துத்தபாஷாண
தூலசர்க்கரை-பருத்திவிரை
தூலபிசுபஞ்சு

தூலவிருக்கம்-இலவமரம்
தூலிபலம்-இலவங்காய்
தூளிகுச்சம்-கதம்பப்பொடி
தூள்-பூந்தாது
தூற்குலையன்-பிராய்மரம்
தூற்றுமையக்கொற்றான் } ஓர்கொடி,
தூற்றுவாயக்கொற்றான்

தெ

தெரிகாரம்-பெரிகாரம்
தெகில்-ஓர்கொடி
தெல்லுப்பு-வளையலுப்பு
தெளிவெண்ணெய்-நறுவேலிபெண்ணெய்

தே

தேன்குழல்-பண்ணிகாரம்
தேவதாமணி-மணிக்குடல்
தேசம்-தேசாபுரம்
தேகவச்சிரகம்-சுத்தாகம்
தேசி-நாதம், குதிரை
தேவர்கோன்-தேவேந்திரன்
தேநசம்-மூங்கில்
தேசோவதி-யானைத்திப்பிலி
தேர்க்கூம்பு-கொடிஞ்சிமரம்
தேவகாஷ்டம்-தேவதாரி
தேவதூபம்-சாம்பிராணி
தேவலதை-அடுக்குமல்லிகை
தேவல்லபம்-சுரபுன்னை
தேவவிருட்சம்-ஓர்மரம்
தேவிகை-ஊமத்தை
தேன்கதலி-ஓர்வாழை
தேன்தோடை-ஓர்தோடை

தை

தைலம்-ஆமணக்குநெய்
தைலசௌரிகை-வெளவால்
தைலபர்ணிகம்-வெண்சந்தனம்
தைலபீலிகை-செவ்வெறும்பு

தொ

தொய்பாக்கீரை-துயிலிக்கீரை
தொய்யல்-துன்பம்
தொய்யில்-ஓர்கீரை

தோ

தோடா-ஆடாதோடை
தோகைகுழல்-முடிப்பிலை, முதியார்கூந்தல்
தோகசம் } பால்
தோகாபநயம்
தோதிப்பிரியம்-இலவங்கம்

தௌ

தௌதம்-வெள்ளி
தௌதிகம்-முத்து
தௌலேயம்-ஆமை

ந

நடுவுப்பு-கல்லுப்பு
நவநீதாதி-தயிர்ஜலம்
நஞ்சுமுறி-மணிக்குடல்
நகம்-தந்தரசம்
நருளிகை-சத்திசாரம்
நரிகாரம்-பொரிகாரம்
நரியுப்பு-கரியுப்பு
நறுந்தை-நறுந்தாளி
நடக்கீதம்-கௌரிபாஷாணம்
நன்றுச்சி-எகவுரிபாஷாணம்
நதி-கெந்தியுரிபாஷாணம்
நகாரணம்-விந்து
நஞ்சுண்டபட்டை - நச்சுப்பாலைபடை
நல்லாரி-சிவகரந்தை
நகரிபகம்-காகம்
நகையால்-பகன்றைச்செடி
நடநாயகன்-கெருடபச்சைக்கல்
நட்சத்திரகண்டகி-அநாசிச்செடி
நட்சத்திரசீரகம்
நட்சத்திராகிருதி-வெண்சோனை

நடுவாய்க்காலி - ஓர்விஷ செந்து, கொடுக்கன்
நண்டுக்காக்கீரை-ஒருகீரை
நதீவடம்-காரலமரம்
நதீவரம்-தகரம்
நத்து-ஓர்பறவை, சங்கு
நம்பகன்-சீர்பங்கபாஷாணம்
நல்லம்மான்பச்சிரிகி-ஓர்பூண்டு
நவலோகாங்கம்-காந்தம்
நவிரெழுசங்கு-முட்சங்கு
நளுங்கு-ஓர்கிளிஞ்சில்
நறுக்கு-மூலம்
நறுந்தாளி-ஓர்கொடி
நற்சாங்கம்-சாலம்பபாஷாணம்
நற்சாரி-நவாசாரம்
நற்பாகுன்றி-சிந்துலவணம்

நா

நாகணம்-நகம்
நாரத்தகச்சல்-போசனகஸ்தூரி
நாதவச்சிரவாணி-முடிமாமிசம்
நாற்றம்-அங்கப்பிச்சு
நாதரவி-சரீரக்கொழுப்பு
நாதசாரம்-சிவசாயம்
நாகதெய்வம்-இந்துப்பு
நாடியுப்பு-வளையலுப்பு
நாதவடியுப்பு-கரியுப்பு
நாலங்கள்ளி-இலைக்கள்ளி
நாழி-படி
நாகம்-நாகேசரம்
நாயகம்-கிரந்திநாயகம்
நாளிகேரம்-தேங்காய்
நாறி-நன்னாரி
நாகேசரம்-சிறுநாகப்பூ
நாராயணிதம்-கௌரிபாஷாணம்
நாபிரசம்-விந்து
நாதம்-மகாரசிங்கி, இரசம்
நாகரீகசெம்பு-தண்டு
நாககாணம்-செவ்வாமணக்கு
நாககற்பம் } செவ்வியம்
நாகசம்பவம் } செவ்வியம்

நாகக்குவடு-செம்புமலை
நாகசம்-சிந்தூரம், வழுங்கம்
நாகதந்தி-ஓர்மரம்
நாகதகனி-ஓர்மரம்
நாடன்பருத்தி-ஓர்செடி
நாங்கொளி-ஓர்பூண்டு
நாமவெகுண்டம்-தும்பை
நாய்க்குட்டிச்செடி-ஓர்செடி
நாகலிகம்-எருமை, காகம், தாமரை.

நாவிச்சட்டம்-கஸ்தூரி
நாறுகட்டி-பெருங்காயம்
நான்முகப்புல்-ஓர்புல்

நி

நிம்பெண்ணை-வேப்பெண்ணை
நிம்பவித்து-வேப்பங்கொட்டை
நிம்பம்விரை-வேப்பம்விரை
நிம்பம்-எலுமிச்சம்பழம்
நிம்பத்தால்-வேப்பம்பட்டை
நிலவேரு-நாகப்பூச்சி
நிலத்துழாய்-நிலத்துளசி
நிரஞ்சனம்-இரசகற்பூரம்
நிசாபதி-கற்பூரம்
நிசித்தண்ணீர்-நீராகாரம்
நிஷக்கல்லு-சீதாங்கபாஷாணம்

நீ

நீரொட்டிவிரை-நீராரைவிரை
நீடூரம்-பாஷாணம்
நீச்சத்தாளி-இரசம்
நீர்ப்பூண்டு-நீர்முள்ளி
நீர்நெருப்பு-கல்லுருவி
நீர்மிட்டான்-தண்ணீர்விட்டான்
நீகம்-தவளை
நீம்பல்-வெடியுப்பு
நீரசம்-தாமரை
நீரக்குன்று-நத்தை

நீர்ப்பகண்டை-ஓர்பூண்டு
நீர்ப்பரிசை-ஆரை
நீலகண்டன்-ஓர்மரம், துரிசி, முருங்கை
நீலக்காரம்-துருசு
நீலதரு-தெங்குமரம்
நீலபத்மம்-நீலோற்பலம்
நீலாங்கம்-மலைத்தேள்
நீலாங்கு-புழு
நீலாம்புயம்-கருங்குவளை

நு

நுணல்-தவளை

நெ

நெல்லிமுள்ளி-நெல்லிவற்றம்
நெல்லி-ஓர்புல்

நே

நேத்திராரி-கள்ளிமரம்
நேபாலிகை-ஓர்பாஷாணம்

ப

பகற்பசும்பால் - பகலிற் சுரந்து இரவிற் கரக்கும்பால்
பசலைக்கீரை-பசரைக்கீரை
பஞ்சவலக்கம் - பஞ்சபட்டைகள்
பரவெளி-மூளை
பரமானந்தநீர்-மூளைஜலம்
படாச்சாரம்-சத்திச்சாரம்
படுகாரம்-பொரிகாரம்
பசுமைவெளியுப்பு-வளையலுப்பு
பாமுகவுப்பு-கரியுப்பு
பங்கி-சாதிலிங்கம்
பஞ்சதாரை-சர்க்கரை
பத்திரி-சாதிபத்திரி
பரிவாலி-குதிரைவாலி
படகம்-பாற்படகம்
படை-பருப்படை
பச்சைப்பூரம்-பச்சைக்கற்பூரம்
பத்திரி-இலைவகை
பச்சை-பச்சிலை
பழந்தண்ணீர்-நீராகாரம்

பண்டி-வயிறு
பரப்பிரமவிந்து-வாலைரசம்
பரயோனி-யோனி
பரி-தங்கம்
பழச்சாறு-எலுமிச்சங்கனி ரசம்
பட்சம்-பதினைந்துநாள்
பசுமூலி-பச்சைமூலி
பட்சவாதம்-பாரியவாயு
பச்சோந்தி-பச்சைஓணான்
பரிக்குளம்பு-குதிரைகுளம்பு
பல்விப்பூண்டு-கொல்லைப்பல்லி
பறங்கிக்காய்-பூசனிக்காய்
பங்ககிரீடம்-பன்றி
பஞ்சகூடம்-ஆமை
பஞ்சகோலம் - சித்திரமூலம் சுரகு, செவ்வியம், திப்பிலி, திப்பிலிமூலம்.
பஞ்சநகக்கூர்மையோன்-ஆமை
பஞ்சநகம்-ஆமை, புலி, ஆனை,
பஞ்சநகி-உடும்பு
பஞ்சலவணம்-ஐவகையுப்பு
பஞ்சாங்ககுத்தம் } ஆமை
பஞ்சாங்கக்கூர்மை }
படிகம்-பளிங்கு, வெள்ளிலோத்திரம்
படுக்கையாமணக்கு-ஓராமணக்கு
படுத்துருமம்-வெள்வேலமரம்
படையிராசன்-வெடியுப்பு
படோலகம்-சிப்பி
பணாகர்மம் }
பணாபவம் } பாம்பு
பணாதரம் }
பணைத்திராய்-ஓர்பூண்டு
பண்கொடி-பிரம்பு
பதுமவீசம் } தாமரைக்கொட்டை
பதுமாக்கம் }
பத்தரூபி-கருப்பூரம்
பத்திசூலம்-ஓர்நோய்
பத்திரங்கம்-செஞ்சந்தனம்
பத்திரசிரேட்டம்-வில்வம்

பத்திரசிரயம்-சந்தனம்
பத்திரகாலி-சாதிமல்லிகை
பத்திரவீரியகம் - கோரை, மூங்கில், பிரப்பஞ்செடி.
பத்திராச்சியம்-தாளிசபத்திரி
பத்திராங்கம் - ஊமத்தை, செஞ்சந்தனம்
பத்திராத்தியம்- திப்பிலிமூலம்
பயோதிகம்-கடல்நுரை
பரபிருதம்-காகம், குயில்
பரமன்-சீர்பந்தபாஷாணம்
பராகத்தின்-சேவகன், பன்றி
பலகை-தொட்டிபாஷாணம்
பலாசம்-கிளி
பலாசாக்கியம்-பெருங்காயம்
பலிபுட்பம்-காக்கை
பலிமுகம்-குரங்கு
பறைப்பருந்து-கரும்பருந்து
பனந்தாழை-ஓர்கற்றாழை
பன்னுசி-ஓர்துளசி
பன்னை-ஓர்செடி, கருப்பூரம், கூடம்

பா

பாலனைக்காத்தாள் -மணித்தக்கா
பாகு-பாக்கு
பானம்-கள்
பாஞ்சசன்னியம்-சங்கு
பாச்சான்-கள்ளி
பாதரசம்-சுத்திசெய்தரசம்
பாதுகை-பாதக்குறடு
பாலொடுவை-கொடிப்பாலை
பால்புங்கு-தட்டைப்புங்கு
பாற்சொற்றி-பொற்றிக்கீரை
பாடநம்-சித்திரமூலம்
பாண்டுரங்கம்-தவனம்
பாண்டுரேட்சு-வெண்கரும்பு
பாண்டுரை-பாதிரிமரம்
பாதபரிசம்-சீதாங்கபாஷாணம்
பாரிவர்னம்-முள்ளங்கி
பாவணி-கங்கை, துளசி, பசு
பானிக்குரிச்சி-சீனக்காரம்

பி

பிசின்பட்டை-மயிலாலக்கடி
பிர்மவுப்பு-கரியுப்பு
பிசித்துளிர்-வேப்பந்துளிர்
பிரமண்டை-பேய்மிரட்டி
பிரமை } மயக்கம்
பிராந்தி } மயக்கம்
பிர்மவிந்து-பாஷாணம்
பிண்டரசம்-சுத்தரசம்
பிண்டயோனி-யோனி
பின்துடர்- திகைப்பூண்டு, ஆடையொட்டி.
பிரம்பின்மூலம்-பிரப்பங்கிழங்கு
பிரமராட்சதை மூலம்-பிரமராக்கதன், காசிவேர்.
பிளாஸ்திரி-களிம்பு
பிகி- பெண்குயில்
பிங்கலோகம்-பித்தளை
பிண்டரோபணம்-நாரத்தை
பிண்டீதகம்-மருக்கொழுந்து
பிரகுடி-காட்டுமல்லிகை
பிரமோதனி-மல்லிகைக்கொடி
பிரேதராட்சசி- துளசி
பிள்ளைக்கற்றாழை-ஓர்கற்றாழை

பீ

பீசம்-அக்ஷரம்
பீதசந்தனம்- பொதிகைமலையிலுண்டான செஞ்சந்தனம்
பீதசம்பகம்-ஓர்வகைச் சண்பகம்
பீத்தாரு } தேவதாரமரம்
பீதத்துருமம் } தேவதாரமரம்
பீதநி-மூவிலைப்புன்னை
பீதபீஜம்-வெந்தயம்
பீதமணி-புஷ்பராகம்

பீதலகம்
பீதளம் } பித்தளை
பீதனேகம்
பீருகம்-ஆந்தை, காடி
பீலு-அமுக்கரு, பசு, பெண்கிளி.
பீசனக்குறட்டை-ஓர்பூடு

பு

புலித்தொடக்கி-புலிபுகாஈக்கை

புல்லங்கண்டங் கரும்பு-சக்கரைக் கட்டிக்கரும்பு

புனலுப்பு-பூரணாதியுப்பு
புனமல்லி-காட்டுமல்லி
புட்டில்-புட்டிவெல்லம்
புலி-துடரி
புள்ளு-சிறுபுள்ளடி
புனல்-சலம்
புறம்-முதுகு
புத்தகம்-மயிலிறகு, படிகாரம்
புவியாடம்-இரசகற்பூரம்
புருஷோத்தமம்-வாலைரசம்
புகர்நாள்-வெள்ளி
புட்பகாசீசம்-அன்னபேதி
புட்பகீடம்-ஓர்வண்டு
புட்பமஞ்சரிகை-நீலோற்பலம்
புஷ்பேந்திரம்-சண்பகமரம்
புணை-மூங்கில்
புதினா-ஓர்பூண்டு
புரப்பிரியை-அநாசிச்செடி

பூ

ரவி-சரீரக்கொழுப்பு
திகாரம் } சீனக்காரம்
திகாரம்
ருதியுப்பு-யாகவுப்பு
ப்பு } சத்தியுப்பு
ப்பு
லாத்திப்பூரம்

பூரம்-பச்சைக்கற்பூரம்
பூண்டு-வெள்ளைப்பூண்டு
பூவந்திப்பழம்-மணிப்புங்குப் பழ
பூதப்பட்டை-பூதகரப்பான்பட்
பூமிவிளா-நிலவிளா
பூலா-வறப்பூலா
பூபட்டை-லவங்கப்பட்டை
பூர்ணம்-மோரா
பூப்புடம்-குழிப்புடம்
பூநாகம்-நாகப்பூச்சி
பூனைமூலி-குப்பைமேனி
பூட்டு-சூட்சம்
பூகேசம்-ஆலமரம், நீர்ப்பாசி.
பூக்கஞ்சா } ஓர்கஞ்சா
பூங்கஞ்சா
பூதவேசி-வெண்ணொச்சி
பூதிமாருதம்-வில்வமரம்
பூமிகதம்பம்-நிலக்கடம்பு
பூமிகுருவகம்-வெள்ளெருக்கு
பூமிக்கூர்மை-வெடியுப்பு
பூவரசு-ஒருமரம்
பூவன்வாழை-ஒருவாழை
பூவிளம்-கற்பாஷாணம்
பூளை-இலவம்பஞ்சு

பெ

பெதிகாரம்-பொரிகாரம்
பெருகுவேறில்-வேறிதயிரில்
பெருவாயன்-கழுதை
பெருஞ்சீரகம்-சோம்பு
பெருமருந்து-தலைச்சுருளி
பெரியாம்பல்-அல்லி
பெண்குமஞ்சான்-சாம்பிராணி
பெரியம்மான்பச்சரிசி-ஒருபூடு
பெருங்கலையலி-ஒருநெல்
பெரும்பாற்சோற்றி-ஒரு பூண்டு
பெருவெள்ளை-ஒருநெல்

பே

பேரண்டம்-மூளை, தலையோடு
பேராளி-மூளை

மாதகம்-லவங்கம்
மாதுலுங்கம்-மாதளை
மாதவப்பிரியம்-செம்பூசினி
மாதர்குணச்சலம்-வெங்ககம்
மாதவிகை-வசந்தமல்லிகை கொடி
மாதுரம்-மல்லிகை
மாருண்டம்-பாம்புமுட்டை
மார்ச்சாரகண்டம்-மயில்
மார்ச்சாரி-கஸ்தூரி
மார்த்தண்டம்-எருக்கு, பன்றி
மாலகம்-வேப்பமரம்
மாலதிபத்திரி-சாதிபத்திரி
மாலதிபலம்-சாதிக்காய்
மாலாகண்டம்-நாயுருவி
மாவியம்-புஷ்பம்
மாலைநுழைஞ்சான்-ஓர்பூண்டு
மால்பாகலட்சுமி-அரிதாரம்
மால்விந்து-அப்பிரகம்

மி

மிலிங்கிதன்-அரிதாரம்
மிரட்டி-பேய்மிரட்டி
மிதுதி-கரிக்குருவி
மிருக்காமிளி - வாயுவிளங்கம்
மிருகமதவாசை-கஸ்தூரிமல்லி
மிருகாண்டஜை-கஸ்தூரி
மிருணுவி-தாமரை
மிருதங்கபலம்-பலா
மிருதுபர்வகம்-பிரம்பு
மிருதுபலம்-பேரீந்து
மிருதுரோசனி-இலைக்கள்ளி
மிருத்தியுபலம்-இலந்தை
மிருத்தியுபலை-வாழை
மிருத்தியுபுஷ்பந்தயம்-மூங்கில்
மிருத்தியுப்பிரசூநம்-கரும்பு
மிருத்தியுநாசகன்-பாதரசம்

மீ

மீசு-மிருதி
மீன்வெட்டி-சுறு
மீடம்-மூத்திரம்
மீனம்மல்-ஓர்மந்திரம்
மீன்தலைதாளம்-மீனெலும்பு

மு

முடியுப்பு-கல்லுப்பு
முதற்கரு-மூளை
முடியண்டச்சவ்வு-முடிமாமிசம்
முலங்கம்-சல்லிக்கொடி
முயலுப்பு-விளையலுப்பு
முத்தம்-கோரைக்கிழங்கு
முலையமுது-முலைப்பால்
முத்தம்-சங்கன்
முளை-குழந்தை
முசுறுமுட்டை } ஓர்வித எறும்
முசுறண்டம் } பின் முட்டை
முட்டிக்காய்-தாமுட்டிக்காய்
முத்தெருக்கன்-நிலக்கடம்பு
முத்தீ-கமலாக்கினி, காடாக்கினி,
தீபாக்கினி
முதற்றாய்-கருசிலை
முத்திருக்கன்செவி-நிலக்கடம்பு
முட்டைநாறி-எருமுட்டைப்பீநாறி
முட்டி-பேயாமுட்டி
முசுக்கை-முசுமுசுக்கை
முகந்தம்-முருங்கைமரம்
முகசோதி-எலுமிச்சை
முகக்ககம்-ஈரவெண்காயம்
முகபூஷணம்-தாம்பூலம்
முகிற்குன்மம்-வக்கிராந்த பாஷாணம்
முகுரம்-ஒருமல்லிகை
முக்கஞ்சுகம்-தோலுரித்தப் பாம்பு
முக்தாகாரம்-முத்துச்சிப்பி
முக்தாபலம் - கர்ப்பூரம், முத்து
முசங்கி-ஒருவகைக்கோவை
முச்சினியக்கேடு } சோம்பு
முச்சினியம் }

முடிக்கோரை-ஒருபுல்
முட்கத்திரி-முள்ளங்கத்திரி
முட்கடு-ஒருகடுகுமரம்
முட்டைப்பாசி-ஒருநீர்ப்பூண்டு
முட்பாஷா-பன்றிமுள்
முட்புறக்கனி-பலாமரம்
முண்டீரம்-ஒருமரம்
முண்ணுயகி-ஒருசெடி
முண்முருக்கு-ஒருமுருக்கு
முதங்கி-வெள்ளகத்தி
முதலைப்பூண்டு-ஒருபூண்டு
முத்துகற்கம்-ஒருமருந்து
முததுடைக்காய்-தேங்காய்
முல்லைகிலப்புள்-காட்டுக்கோழி
முள்ளுநாயகம்-ஒருகொடி
முறுவஞ்சு-முத்து
முனிசடிலம்-தவனம்
முனித்துருமம்-காரகத்தி
முனிந்துரை-வெந்தயச்செடி
முனிபித்தலம்-தாமிரம்
முனிமூத்திரம்-கல்லுப்பு
முன்றொடரி-ஒருசெவி

## மூ

மூகூலம்-தந்திமரம்
மூக்கணவன்-ஒருசெடி
மூக்கரட்டை-ஒருசெடி
மூலவெளி-மூளை
மூளை-சச்சிதானந்தவெளி
மூவி-மணிக்குடல்
மூலம்-சித்திரமூலம்
மூர்த்தம்-உடல்
மூதண்டம்-நாதம்
மூலதடி-தண்டு
மூலநாயகன்-திருமூலர், கியாழம்
மூதண்டக் கியாழம்-அறுகுவேர் கியாழம்
மூலப்பட்டை-சித்திரமூலப்பட்
மூக்கொலியன்-சங்கு
மூங்கா-கிரி
மூஞ்சுற்றுமுள்ளன்-ஓர்கிழங்குக் கொடி
மூதா-தம்பலப்பூச்சி
மூலகதலம்-ஓர்முருங்கை
மூலகபல்லவம்-முருங்கைமரம்
மூலக்காணி-கற்கடக பாஷாணம்
மூலைரம்-சடை

## மெ

மெய்யுதகம்-சிறுநீர்
மெழுகுபாகல்-ஓர்பாகல்

## மே

மேற்பலகை-நகம்
மோசம்-வெண்காரம்
மேடியுப்பு-வளையலுப்பு
மேனி-குப்பைமேனி
மேடிரைச்சல்-வயிற்றிரைச்சல்
மேதிநவநீதம் - எருமை வெண்ணெய்
மேற்கி-பாஷாணம்
மேகத்தின்விந்து-பூநாகம்
மேச்சை-கருமஞ்சிலை
மேண்டம்-ஆடு
மேதகம்-சாலாங்கபாஷாணம்
மேதாவினி-நாகணவாய்ப்புள்
மேதிக்கவிணன்-மூர்த்தபாஷாணம்
மேந்திகை } வெந்தயம்
மேநதி }
மேருமணி-நாயகமணி
மேலாமுதுரம்-கஸ்தூரி, எலும்பு
மேகம்-வக்கிராந்தபாஷாணம்

## மை

மைச்சந்தன் } கச்சற்பாஷாணம்
மைச்சமனந்தன் }

## மொ

மொசுகைகை-மொசுமொசுக்கை
மொட்டு-மொக்கு
மொக்கைச்சோளம்-ஓர்சோளம்

மோ

மோகநிதப்பிச்சு-அங்கப்பிச்சு
மோகவிந்து-தண்டு
மோசகம்-வாழை
மோசகி-கிலுகிலுப்பைச்செடி
மோசனி-இலவமரம்
மோசை-அவுரி, இலவு, வாழை
மோதயர்தி-காட்டுமல்லிகை
மோதிநி-கஸ்தூரி, மல்லிகை
மோதிரக்களி-ஓர்கொடி
மோரடம்-கரும்புவேர், வேர்

மௌ

மௌனசாரம்-சிவசாரம்
மௌத்திகம் } முத்து
மௌகத்திகம் }

ய

யமத்தருமம்-இலவமரம்
யமபிரியம்-ஆலமரம்
யவசம் } வெடியுப்பு
யவக்ஷூகம் }
யவபலம்-மூங்கில்
யவம்-பூர்வகைக்கோதுமை, நெல்
யவநாலசம் } வெடியுப்பு
யவலாசம் }
யவாநி } ஓமம்
யவாநிகை }

யா

யாருந்தின்னுமூலி-அங்கப்பிச்சு
யானைபதி-நகம்
யாடவச்சாரம்-சத்திசாரம்
யாகவுப்பு-பூரணதியுப்பு
யானைக்கால்-வணங்கிப்பூண்டு நெருஞ்சில்
யாவக்ஷூகம்-வெடியுப்பு
யாவநாலம்-சோளம்
யாவம்-அரக்கு, செம்பஞ்சு
யானைப்பூச்சான்-ஓர்செடி

யு

யுருவாதியுப்பு-பூரணதியுப்பு
யுவர்-கலர்மண்ணு
யுவமபத்திரிகை-அசோகமரம்

யூ

யூதி-காட்டுமுல்லை

யோ

யோத்திரம்-சிவசாரம்
யோனிகாரம்-படிகாரம்
யோகாங்கம் } கொளுஞ்சிமரம்
யோகாரங்கம் }
யோகிதண்டம்-பிரம்பு

ர

ரவி-வெயில், சூரியன்
ரதிபாணம்-தண்டு
ரச்பந்தங்கம்-வாலைரசம்
ரசிதப்-வெள்ளி

ரோ

ரோசினை-கோரோசினை
ரோகணி-கடுகுரோணி

ல

லவணம்-உப்பு

லி

லிங்கம்-ஜாதிலிங்கம்

லோ

லொத்திரம்-விளாம்பட்டை

வ

வகாரவுப்பு-கல்லுப்பு
வராளி-மண்ணீரல்
வடங்கன்-வெங்காயம்
வங்கநடம்-வெண்காயம்
வரிகாரம்-பொரிகார
வலைகாரம்-வெடிகாரம்
வடகாரம்-வெடிகாரம்
வளையலுப்பு-மதியுப்பு
வஸ்துப்பு-கரியுப்பு

வட்டநரிவிரட்டி - வட்டகிலுகிலுப்பை.
வல்லி-சீந்தில்
வரட்சுண்டு-ஆடுதின்னுப்பாளை
வட்டப்புல்-காவட்டம்புல்
வரிக்குமரியன்னம் - வரிகற்றாழஞ்சோறு.
வட்டத்திருப்பி-ஓர்திருப்பி
வல்கி-சோறு
வழுதலை-கண்டங்கத்திரி
வண்ணம்-நிறம்
வனமரை-ஒரிதழ்த்தாமரை
வன்னி-நெருப்பு
வச்சிராசம்-சுத்தரசம்
வழலைரசம்-சுத்தரசம்
வளவுதடி-தண்டு
வன்னம்-தங்கம்
வஸ்து-மதுபானம்
வழலை-உப்பு
வழிக்குண்டி-கட்டுச்சோறு
வண்டுகொல்லி-செண்பகம்
வக்கிரபுஷ்பம்-முருக்கமரம்
வங்கசெந்தூரம்-ஈயபஸ்பம்
வங்கசேநகம்-வெள்ளகத்தி
வங்கநீறு-ஈயமணல்
வங்காரவாசி-ஓர்கீரை
வங்காளத்திப்பிலி-ஓர்திப்பிலி
வசநாவி-நஞ்சு
வசந்தகோலி-குயில்
வசாரம்-கோழி
வசினி-வன்னிமரம்
வசிரம்-கடலுப்பு
வசுசெந்திகை-நாய்வேளைச்செடி
வச்சிரத்தலைச்சி-கதண்டு
வச்சிரபீசகம்-கொடிப்புன்கு
வச்சிரபுட்பம்-எள்ளு
வச்சையம்-கலைமான்
வட்டகிலுகிலுப்பை - ஓர்கிலுகிலுப்பை.
வத்தூரம்-பொன்னுங்கண்ணி
வநசந்தனம்-அகில், தேவதாரம்
வநசந்திரிகை-மல்லிகை
வநசம்பகம்-காட்டுச்சண்பகம்
வாச்சாகம்-காட்டாடு
வநசிரம்-காட்டுச்சரகம்
வப்பிரம்-ஈயம்
வமநீ-அட்டை, பருத்தி
வயற்கல்-வெள்ளைச்சுக்கான்கல்
வயற்-கோவியன்
வயிற்றுக் கிராந்தம்-குமுதபாஷாணம்.
வயோவங்கம்-ஈயம்
வாட்சுண்டி-ஓர்செடி
வரண்டாலு-ஆமணக்கு
வரதாரு-தேக்குமரம்
வராகிவேள்-பன்றிமுள்
வராங்கம்-லவங்கப்பட்டை
வராங்கி-மஞ்சள்
வராலவகம்-லவங்கம்
வருக்கை-பலா
வருணவிந்து-முத்துச்சிப்பி
வரேணியம், வர்ணம் } குங்குமம்
வர்ணவதி-மஞ்சள்
வர்ணி-பொன்
வலிச்சற்கொடி-ஓர்கொடி
வலீநகம்-தாழை
வலீநம்-தேள்
வல்லுளி-பன்றி
வல்லவலொட்டி, வல்வாலொட்டி } ஓர் முட்செடி.
வழலையுப்பு-சவுக்காரவுப்பு
வற்குலிகம்-வலியான்குருவி
வனசிருங்காடம்-யானைநெருஞ்சில்.
வனலக்ஷிமி-வாழை
வனவிலாசினி-ஓர்செடி
வனமலகம்-காட்டுநெல்லி
வனீரம்-காட்டுத்திப்பிலி

வா

வாசவுப்பு-கல்லுப்பு
வாணி-முடிமாமிச
வாமரோதயவாஞ்சி-மண்ணீரல்
வாதரவி } சரீரக்கொழுப்பு
வாடபதி }
வாலைசாரம்-சத்திசாரம்
வாலைரகுபதி காரம்-சீனக்காரம்
வாதிகாரம்-வெடிகாரம்
வாதிக்காரம்-படிகாரம்
வாணி-இந்துப்பு
வாதமையவுப்பு-கரியுப்பு
வாணிமலர்-வெண்தாமரை
வாலி-குதிரைவாலி
வாலு-வாலுவையரிசி
வாயசம்-காகம்
வாகு-தொட்டில்வாடி
வாதரக்கி-பாஷாணம்
வானமடை-கெவுரிபாஷாணம்
வாதி-கெந்தியுரி பாஷாணம்
வாலை-இரசம்
வாதம்-இரசம்
வாலைரசம்-பரப்பிரமவித்து
வாசுகி-வித்து
வாசிலிங்கரு-தண்டு
வாலுரை-அடுப்பு
வாலை-திராகமிறக்கும் குழாயா யுள்ள பாண்டம்.
வாகை-நிலவாகை
வாகுலம்-வகிழங்களி
வாஜிபட்சம்-கடலை
வாட்யாயனி-அதிபலை
வாதவைரி-ஆமணக்கு
வாத்ரோணவாயசம்-மலைக்காகம்
வாரிபானி-வள்ளைக்கீரை
வாரியுற்பவம்-தாமரை
வாரிருஹம்-தாமரை
ாலமாலம்-அரிதாரம்
வாலவாயசம் } வைடூரியம்
வாலவாயம் }
வால்மீகபலம்-எலுமிச்சை

வி

விஷப்பூடு-அங்கப்பிச்சு
விஷமணி-மணிக்குடல்
விரிகாரம்-பொரிகாரம்
விலாட்புரகாரம்-சீனக்காரம்
வித்திகம்-இந்துப்பு
விவேகமதிப்பு-வளையலுப்பு
விசிதவெளியுப்பு-வளையலுப்பு
விந்தாக ்-ஜாதிலிங்கம்
விருக்கு-ஜாதிலிங்கம்
விரோசனா-பேதி
விரைசீரம்-வாசனையான சீரம்
விளா-நிலவிளா
விடையம்-அதிவிடையம்
விபவம்-செல்வம்
விருஞ்சிக்குடி-கெந்தியுரிபாஷா ணம்.
விந்தம்-பச்சைக்கர்ப்பூரம்
விரலிபச்சை-பச்சைக்கர்ப்பூரம்
விந்து-நாபிரசம்
வியல்-பொன்
விடந்தீஞ்சான்-கொல்லைப்பல்லி
விடத்தலை-விடத்தாளி
கங்கதம்-இலந்தை
விகிரணம்-எருக்கிலை
விசபுட்பம் } தாமரை
விசப்பிரசூனம் }
விசிகிலம்-தவனம், மல்லிகை
விசுவெஞ்தம்-சுக்கு
விட்டுணுபரியம்-துளசி
விபுலரசம்-கரும்பு
வியடம்பகம்-ஆமணக்கு
விலாக்கிரதலம் } ஆமணக்கு
வியாக்கிரபுச்சம் }
விராணி-யானை
விருகத்திரணம்-மூங்கில்

விருட்சநாதன் } அரசு
விருட்சபாகன் }
விருட்சாரம்-அரசமரம்
விருந்தாகம்-சோம்பு
விருந்தை-துளசி
விருபன்-வெள்ளெலி

வீ

வீரவுப்பு-கல்லுப்பு
வீரவுப்பு-பூரணுதியுப்பு
வீழி-விழுதி
வீரம்-தங்கம், சைவீரம்
வீரணம்-இலாமிச்சம்வேர்

வெ

வெள்ளிவேர்-சல்லிக்கொடி
வெண்காரம்-காடிசம்
வெடிகாரம்-சிலகாரம்
வெடிபகீரதி-படிகாரம்
வெண்காவெளி-வெள்ளைப் பூண்டு
வெதுப்படக்கி-எருமுட்டைப் பிராறி.

வெகுவாசமுடைய யோகி-வசம்பு வெட்டிவேர்.

வெலும்பி-ஒற்றைப் பேய்மிரட்டி
வெதுப்படக்கி-பேய்மிரட்டி
வெள்ளுள்ளி-வெள்ளைப்பூண்டு
வெள்ளம்-பிரளயம்
வெரிமருந்து-பாஷாணம்
வெள்ளாணை-பாலைரசம்
வெள்ளை-சங்குபாஷாணம்
வெடி-பொட்டிலுப்பு, வெடியுப்பு
வெள்ளைபாஷாணம் - சங்குபாஷாணம்.

வெளிக்கரு-உருதுசீலை
வெண்மதி-வெள்ளைச்செம்பு
வெங்கோன்றி - ஆகாச கருடன் கிழங்கு

வெண்காவேளை-வெள்ளை கொள் காய்வேளை.
வெளிச்சி-விளாம்பிசின்
வெண்மறி-வெள்ளாடு
வெண்சலசம்-வெண்டாமரை
வெண்டகரை-ஓர்பூண்டு
வெதிர்மூங்கில்
வெள்வரி-பலகறை
வெள்ளடை-வெள்வெற்றிலை
வெள்ளரசு-ஓரரசு
வெள்ளிறகுமந்தாரை-ஓர்மந்தாமரை.

வே

வேலை-வெண்காரம்
வேதியன்-சீனக்காரம்
வேவி-உத்தாமணி
வேலிப்பருத்தி-உத்தாமணி
வேலிப்பத்திரம்-உத்தாமணியிலை
வேல்விருபாள்-மீதிரைவேர் கஸ்தூரிமஞ்சள்.

வேதை-இரசம்
வஷ்டகம்-பிசின்
வேணுகம்-மிளகு
வேணுபலம்-மூங்கிலரிசி
வேதனி-வெந்தயம்
வேராம்-கருப்பூரம்
வேரடம்-இலந்தைப்பழம்
வேர்க்கொம்பு-இஞ்சி, சுக்கு
வேல்லஜம்-மிளகு

வை

வைகழுவி-கல்லிக்கொடி
வைசூரி-அம்மை
வைணவம் } மூங்கிலரிசி
வைஷ்ணவம் } வேய்ங்குழல்.
வைராடம்-இந்திரகோபம்
வைலவம்-வில்வம்

வோ

வொருகதூமம்-நீர்மேற்படர் கொ
வொருட்சநாதம் } ஆலமரம்
வொருட்சபாகம் }
வொருட்சாதகம்-அரசமரம்
வொருட்சாதனி-காட்டுப்பாகல்
வொருத்தசங்கம்-கிளிஞ்சில்
வொருத்தபலம்-இலந்தை, மாத ளை, மிளகு.
வொருத்தமல்லிகை - குடமல்லி

அரும்பொருள்

குத்திரம்-பொய்
கடவுள்-குரு
குணங்கள்-அவ்வவ்வியாதியின் குணங்களே
குதிகள்-விழி நாசி, நா, மல சலக் குதிகள்
நாடி-வாத பித்த சேஷ்ம பகுப் பால் பிணிகளைக் குறித்தறிதல்
பரிசனை-பழக்கம், வேகமுடைய வும் விஷமருந்துத்தள்ளி செய் யென்பது கருத்து
ஆயுருவேதம்-வைத்திய சாஸ்திர
அந்தணர்-முனிவர்
ஆசிரியன்-குரு, பிடகர், வைத்தி யர்.
அயனம்-பிறப்பு, விருத்தம், மூப் பு, தூரமிலா, வீட்டுக்குத்தூ ரமாக.
தண்ணீர்த் துறையேறு - மாதமு ழுக்கில்லா, மாதவிடையாகா.
குருதி-இரத்தம்
தசை-சதை
கலவி-புணர்ச்சி
சோரி-இரத்தம்
மதர்த்தல் - செழித்தலின்கொழு மை.
கிருமி-புழு
புழுகு-புனுகு
நவம்-ஒன்பது
ஏகம்-ஒன்று
தசம்-பத்து
எச்சம்-பிள்ளை
சேய்-பிள்ளை
மிடறு-தொண்டை
அளிதோஷம்-கர்ப்ப மழிந்ததோ ஷம்
அகடு-வயிறு
சொயம்பி-சோம்பு
குரை-இரைச்சல்
அதரம்-கீழுதடு
அழுங்கி-அழுது
கரிய-கருத்த
குழவி-பிள்ளை
குக்கில்-வயிற்றில்
குஞ்சி-குழந்தை
துஞ்சிடும்-தூங்கும்
மண்ணை-பேய்
துஞ்சி-சோம்பி
மாந்தி-குடித்து
சீரம்-சீரகம்
நுதல்-வெற்றி
விரோசிக்கும்-பேதியாகும்
பழிச்சல்-துதித்தல்
திண்ணம்-வலி
உதிரம்-வயிறு
திருக்கு-குற்றம்
பளிங்கு-கண்ணாடி
கொடு-கொண்டு
திரிகடுகு-சுக்கு, திப்பிலி, மிளகு
கைப்பு-கசப்பு
செனிக்கும்-உண்டாகும்
சிறமாந்தம்-தலைமாந்தம்
மணி-உத்தாமணி
அப்பு-தண்ணீர்
காரம்-வெண்காரம்
வன்னி-நெருப்பு
நாகம்-பாம்பு
பசுமை-பச்சை
நவநாள்-ஒன்பதுநாள்

திரிபொழுது-மூன்றுவேளை
உதரம்-வயிறு
திரிபலை-கடுக்காய், தான்றிக்காய் நெல்லிக்காய்.

பானுபுடம்-சூரியபுடம்
சாசி-பழம்பாசி
கோஷம்-ஒலி
மாத்திரை-ஒருநொடி
அவரை-கோழியவரை
நயனம்-கண்
சூலிக்கணம்-நாப்பக்கணம்
அத்தி-எலும்பு
பதறிடும்-ஓடிவிடும்
மடல்-ஏடு
பழம்-எலுமிச்சம்பழம்
நக்கிட-உண்ப, தின்ப

நக்குவ-பருகுவ,நால்வகையுணவில் சோறுமுதலிய உண்டல், கறி முதலிய மென்றுதின்னல், தேன் முதலிய நக்கல். சலமுதலிய பருகல்.

பஞ்சதிரவியம்-ஏலம்
பண்பகப்பூ-சீரகம், கிராம்பு,கோஷ்டம்.

நேராக-சரிநிரையாக
கண்டம்-கழுத்து
திசதாது-தசநாடி
குருவாரி-நிறமாம்
ஆட்டுப்பால்-காராட்டுப்பால்
மாவிதை-மாம்பருப்பு

பஞ்சதிரவியம்-மிளகு, கோஷ்டம், அகில், தக்கோலம், குங்குமம்.

சங்க ருத்திராட்சம்-சிவனுக்குரிய ருத்திராக்கம்
நச்சுள்-ஆசையுள்ள

அஞ்செண்ணெய் - எள்ளெண்ணெய், ஆமணக் கெண்ணெய், இலுப்பை யெண்ணெய், புங்கெணெண்ணெய், வேப்பெண்ணெய்.

வாழை-வாழைப்பூ
பொறி-மெய், வாய், கண், மூக்கு செவி.

ஆஆஆ-இரக்கச்சொல்
ரவி-வெயில்
தனம்-கொங்கை
சடம்-உடல்
சனிக்கும்-உண்டாகும்
தோகையாள்-பெண்
அபானன்-குதத்திற் கீழ்நோக்கு கிற தசவாயுவிலொன்று

புக்கினுல்-புகுந்தால்
கனல்-சூடு
சிசு-குழந்தை
உட்டினம்-வெப்பம்
இளவல்-குழந்தை
மூளை-குழந்தை
அறுகு-அறுகம்வேர்
பஞ்சபூதியம் - பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.

அதன்வகை

மண், சலம், தீ, காற்று, வெளி கால், வயறு, மார்பு, கழுத்து, முதலியன.

விருத்தர்-கிழவர்
கள்ளு-தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள்.

ஆரல்-கெண்டை, சிறுகெண்டை மீன் முதலியன.

பானென்றது-சூரியன், நெருப்பு திராவகம்.

கழஞ்சி-நாற்பது குன்றியெடை
மாகாணு-பதினறிலொருபங்கு
பிரமன்-அயன்
கோளங்கட்டி-திரட்சியாய் கட்டி
அணைத்தல்-தீயாற்றல்

பக்கம்-வீட்டுக்குத் தூரமாகிறபட்சத்தில்
விராகனெடை-32, குன்றிமணி
வெருகடி-மூவிரற்பிரமாணம்
குப்பி-அரக்கு, சீரா
குரைநோய்-கால்விரல்கள் கைவிரல்கள் குறைகிற பதினெட்டு குட்டத்தொன்று
தமர்காயாச்சிலந்தி-துணையாருச்சிலந்தி
சாணுமி-சாணியராமுள்ள உமி
மருள்-மயக்கம்
கருமதத்தின் தழை-கறுப்பு ஊமத்தனிலை
அபரி-மேல்
திண்ணம்-பலம்
விடயங்கள்-பெண்போகம்
ஈயன்-எமன்
மாசற்றவாளம்-சுத்திசெய்த நேர்வாளம்
ஆர்த்தம்பாதி-ஆகையிலுவமானம் பொன்
கமுக்கட்டில்-அக்குள்

அரும்பெயர் அநுபந்த அகராதி

முற்றிற்று.

---

உ

சிவமயம்

# தொகையகராதி

## காப்பு விருத்தம்

அருட்டொகை வகைவகுத் துலகனைத்து
மங்கையி லேந்திய தயிர்காத்
திருட்டொகை துடைத்தெழும் பரிதிவயப்போ
வெங்கணும் விளங்கிய டவரொன்பான்
மருட்டொகை விலகெனப் பணிந்தேத்தி
வழக்காடு புலமையோர் முன்னுரைத்த
பொருட்டை வகைப்பட் விரித்துணர்த்திப்
புகலுந் தொகையக ராதியென்றே.

### அ

அகிற்கூட்டு 5—சந்தனம், கர்ப்பூரம், எரிகாசு, தேன், ஏலம்.

அக்கினி 5—இராகம், கோபம், காமம், சடம், தீபனம்.

அங்கம் 4—தேர், கரி, பரி, காலாள் இவை சதுரங்கமெனப்படும்.

அங்கம் 5—திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம், இவை பஞ்சாங்கமெனப்படும்.

அங்கம் 10—மாலை, யாறு, நாடு, ஊர், பாலை, பரி, கரி, முரசு, கொடி, செங்கோல், இவை யரசர்க்குரிய தசாங்கம்.

அங்கயோகம் 8—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, இவற்றுள் இயமம், கொல்லாமை, மெய்ம்மை கூறல், கள்ளாமை, பிறர்பொருளிச்சியாமை, தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல். தெய்வ வழிபடல், ஆதனம் சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் அவையாவன. சுவத்திகம் தொடைக்கு முழங்காற்கு நடுவே இரண்டுள்ளங் காலையுஞ் செலுத்தி யிருமாந் திருத்தல். கோமுகம் சனகப் பக்கத்தி விருகாற் புரட்டையுமாறவைத் தவ்விருகாற்பெருவிரலைக் கைப்பிடித் திருத்தல். பதுமம். இருதொடைமேலு மிரண்டுள்ளங்காலையு மாறித் தோன்றவைத்தல். வீரம். வலத்தொடையி லிடக்கால் பரட்டைச்சேர்த்து யிருமாப்புற்றிருத்தல். கேசரி. பீசத்தின்கீழ்ச்சீவனிடத்து பரட்டை வைத்து முழங்கையை முழந்தாளில்வைத் தங்குலி விரித்துநாசியைப் பார்த்து இருத்தல். பத்திமாசம். பீசத்தின்கீழ் சீவனிடத் திருகாற் பாட்டையும் வைத் தவ்விருபாதத்தையு மிருகையாலிருகப்பிடித் தசையா திருத்தல். முத்தம், இடக்காற் பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்

காற் பரடப் பாட்டிற் கிழுந்தவி ருத்தல், மயூரம் முழங்கை யிர ண்டு முந்திப் புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக் காலீட்டித் தலை நிமிர்ந்திருந்தல். சுகம் சுக முந்திடமு மெவ்வா றிருக்கினெ ய்துமோ அவ்வா றிருந்தல். பிரா ணவாயுவை இரேசக பூரக கும் பகஞ்செய்தல், பிரத்தியாகாரம் உபாதியைநீக்கி யுண்மேணுக்கல், தாரணை கண்டம், இதயம், நெற் றி, கபாலம், நாபி இவற்றிலொ ன்றில் சந்ததம் சிந்தைவைத்தல் தியானம்ஐம்புலனடக்கி யோகஞ் செய்தல். சமாதி இந்திரிய முதவி யதத்துவ சேட்டைகட் கேதுவா யாக்கையினின் றவற்றேடு கூடி னுமவற்றிற் பற்றின்றி யிருக்கு மான்மாவாகிய தன்னைத் தான் காணல்.

அச்சுவினிதேவர் 2.

அரசச்சின்ன 21—முடி, கு டை, கவரி, தோட்டி, முரசு, சக் கரம், யானை, கொடி, மதில், நீர்க் குடம், தோரணம், பூமாலை, சங் கு, கடல், மகரம், ஆமை, இணை க்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம்.

அரசர் 3—சேரன், சோழன், பாண்டியன்.

அரசர்க்குழு 5—மந்திரியர். புரோகிதர், சேனுபதியர், தூதர் சாரணர்.

அரசுக்குத் துணைவர்—மந்தி ரியர், கருமாதிகாரர், சுற்றம், படைகாப்பாளர், நகரமக்கள், ப டைத்தலைவர், இவுளிமறவர், யா னைவீரர்.

அரசர்க் குறுதிச்சுற்றம் 5— நட்பாளர், மந்திரியார், மறைத் தொழிலர், மருத்துவக்கலைஞர், நிமித்திகப்புலவர்.

அரசியல் 6—படை, குடி, கூ ழ், அமைச்சு, நட்பு, அரண்.

அரசியல் 6—அறநிலை யறம், மறநிலையறம், அறநிலைப்பொருள் மறநிலைப்பொருள், அறநிலையின் பம், மறநிலையின்பம், அவையா வன தத்தம் வருணத்திற் பிற ழாது நிலைபெறப் பாதுகாத்தல் றநிலையறம், நிறைமீட்டுப் பகை வென்று செஞ்சோற்றுக் கடன் கழியாதாரைத் தண்டித்துக் கு றைவறச் செய்தன் மறநிலையறம் நெறிவழிநின்று தத்தநிலையினுண் முயன்று பெருபொருளுற நிலைப் பொருள் பகைஞர் பொருளுந்தி றைப்பொருளுஞ் சூதில் வெல் பொருளு மறநிலைப் பொருள். பருவமுங் குலமு மொழுக்கமுங் குணமு மொத்த கன்னிகையைத் தீவேட்டில்லத் திருத்த லறநிலை யின்பம். ஏறு தழுவியும் வில்லிற் றொடுத்த வம்பினுக்கமெய்து மிவ் வாறு மாறுடை நெறியின் மணத் தன் மறநிலையின்பம்.

அரண் 4—மலை, காடு, மதில், கடல்.

அலங்காரம் 35—தன்மை, உ வமை, உருவகம், தீவகம், பின்வ ருநிலை, முன்னவிலக்கு, மேற் றுப்பொருள் வைப்பு, வேற்று மை, விபாவனை, ஒட்டு, அதிசயம் தற்குறிப்பேற்றம், ஏது, நுட் பம், இலேசம், நிரனிறை, ஆர்வ

மொழி, சுவை, தம்மேம்பாட்டுரை, பரியாயம், சமாயுதம், உதாத்தம், அவநுதி, சிலேடை, விசேடம், ஒப்புமைக்கூட்டம், விரோதம், புகழ்நிலை, புகழாப்புகழ்ச்சி, நிதரிசனம், புணர்நிலை, பரிலருத்தனை, வாழ்த்து, சங்கீரணம், பாவிகம்.

அலங்காரம் 32-உவமை, இயைபின்மை, புகழ், பொருளுவமை, எதிர்நிலை, உருவகம், திரிபு பலபடப்புனைவு, நினைப்பு, மயக்கம், ஐயம், ஒழிப்பு, தற்குறிப்பு, உயர்வு, நவிற்சி, ஒப்புமை, கூட்டம், விளக்கு, பின்வருவிளக்கு, தொடர்முழுதுவமை, எடுத்துக்காட்டுவமை. சாட்சி, வேற்றுமை உடனிகழ்ச்சி, இயற்கைநவிற்சி, சுருங்கச்சொல்லல், கருத்துடையடை, கருத்துடையடைகொளி, பலபொருட்சொற்றொடர், புனைவிலிபுகழ்ச்சி, புனைவுளிவிளைவு, பிறிதினவிற்சி, வஞ்சகப்புகழ்ச்சி வஞ்சப்பழிப்பு, எதிர்மறை, முரண்விளைந்தழிவு, பிறிதாராய்ச்சி, காரண வாராய்ச்சி, கூடாமை, தொடர்பின்மை, பிகுதியின்மை, தகுதி, வியப்பு, பெருமை, சிறுமை, ஒன்றற்கொன்றுதவி, சிறப்புநிலை, மற்றதற்காக்கல், காரணமாலை, மாலைவிளக்கு, மேன்மேலுயர்ச்சி, நிரனிறை, முறையிற்படர்ச்சி, மாற்றுநிலை, ஒழித்துக்காட்டு உறழ்ச்சி, கூட்டம், வினைமுதல் விளக்கு எளிதின் முடிவு, விறல்கோள், தொடர்நிலைப் பொருட்செய்யுட்பேறு, தொடர்நிலை செய்யுட்குறி, வேற்றுப்பொருள் வைப்புமலர்ச்சி, கற்றோர்நவிற்சி உயர்த்துணர்வு,பொய்தற்குறிப்பு



வனப்புநிலை, இன்பம், துன்பம், அகமலர்ச்சி, இகழ்ச்சி, வேண்டல், இலேசம், குறிநிலை, அரதனமாலை, பிறிதின் குணம்பெறல் தொல்லுருமை, தன்குணமிகை, மறைவு, பொதுமை, சிறப்புஇறை, நுட்பம், கறவு, வெளிப்படுப்பு, வஞ்சநவிற்சி, குறிப்புநவிற்சி, வெளிப்படை நவிற்சி, யுத்தி உலகவழக்கு நவிற்சி, வல்லோர் நவிற்சி, மடங்குதனவிற்சி, தன்மைநவிற்சி, நிகழ்வினவிற்சி வீறுகோள், மிகுநவிற்சி, பிரிநிலை நவிற்சி, விலக்குவிதி, ஏது.

அவத்தை 5-சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

அளவு 4-எண்ணல், எடுத்தல், முகத்தல், நீட்டல், தெரிந்தலோடைந்தெனவுங் கூறுப.

அளவை 8—காட்சி, அனுமானம், உவமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதீகம், சம்பவம், இவையாவன். காணல் காக்ஷி புகையைக் கண்டு நெருப்புண்டென வனுமானம். மறைப்பசுபோலென வனுமானம், பெரியோர் வாய்ச்சொலாகமம் பகலுண்ணான் பருத்திருப்பானென்புழி யிரவிலொளித்துண்பானெனவுணர்த லருத்தாபத்தி, முன்னுமில்லை பின்னுமில்லை ஒன்றிலொன்றில்லை யொரு காலத்துமில்லையெனல் பாவம் இம்மரத்திற் பேயுளதென்பதை திகம் ஆயிரத்தி நூறுண்டெனல் சம்பவம்.

அறுத்துருப்பு 8—ஐயப்படாமை, விருப்பின்மை, வெறுப்பின்

மை, மயக்கமின்மை, பழியைநீக்கல், அழிந்தோரை நிறுத்தல், அறம்விளக்கல், பேரன்புடைமை. அறம் 2 இல்லறம் துறவறம்.

அறம் 32—ஆதுலர்க்குச் சாலை ஓதுவார்க்குணர்வு, அறுசமயத்தார்க்குண்டி, பசுவுக்கு வாயிறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், பறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவளர்த்தல், இறவைப் பிணஞ்சுடல், அறவைத்தூரியம் சுண்ணம், நோய் மருந்து வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, எறுவிடுத்தல், விலைகொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம்.

அனுபந்தம் 4—விடயம், சம்பந்தம், பிரயோசனம், அதிகாரி.

அன்னுவயவிலக்கணம் 5—விசேடணம், விசேடியம், கருத்தா கருமம், கிரியை.

## ஆ

ஆச்சிரமம் 4—பிரமசாரி, இல்வாழ்வோன், வானப்பிரஸ்தன், சந்நியாசி, இவருள் பிரமசாரி ஆசிரியனிடத்தோதி விரதங்காத்து விவாகமின்றி யிருப்போன். இல்வாழ்வோன் இல்லறத்தின் வழா தில்லாளோடுங்கூடி வாழ்வோன். வானப்பிரத்த னில்லறந்துறந் தில்லாளோடாயினுந் தனித்தாயினும் வனத்திற் றவன் சொல்வோன். சந்நியாசி முற்றுந் துறந்தோன்.

ஆதாரம் 6—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை இவற்றிற்கு முறையே இடம் குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி.

ஆயுதவகை 2—அத்திரம் சத்திரம் இவற்றுட் கைவிடுமாயுதம் அத்திரம். கைவிடாவாயுதஞ் சத்திரம்.

ஆன்மா 2—சீவான்மா, பரமான்மா அவையாவன சரீராவச்சின்னவான்மா சீவான்மா. இதரபதார்த்தத்தான் வச்சின்னவான்மா பரமான்மா.

## இ

இறை 3—மந்தரம், மத்திமம் தாரம்.

இசை 7-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் இவற்றுண் மிடற்றுற் குரல் நாவிற் றுத்தம், அண்ணத்தாற் கைக்கிளை, சிறத்தா லுழை, நெற்றியாலினி, நெஞ்சால் விளரி மூக்காற்றாரம் இங்ஙனந் தனித்தனி பிறக்கும் இவையே ஏழ்சுரமெனவும், வீணையிலேழ் சுரம்பெனவும்படும். இவற்றிற் கோசையுவமை மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை யானை சுவை யுவமை பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி வாசனையுவமை மௌவல் முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல்

பொன்னுரை, புன்னை, அக்கரப் ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ, மாத்திரரை நானகு குரல் நான்கு குத்தம். இரண்டு கைக்கிளை, மூன்றுழை நான்கிளி, மூன்றுவிளரி, இரண்டுதாரம், இவற்று லெழுபாலை பிறக்கும் அவை யாவன: குரலே குரலாயிற் செம்பாலை, துத்தமே குரலாயிற் படுமலைப்பாலை, கைக்கிளையே குரலாயிற் செவ்வழிப்பாலை, உழையே குரலாயிற் கொடிப்பாலை; விளரியே குரலாயின் விளரிப்பாலை, தாரமே குரலாயின் மேற்செம்பாலை இவற்றுட் செம்பாலைக்குக் கொடிப்பாலை வலிது, கொடிப்பாலைக்கு விளரிப்பாலையும் மேற்செம்பாலையும் வலிது, அன்றியுந் தாரத்தானுழையு முழையுட் குரலுங் குரலுளிளியு மிளியுட் டுத்தமுந் துத்தத்துள் விளரியும் கைக்கிளையும் பிறப்பது தகுதி, இவற்றிற்கிறைவர் விசுவாமித்திரன். சமதக்கினி, சந்திரன், சூரியன், காசியன், கௌதமன், ஈசன் இவற்றிற்குயிர் ஈசன்.

இடம் 3—தன்மை, முன்னிலை படர்க்கை.

இதிகாசம் 2—பாரதம், இராமாயணம்.

இரதம் 9—சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்றை, சாந்தம், அற்புதம், பயம்.

இராகத்தகுதி 4—இடம், செய்யுள், குணம், காலம். இவற்றுளிடம்பற்றிய விராக மைந்திணையிராகம், செய்யுட்பற்றிய இராகத்துள் வெண்பா, இராகம் சங்கராபரணம். அகவலிராகம் தோடி கலியிராகம் பந்துவராளி. கலித்துறையிராகம் பைரவி. தாழிசையிராகம் தோடி. விருத்தவிராகம் கலியாணி, காம்போதி, மத்தியமாவதி பலவும். உலாவிராகம் மராட்டிரம். தோடைய விராகம் சௌராட்டிரம். நாட்டை மங்களராகம், மங்களகௌசிகம். தேவாரத்திராகம் பூபாளம். பிள்ளைக்கவிராகம் கேதாரகௌளம். பரணியிராகம் கண்டாரவம். குணம்பற்றிய இராகத்துள் இரக்கராகம், ஆகரி, கண்டாரவம், நீலாம்புரி, பியாகடை, புன்னாகவராளி, துக்கவிராகம். இரக்க ராகங்களன்றி வராளியின் மேலாம் மகிழ்ச்சியிராகம், காம்போதி, சாவேரி, தன்னியாசி, யுத்தவிராகம். நாட்டை காலம்பற்றிய இராகத்துள் வசந்தகாலயிராகம், காம்போதி, அசாவேரி, தன்னியாசி, அன்றியு மாலையிராகம், கலியாணி, குறி, கன்னடம், காம்போதியாமராகம், ஆகரி. விடியராகம் இந்தோளம், இராமகலி, தேசாட்சரி, நாட்டை, பூபாளம், உச்சியிராகம், சாரங்கம், தேசாட்சரி. அன்றியும் ஆகரி, இந்தோளம், இராமலி, சாரங்கம், பூபாளநீக்கி நின்ற மற்றவை யெக்காலத்தும் பொதுமையாம்.

இராகம் 32—பைரவி, தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறி, பூபாரம், வேளாவளி, மலகரி, பௌளி, சீரகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, இல்லிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை,

கூர்ச்சரி, பங்காளம், தன்னியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம். இவற்றுள் பைரவி புருட யிராகம், பிராமணசாதி. இதின் மனைவிகள் தேவகிரியை, மேகவிரிஞ்சி, குறிஞ்சி, அதிதேவதை யீசன். பூபாளயிராகம் புருடராகம் பிராமணசாதி. இதின் மனைவிகள் வேளாவளி, மலகரி, பௌளி. அதிதேவதை திருமால். சீராகம் புருடயிராகம் அரசசாதி. இதின் மனைவிகள் இந்தோளம் பலசாதி, சாவேரி, அதிதேவதை சரசுவதி. படமஞ்சரி புருடயிராகம் அரசசாதி இதின் மனைவிகள் தேசி, இல்லிதை, தோடி. அதிதேவதை இலக்குமி. வசந்தம் புருடயிராகம் வைசியசாதி. இதின் மனைவிகள் இராமக்கிரியை, வராளி, கைசிகம். அதிதேவதை சூரியன். மாளவி புருடயிராகம், வைசியசாதி. இதின் மனைவிகள் நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி. அதிதேவதை நாரதன். பங்காளம் புருடயிராகம். சூத்திரசாதி. இதின மனைவிகள் தன்னியாசி, காம்போதி, கௌளி, அதிதேவதை விநாயகன். நாட்டை புருடயிராகம். சூத்திர சாதி இதின் மனைவிகள் தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம். அதிதேவதை தும்புருவன். இவையன்றிப் பல வகைப்பட்ட வழங்கு மிராகம் பலவுள. அவை கூறிற் பெருகும்.

இராசி 12. மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம். இவற்றுள் முன்னாறு முத்தராயணராசி, பின்னாறு தட்சணாயனராசி. அதன்றியு முதன் மூன்று கடைமூன்று மேறுமிராசி, இடையாறு மிறங்குமிராசி.

இருமை 2. இம்மை, மறுமை.

இலக்கணம்2. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.

இலிங்கம்-5. பிருதிவி லிங்கங் காஞ்சியில், அப்புலிங்கந் திருவானைக்காவில், தேயுலிங்கந் திருவண்ணாமலையில், வாயுலிங்கஞ் சீகாளத்தியில், ஆகாய இலிங்கஞ் சிதம்பரத்தில் இவையே பஞ்சபூத வடிவங்களான பிரதான பஞ்ச இலிங்கம்.

இழிச்சொல்-4. குறளை, பொய், கடுஞ்சொல், பயனிச்சொல்.

## ஈ

ஈச்சுரன் குணம்-8. தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்வினனாதல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்ற லுடைமை, வரம்பி லின்பமுடைமை, இவை சைவாகமத்துட் கூறப்பட்டன. அன்றியும் வரம்பிலின்பம், வரம்பிலாற்றல், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுளின்மை, இடையூறின்மை என்பன அருகதாற் கூறப்பட்டன.

ஈச்சுரன் பிரபுத்துவ சாமார்த்திய குணம்-4. கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அன்னியதாகர்த்தத்துவம்.

ஈச்சுரன்முகம்-5. தற்புருடம், அகோரம் வாமம், சத்தியோசா

தம் இவற்றுள் ஈசானம் அனைத்துமாளுதல் தற்புருடங் காத்தல் அகோர மழித்தல் வாமம் விளக்கல் சத்தியோசாதந் தோற்றுவித்தல்.

ஈச்சுரன் முக்கியகுணம்-6 சருவஞ்ஞத்துவம் சருவேச்சுரத்துவம் சருவ நியந்திருத்துவம் சருவாந்திரியா மித்துவம் சருவசத்தித்துவம் அன்றியும் தனவயத்தனாதல் உடம்பினாதல் எல்லாநலமுளனாதல் எங்கும் வியாபகனாதல் எவற்றிற்குங் காரணனாதல்.

## உ

உட்பகை-6 காமம் குரோதம் உலோபம் மோகம் மதம் மாச்சரியம்.

உண்டி 4 உண்ணல் தின்னல் நக்கல் பருகல். அவையாவன:— சோறுமுதலிய வுண்டல் கறிமுதலிய தின்றல் தேன்முதலிய நக்கல் நீர்முதலிய பருகல்.

உபசாரம் - 16 தவிசளித்தல் கைகழுநீர்தரல் கால்கழுநீர்தரல் முக்குடி நீர்கொடுக்கல் நீராட்டுதல்ஆடைசாத்துதல் முப்புரிநூல் தரல், தேய்வைபூசல், மலர்சாத்தல்,மஞ்சளரிசிதூவல் நறும்புகை காட்டல்; விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைக்காய்நல்கல், மந்திரமலரான ருச்சித்தல்.

உபநிடதம் 32. சிருத்திரம், விரகதாரண்யம், சுவேதாசுவதரம், கைவல்லியம், காலாக்கினிகடம், நாராயணம், அங்கிசம், பரமாங்கிசம், பாற்கரம், பிரமபிந்து, ஆருணி, அமிர்தபிந்து, பஞ்சபஞ்சம் பிரமசாபாலம், தேசோபிந்து, வாச்சியாய நீயம், போதாயநீயம், ஆசுவலாயநீயம், சாங்கியாநீயம், வாசிராயநீயம், சொனகீயம், சிவசங்கற்ம, சிரவணம், பாராகம், கிம்புரோடியம் யாண்டூகம், முண்டிரம், மௌண்டிரம், முதலியன.

உபாயம்-4. சாமம்,தானம்,பேதம், தண்டம்,அவையாவன சமாதானத்தோ டாயினும் பொருள் கொடுத்தாயினும் பிறரைப் பிரித்தாயினும் படைகொண்டாயினுங் காரியங்கொள்ளல். இந்நான்குமரசர்க்குரியனவாம்.

உயிர்வேதனை-11. அனல், சீதம், அக்னி, புனல், வாதம், ஆயுதம், விடம், மருந்து, பசி,தாகம், பிணி, முனிவருமை.

உருத்திரர் - 11. மாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோர்பவன், காபாலி சௌமியன்.

உரை-5-கருத்துரை, பதவுரை பொழிப்புரை, அகலவுரை,அவையாவன செய்யுட் கருத் துரைத்தலே கருத்துரை; சொற்றொறும் பதப்பய னுரைத்தாலே பதவுரை. பொருடொகுத்துரைத்தலே பொழிப்புரை, இலக்கணமுமிலக்கியமு மெடுத்துக் காட்டிப் பொருள் விரித்துரைத்தலே யகலவுரை.

உரையிலக்கணம்-4. பதம் பதப்பொருள் உதாரணம் வினாவிடை.

உலகம்-3 பூமி, அந்தரம் சுவர்க்கம், அன்றியும் பூலோகம் பரலோகம் பாதாளலோகம் மென்பாருமுளர்.

உலகம்-14. மேலுலகேழுங் கீழுலகேழும் மேலுலகாவன - பூலோகம் புவலோகம்,சிவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் கீழுலகாவன அதலம் விதலம் சுதலம் தராதலம் இச்சாதலம், மகாதலம் பாதாளம்.

உலோகம்-5. பொன் வெள்ளி செம்பு இரும்பு ஈயமிவையே பஞ்சலோகம்.

உலோகம்-7. செம்பொன், வெண்பொன், கரும்பொன், செப்பு ஈயம் வெண்கலம் தரா.

உவர்ப்பு-4. ஆசியம், எரதி அரதி, சோகம், பயம், குர்ச்சை, இவை முறையே சிரிப்பு, ஆசை, வெறுப்பு, சோர்வு அச்சம் அருடிருப்பு.

ஊ

ஊறு-8. வெம்மை, தண்மை, மென்மை, வண்மை, திண்மை, நொய்மை, சீர்மை சர்க்கரை, இவையே தொடப்படும் பொருட்கெண்குணம்.

ஊறுபாடு-4. எறிதல் குத்தல் வெட்டல் எய்தல்.

எ

எச்சம்-2. பெயரெச்சம் வினையெச்சம்.

எச்சம்-8. குறள் கூன் ஊமை செவிடு குருடு முடம் உறுப்பும் யக்கம் உறுப்பில்பிண்டம் இவை யெண்வகை யுடல்குறை.

எழுத்துத்தானம்-5.பாலன் குமரன் அரசன் விருத்தன் மரணம் இவற்றிற்கு முறையே யெழுத்துக்களாவன அஆ இஈஐ உஊ ஔ எஏ ஒஓ பாட்டுடைத்தலைவன் பேரெழுத்தைப் பாலதானமாகக் கொண்டெண்ணப்படும் இவற்றுள் முன்னையமூன்று நன்மையாகும் பின்னையவிரண்டுந் தீமை பயக்கும்.

ஐ

ஐச்சுவரியம் 8 இராசாங்கம் மக்கள் சுற்றம் பொன் மணி நெல் வாகனம் அடிமை.

ஐம்புலநுகர்ச்சியி னிறப்பன-5 சுவையாலிறப்பது மீன் நாற்றத்தால்வண்டு பரிசத்தால் யானை ஓசையால் சுணம் ஒளியால் விட்டில்.

ஒ

ஒருமை-1 இறையுணர்வு.

க

கடல்-7 உவர்நீர் நன்னீர் பால் தயிர் நெய் கருப்பஞ்சாறு தேன்

கடுகம்-3சுக்கு திப்பிலி மிளகு இவையே திரிகடுகெனப்படும்.

கடைப்படுதானம் - 8 ஆர்வம் புகழ், அச்சம், கைம்மாறு, காரணம், கண்ணோட்டம், கடப்பாடு.

கணக்குவகை 4 தொகை, பிரிவு, பெருக்கு, கழிவு.

கணம் 8 நிலம், நீர், மதி, இயமானன், சூரியன், தீ, வாயுவு ஆகாயம், நிரைநிரைநிரை, நிலக்கணம், நிரைநேர்நேர், மதிக்கணம் நேர்நேர்நேர் உயிர்க்கணம், நேர் நேர்நிரைநேர் சூரியகணம், நிரை நேர்நிரை, தீக்கனம், நேர்நேர் நிரை, வாயுக்கணம், நிரைநிரை நேர் ஆகாரக்கணம்.

கணம் 18 அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாய வாசிகள், போக பூமியர்.

கணிதம் 8 சங்கலிதம், வியகலிதம், குணனம்-பாகாரம், வர்க்கம், வர்க்கமூலம், கனம், கனமூலம், இவற்றுள் சங்கலிதம், கூட்டல், வியகலிதம், கழித்தல், குணனம், பெருக்கல், காரம், பங்கிடல், வர்க்கம் சமமாகிய வீரெண்ணின் பெருக்கம், அஃதாவது நிலத்தைச் சமமாக நாற்கோணஞ்செய்தல், வர்க்கமூலம், அவ்வர்க்கத் தொகையினின்ற தனமூலமாகிய வரம்பறிதல், தனம் சமமாகிய மூவெண்ணின் பெருக்கம் அஃதாவது குழியைச் சமமாகப் பன்னிரு கோணப்படுத்தல், கனமூலம், அக்கணத்தொகையினின்ற தனமூலமாகிய வொருமூலைபறிதல்.

கண்டம் 9 கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம், இவையே நவகண்டம்.

கதி 4 தேவகதி, மக்கட்கதி, விலங்கின்கதி, நரககதி.

காந்தம் 2 நற்கந்தம், துர்க்கந்தம்

காணம் 4 மனம், புத்தி, அகங்காரம், சித்தம்.

காணம் 11 பவம், பாலம், கவுல்லவகை, தூலை, காரை, வனசை பத்திரவா, சகுனி, சதுர்ப்பாத, நாகவா, கிமிஸ்துக்கின்.

கரும்பூமிக்குரிமை 6 வரைவு தொழில், வித்தை, வாணிகம் உழவு, சிற்பம்.

கருமேந்திரியம் 5 வாக்கு, பாதல் பாணி, பாயுரு, உபத்தம்.

கருவுளமைப்பு 6 பேறு, இழவி, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு.

கலைஞானம் 64 அங்கார இலக்கணம், இலிகிதம், கணிதம், வேதம், புராணம், வியாகரணம் நீதி சாத்திரம், சோதிட சாத்திரம், சிற்ப சாஸ்திரம், வைத்திய சாத்திரம், உருவசாத்திரம், இதிகாசம், காவியம், அலங்காரம், மதுரவாணம், நாடகம், நிருத்தம், சத்தப்பிரமம், வீணை, வேணு, மிருதங்கம், தாளம், அதிர, பரீட்சை கனபரீட்சை, இரதபரீட்சை, கசபரீட்சை, அசுவபரீட்சை, இரத்தினபரீட்சை, பூமிபரீட்சை, சங்கிராம விலக்கணம், மல்யுத்தம், ஆகருடணம், உச்சாடனம், வித்துவேடணம், மதன சாத்திரம், மோகனம், வசீகரணம், இரசவாதம் காந்தருவவாதம், பைபிலவாதம், கவுத்துகவாதம், தாதுவாதம், காருடம், நட்டம், முட்டி, ஆகாயப் பிரவேசம், ஆகாய கமனம், பரகாயப்பிரவேசம், அதிரிசம், இந்திர ஜாலம், மகேந்திர ஜாலம், அக்கினித்தம்பம், சலத்தம்பம், வாயுத்தம்பம், திட்டித்தம்பம், வாக்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், கன்னத்தம்பம், கட்கத்தம்பம், அவத்தைப் பிரயோகம்.

கவி 4 ஆசு: மதுரம், சித்திரம் வித்தாரம், இவற்றுள், பொருளடிபாவணி, முதலிய கொடுத்து மற்றொருவன் பாடுகவென்றவுட

னே பாடுவோனாசுகவி, பொருட்
செல்வம்தொடை, தொடைவிகற்
பஞ்செறிய விருவக முதலிய
வலங்காரத்தோடின்னோசைத்தடு
யமுத முறப்பாடுவோன் மதுரக்
கவி, மாலைமாற்று, சுழிகுளம்,
ஏக, பாதம், சக்கரம், எழுகூற்றி
ருக்கை, காதைகரப்பு, கரந்துவற
தூசங்கொள், வாவன் ஞாற்று,
பாத மயக்குபாவின் புணர்ப்பு,
கூட சதுக்கமகோமுத்திரி, ஒரெ
ழுத்தினம், ஒற்றெழுத்துத் தீர்
ந்த வொருபொருட் பாட்டு சித்
திரப்பாவிபுனுவுத்தரம், சருப்ப
தோபத்திரம் எழுத்துவருத்தன்
மிவை முதலிய முறைக்கவி தெரி
ந்து பாடுவோன் சித்திரக் கவி,
மும்மணிக் கோவை, பன்மணி
மாலை, மறம், கலிவெண்பா தசாங்
கம். மடலூர்தல், கிரீடை, இயல்
இசை, கூத்து, பாசண்டத்துறை
இவை முதலிய விரித்து பாடு
வோன் வித்தாரக்கவி.

கன்னிகை 5 அகலிகை, திரௌ
பதை, சீதை, தாரை, மண்டோ
தரி.

கா

காதலர் 3 புருடன், தோழன்
மகன்.

காலம் 4 இறந்தகாலம், நிகழ்
காலம், எதிர்காலம்.

காலம் 5 பருவத்தைக் காண்க.

கி

கிரகம் 9 ஆதித்தன், சோமன்,
அங்காரகன், புதன், பிரகஸ்பதி,
சுக்கிரன், சனி, இராகு, கேது,
இவையே நவக்கிரகங்க ளெனப்
படும்.

கு

குணம் 3 சத்துவம், இசோம்
சாத்விகம், தமசு அவையான், ஞா
னம், அருள், தவம், பொறை, வா
ய்மை, மேன்மை, மோனம் ஐம்
பொறிய வடக்கலென வெட்டுஞ்
சத்துவம், மனவூக்கம், ஞானம்,
வீரம், தவம், தவம், தருமம், தா
னம், கல்வி, கேள்வி, யெனவெட்
டுமிரச்சு, பேருண்டி, நெடுந்து
யில், சோம்பு, நீதிவழு, ஒழுக்க
வழுவஞ்சம், மறதி பொய், கோ
பம், காமம், கொலை இவை தமசு
குணம் 4 ஆடுகுக்குணம், அறிவு,
நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி மகடூ
இக்குணம், நாணம், மடம், அச்
சம், பயிர்ப்பு.

குரவர் 5 அரசன் உபாத்தி
யாயன், தந்தை, தேசிகன், மூத்
தோன்.

குற்றம் 3 காமம், வெகுளி, மயக்
கம்.

குற்றம் 5 கொட்டாவி, நெட்
டை குறுகுறுப்பு, கூன்கிடை,
நட்டுவிழல்.

குற்றம் 8 ஞானவரணியம், த
ரிசனவரணியம், வேதநீயம், மோ
கநீயம், ஆயுநாமம், கோத்திரம்
அந்தராயம்.

கூ

கூத்துவகை 2 தேசிகம், மார்க்கம்

கே

கேள்வி 4 அறம், பொருள்,
இன்பம், வீடு இந்நான்குங் கேட்
டல்.

கேள்வி 5 அறம், பொருள்,
இன்பம், வீடு இந்நாற் கேள்வி
யோடிவற்றின் வழிநிற்றல்.

### கை

கைத்தொழில் 5. எண்ணல், எழுதல், இலிகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல்.

### கோ

கோசம் 9. அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம். அவையாவன: உடல் அன்னமயம், கோசம் கருமேந்திரியமு மனமு மனோமயம். கோசம், ஞானேந்திரியமும் புத்தியும் விஞ்ஞானமயகோசம், அவித்தை யானந்தமயகோசம்.

### கௌ

கௌடம் 5. சுத்த கௌடம், கானகுப்சம், சாரசுவதம், உற்கலம், மைதிலை.

கௌவியம் 5. கோசலம், கோமயம், பால், தயிர், நெய்.

### ச

சக்ரவர்த்திகள் 6. அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன், புரூரவன், கார்த்தவீரியன். இவர்கள் மற்றவர்களை பணியாது தாணியாண்டோர்.

சதுரங்கம்-அங்கங்காண்க.

சத்தம் 5. தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி இவையே சத்தத்துக்கைந்து காரணம்.

சத்தி 3. இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி. இவற்றுளிச்சாசத்தி, யுயிர்க்கருணைசப், ஞானசத்தி, கருமங்களை யறிந்தூட்டல், கிரியாசத்தி, உலகங்களாக்கல்.

சத்தி 5. சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி. அவை யாவன:— உயிர்க்கொளியாக நிற்பது சிற்சத்தி, பிராணன் முதலிய வாயுவாக நிற்பது பராசத்தி, பஞ்ச பூதமாக நிற்பதிச்சாசத்தி, ஐம்பொறி புணர்ச்சியாக நிற்பது ஞானசத்தி மற்றைய வினைத்துணையாக நிற்பது கிரியாசத்தி.

சமயம் 6. வைஷ்ணவம், சைவம், சாக்தம், சௌரம், காணபதம், கௌமாரம் இவை வைதிக மதமென்னப்படும்.

சமயம் 6. கபிலமதம், கணாதமதம், பதஞ்சலிமதம், அக்ஷபாதமதம், வியாசமதம், ஜைமினியமதம், இவையே வேதாந்த மதமென்னப்படும்.

சமயம் 6. பௌத்தம், ஜைனம், பைரவம், காளாமுகம், உலோகாயிதம், சூனியவாதம் இவை புறச்சமயமென்பர் வைதிகர்.

சமயம் 6. வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் அன்றியும் புறச்சமயமாவன-6. உலகாயிதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம், பட்டசாரியம் இது சைவர் கொள்கை.

சயனம் 5, இலவம்பஞ்சி, செம்பஞ்சி, வெண்பஞ்சி, மயிர், அன்னத்தூவி இவற்றாற் செய்யப்பட்டவை 5-வகைமெத்தை இவையே பஞ்ச சயனம்.

### சா

சாதி 4. ஆந்திரம், கன்னடம், திராவிடம், [illegible]

சாத்திர[illegible]
சவியம், [illegible]

கபிலர், பதஞ்சலி, வியாச ரிம் மூவராற் கூறப்பட்டன் இவற்றை யத்தியான்மீக நூலென்ப.

சாத்திரம் 6 வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவ மீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை.

சாந்துவகை 4. பீதம், கலவை, வாட்டிகை, புலி.

சி

சித்தர் 6. சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்.

சித்தி 8. அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம். அவையாவன: ஆன்மாமபோலாதலணிமா மகத்துவமாதலே மகிமா, தன்'னுடற் கண்டிப்பின்றுய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவுள்ள வனுதல் சுகரிமா, வேண்டுவன வடைதலே பிராத்தி, நிறையுளனுதலே பிரகாமியம், ஆட்சியுளனுதலே யீசத்துவம், எல்லாந் தன் வசம் ஆக்க வல்லவனுலே வசித்துவம்.

சிஞ்சீவியர் 7. அசுவத்தாமன், பாமலி, வியாசன், அனுமான், விபீஷணன், கிருபாச்சாரியன், பரசுராமன்.

சிவதத்துவம் 5. சுத்தவித்தை ஈச்சுரம், சாதாக்கியம், சத்திசிவம். அவையாவன: ஞானமேறிக் கிரியை குறைந்தது சுத்தவித்தை ஞானங்குன்றிக் கிரியை யுயர்ந்த தீச்சுரம். ஞானங்கிரியை யொத்தது சாதாக்கியம், கிரியைநாடல் சத்தி முரனமொன்றல் சிவம்.

சிவபூசை யியல்பு 4. சரியை, கிரியை, யோகம், ஞானம்.

சிவாகமம் 28. காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாயம், புவம், அனலம், வீரம், இரௌவம், மகுடம், விமசந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலலிதம், சித்தம், சந்தான சருவோத்தமம், பாரமேச்சரம், கிரணம், பேதம், வாதுளம்.

சிற்பத்தொழிற் குறிப்பு 10. கல், லோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், கண்டசருக்கரை மெழுகு.

சிற்பநூல் 32. விச்சுவகருமம், விச்சுவேசம், விச்சுவசாரம், விருத்தம், தாவட்டம், நளம், மயம், அனுமான், பானு, கற்பாரியம், சிருட்டம், மானசாரம், வத்து, வித்தியாபதி, பாராசாரியம், அரிடிகம், சயித்தகம், வாத்துபோதம், வித்தாரம், இந்திரம், வச்சிரம், சவுமம், விச்சுவகாசிபம், மகதந்திரம், விசாலம், சித்திரம், காபிலகாலயூபம், நாமசங்கிதை, சாத்திகம், விச்சுவபோதம், ஆதியாரம், செவுச்சுருதம், மாளபோதம்.

சீ

சீவபேதகம் 3. தூலம், சூக்குமம் காரணம்.

சீவாவத்தை 3. சாக்கிரம், சுவப்பனம், சுழுத்தி.

சு

சுடர் 2. சூரியன், சந்திரன்.

சுடர் 3. சந்திரன், சூரியன், அக்கினி.

சுபம்-8 மங்கலத்திற்காண்க.

சுப்பிரமணியர் பிரதானத்தலம்-6 திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறுடல் பழமுதிர்சோலைமலை.

சுரம்-7 ச ரி க ம ப த நி அன்றியு மேழிசைகாண்க.

சுவை-6 கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு.

சூதகம்-5 சனனசூசம், மரணசூசம், சண்டாளஸ்பரிசு தோய்தல், சுராபானம் பண்ணல், பொய்கூறல்.

சூரியன்-12 தாத்துரு, சக்கரன், அரியமன், மூத்திரன், வருணன். அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்திரு துவட்டன் இப்பெயர் சித்திரைமாத மேடவிராசி முதலொவ்வொருமாதத் தொவ்வொ ரிராசியிற் புகுந்து சூரியனுக்கு முறையே செல்லுமென்பர் இவரே துவாதசாதித்தர்.

சூரியர் சந்திரமுதலிய வீதி-3 மேடவீதி இடபவீதி மிதுனவீதி அவைதாம் இடபம் சிங்கம் மிதுனம் கடகம் நான்கு மேடவீதி மீனம் மேடம் கன்னி துலாம் நான்கு மிடபவீதி தனுசு மகரம் கும்பம் விருச்சிகம் நான்கு மிதுனவீதி.

சே

சேனைத் தொகை-10 பதாதி சேனைமுகம் குமுதம் கணகம் வாகினி பிரளயம் சமுத்திரம் சங்கம் அநிகம் அக்குரோகினி அவையாவன யானை-1 தேர்-1 குதிரை 3 காலாள்-5 இவை கூடியது பதாதி பதாதி மும்மடி கொண்டது சேனைமுகம் சேனைமுகம் மும்மடி குமுதம் குமுத மும்மடி கணகம் கணகமும்மடி வாகினி வாகினி மும்மடி பிரதியம் பிரளய மும்மடி சமுத்திரம் சமுத்திர மும்மடி சங்கம் சங்க மும்மடி யநிகம் யநிகமும்மடி அக்குரோணி.

சை

சைவம்-16 ஊர்த்தசைவம் அநாதிசைவம் ஆதிசைவம் மகாசைவம் பேதசைவம் அபேதசைவம் அந்தரசைவம் குணசைவம் நிர்க்குணசைவம் அத்துவாசைவம் யோகசைவம் ஞானசைவம் அணுச்சைவம் கிரியாசைவம் நாலுபவச்சைவம் சுத்தசைவம்.

சொ

சொல்-4 பெயர் வினை இடை உரி.

த

தத்துவம்-9 ஆன்ம தத்துவம் 24-நாடி 10-அவத்தை-5 மலம்-3 குணம்-3 மண்டலம்-3 பிணி-3 விகாரம்-8 ஆதாரம்-6 தாது-7 வாயு-10 கோசம்-5 வாயில்-8 இவற்றுளான்மதத்துவமாவன பூதம்-5 புலன்-5 ஞானேந்திரியம்—5 கருமேந்திரியம்-5 கரணம்-4 இவை தத்தம் வரியிற் காண்க.

தந்தையர்-5 பிறப்பித்தோன் கற்பித்தோன் மணம் முடிப்பித்தோன் அன்னந்தந்தோன் ஆபத்துக்குதவினோன்.

தமிழ்-3 இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழ்.

தமிழ்நாடு-13 செந்தமிழ் நாடொன்று இதற்கெல்லை கருவூரின் கிழக்கு மருவூரின் மேறகு வைகையாற்றின் தெற்கு மருமதையாற்றின் வடக்கு இதனைச் சூழ்ந்த கொடுந்தமிழ் நாடு-12 தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண் பூமி பன்றி அருவா வடதலை சீதம் மலாடு புன்னாடு.

தயாவிருத்தி-14 களாபடனம் வியாதாகாரம் நிர்க்கத்தண்டனம் சந்தேகவாரணம் அன்னியகுணசகனம் பாதிருதானயோகம் பார்த்ததேவப்பிரார்த்திதம் அவையாவன மூறைமே கல்விபயிற்றல் துயர்தீர்த்தல் தண்டத்தினீக்கல் ஐயந்தேற்றல் பிறர்குணத் தழுக்காறின்றிப் பொறுத்தல் பிறரால் செய்யப்படுந்தீமை மறந்து நன்றி நினைத்தல் பிறர்க்குவேண்டி தெய்வம் வழிபடல் இவை யுயிர்க்கேழுபகாரம் அன்றியும் சத்தாங்கோபகாரம் அன்னம் பாலனம் காமமயத்திரிதய மோசனம் சவச்சேமம் ஆவையே உணவு பானமுடை இடம் அடிமை காத்தல் சிறைநோய் மூன்றுந்தீர்த்தல் பிணமடக்கில் இவை, யுடற்கேழுபகாரம்.

தயாவிருத்தி-8 பிறர்க்கு பொருள்வைவை யுவக்கல் பிறர்செல்வம் பொறுத்தல் பிறர்கருமத்திற் குடன்படல் தீமைக்கஞ்சல் பிறர் கருமமுடிக்க விரைதல் பிறரை யந்தீர்த்தல் நன்மை கடைப்பிடித்தல் பிறர் துயர்க்கிரங்கல்.

தரு-5 அரிசந்தனம் கற்பகம் கந்தானம் பாரிசாதம் மந்தாரம்

தருமநூல்-18 மநு அத்திரி ஔரிதம் விட்டுணு யாஞ்ஞவற்கியம் உசனம் அங்கிரசம் இயமம் ஆபத்தம்பம் சமவர்த்தம் காத்தியாயனம் பிரகற்பதி பாசசரம் வியாசம் சங்கலிதம் தக்கம் கௌவமம் சாதான்மம் வசிட்டம் இவற்றுட் சங்கலிதம் பொது இவற்றுள் கிரேதாயுகத்தில் மநுஸ்மிருதியும் கிரேதாயுகத்தில் கௌதமஸ்மிருதியும் துவாபரயுகத்திற் சங்கலிதஸ்மிருதியும் கலியுகத்திற் பாரசாஸ்மிருதியு முக்கியமாயிருக்கும்.

## தா

தாது-7 இரதம் இரத்தம் சுக்கிலம் மூளை தசை எலும்பு தோல்

தாய்-5 பாராட்டுந்தாய் ஊட்டுந்தாய் முலைத்தாய் கைத்தாய் செவிலித்தாய் அன்றியு மரசன் றேவி குருவின்றேவி அண்ணன் றேவி தன்றேவியை யீன்றாள் தன்னையீன்றாள்.

தாரணை-9 நாமதாரணை வச்சிரதாரணை மாயாதாரணை சித்திரதாரணை செய்யுட்டாரணை நிறைவு குறைவாகிய வெண்பொருட்டாரணை சத்தாரணை வத்துத்தாரணை சதுரங்கதாரணை.

தாளம்-5 கச்சற்புடம் காசற்புடம் சட்பிதா புத்திரிகம்சம்பத்துவேட்டம் உற்கடிதம் இவற்றுட் கற்சற்புடமாவது குரு-2 இலகு 1-புலுதம்-1 ஜி ஆகமாத்திரை-8 இஃதீசன் சத்தியோசாத முகத்திற்பிறந்தது பிரமசாதி காசற்புடமாவது குருக இலகு-1 குரு 1-ஜி ஆகமாத்திரை 6-இஃதீசன் வாமமுகத்திற் பிறந்தது அரசசாதி சட்பிதா புத்திரிகமாவது புலுதம்-1 இலகு-1 குரு-2 இல

கு-1 புலுதம்-1 ஜி ஜி ஆகமாத்திரை-12 இஃதீசன் கோரமுகத்திற்பிறந்து வைசியசாதி சம்பத்துவேட்டமாவது புலுதம்-9 குரு 3 புலுதம்-1 குரு-3 புலுதம்-1 ஜி ஜி ஆகமாத்திரை-12 இஃதீசன் தற்புருட முகத்திற் பிறந்தது சூத்திரசாதி உற்கடித மாவது குரு 3 ஆகமாத்திரை-6 இஃதீசானமுகத்திற் பிறந்தது சங்கிரமசாதி.

தாளம்-7 துருவம் மட்டியம் உருபகம் சம்பை திரிபுடை அ-டதாளம் ஏகதாளம் இவற்றுள் துருவத்திற்கு இலகு-1 குரு-1 துரிதம்-1 இதற்குச்சுரம் சரிகம கரிகரி கரி சரிகம மட்டியத்திற்கு இலகு-1 துரிதம்-1 இலகு-1 இதற்குச்சுரம் சரி கரி சரி கம சம்பைக்கு இலகு-1 அநு துரிதம்-1 துரிதம்-1 இதற்குச்சுரம்-4 ரிகர சரி சரி கமா திரிபுடைக்கு துரிதம்-3 அநுதுரிதம்-1 இதற்குச்சுரம் சரிக சரிகம அடதாளத்திற்கு இலகு-1 துரிதம்-2 இலகு-1 துரிதம்-2 இலகு-1 இதற்குச்சுரம் சரிகா சாரிகா மாமா ஏகதாளத்திற்கு இலகு-1 இதற்குச்சுரம் சரிகம சம்பைக்குப் பிரமசாதி தவிர நான்குசாதியுமுள திரிபுடைக்கு மூன்று விராமமுமோரநு துரிதமுமான லொரேசாதி இலகு விருந்தாலைந்து சாதியுமுள. வற்றையைந்து தாளங்கட்கு மைந்துசாதியுமுள அவற்றை யவ்வச்சாதி யேகதாளலம் அக்கரங்களா லறியுமாறு பிரமசாதியி லகுவிற்கு நான்கக்கரகாலம் அரசசாதி யிலகுவிற்குமூன்றக்கரக்காலம் ஆரக்கரக் காலமுமென்ப வைசியசாதி யிலகுவிற்கேழக்கரகாலம் சூத்திரசாதி யிலகுவிற் கைந்தக்கரகாலம் சங்கிரமசாதி யிலகுவிற் கொன்பதக்கரகாலம் எச்சாதியிலு மநுதுரிதமோ ரக்கரகாலமுந் துரிதமிரண்டக்கர காலமுமாம்.

தாளம்-9 அரிதாளம் அருமதாளம் சமதாளம் சயதாளம்சித்திரதாளம் துருவதாளம் நிவிர்த்திதாளம் படிமதாளம் விடதாளம் இவையே நவசந்தி தாளம்.

தாளப் பிரமாணம்-10 காலம் மார்க்கம் கிரியை அங்கம் கிரகம் சாதிகளை இளையை யதிபிரத்தாரம் இவையேதாள தசப்பிராணமென்ப இவற்றுட் காலம்பிரமாணம்-1 அவையாவன கணம் இலவம் காட்டை நிமிடம் துடி துரிதம் இலகு குரு புலுதம் காகபதமிவற்றுட் கணம் தாமரையிதழ் நூறடுக்கி யதிலோரிதழி லூசிசெலுத்துங்கால் கணமெட்டுக்கொண்ட திலவம் இலவமெட்டுக்கொண்டது காட்டை காட்டையெட்டுக்கொண்டது நிமிடம் நிமிடமெட்டுக்கொண்டது துடி துடியிரண்டு கொண்டது துரிதம் துரித மிரண்டுகொண்டது இலகு இலகிரண்டு கொண்டது குரு இலகு மூன்றுகொண்டது புதன் குரு விரண்டுகொண்டது காகபுலம். மார்க்கம்-5 தக்கணம் வார்த்திகம் சித்திரதரம் அர்த்தசித்திரம் அதிசித்திரம் இவற்றுள்எட்டுமாத்திரை யோர்களையாக கொண்டது. தக்கணம் நான்கு மாத்திரை யோர்களையாகக் கொண்டது. வார்த்திகம் இரண்டு மாத்திரை யோர்களையாகக் கொண்டது

சித்திரம் ஒருமாத்திரை யோர்களையாகக்கொண்டது. சித்திர தாமரைமாத்திரை யோர்களையாகக் கொண்டது. சித்திரம் நொடியளவுமாத்திரை கிரியை 2-மார்க்கம் தேசிகம் இவற்றுள் மார்க்கம்-8 இவற்றுணி சத்தம் 4 சசத்தம்-4 நிசத்தமாவது ஆவாபம் நிட்கிராமம் விட்சேபம் பிரவேசம். சசத்தமாவது துருவம் சம்மியம் தாளரி சந்நிபாதம் தேசிகம்- 8 துருவகம் சாப்பிணி கிருடியை பதுமினி விகர்ச்சிதை விச்சிபதம் பதாகை பதிதம் இவற்றி னிலக்கியங்களை நூலாலுணர்க. அங்கம்-6 அவையாவன இவை முறையே பிறை மதி கணை வில் பாபு புள்ளடி முறையே யிவற்றின் பெயர் அநுதுரிதம் துரிதம் இலகு குரு புலுதம் காகபதம் இவற்றினுற்பத்திகளும் பரியாய நாமங்களும் வண்ணங்களும் காதைப் பிரமாணங்களும் நூலாலுணர்க கிரகம் 4 அதீபும் அநாகதம் விடமம் இவற்றுட் குரான் முன்னுந் தாளம் பின்னும் வருவததீதம். தாளமுன்னுங் குரல் பின்னும் வருவத நாகதம். குரலுந்தாளமு முன்னும் பின்னும் கலந்துவருவது விடமம். சாதி-5 சதுரசிரம் திரிசிரம் மிசிரம்கண்டம் சங்கீரணம் இவைமுறையே பிரமவாச ணைசிய சூத்திரசங்கிரமம் இவற்றை முற்கூறியவிறகு அக்கரங்களாலறிவது. களை-3 ஏககளை துவிகளை சதுர்க்களை இவற்று ளக்கரகாலமாயுங் கிரியையோடும் வருவது ஏககளை இதனை யிரட்டித்துக்கிரியையோடு வருவது விகளை இதனை யிரட்டித்துக் கிரிகையோடுவருவது சதுர்க்களை, இலயம்-3 விளம்பம் மத்திமம் துடிதம் இவற்றுளக்கர காலமாய்க் கிரியையோடுவருவது விளம்பம் இதனை யிரட்டித்து கிரியையோடு வருவது மத்திமம். இதனை இரட்டித்துக் கிரிகையோடு வருவது துரிதம் யதி-6 சமம் விடமம் மிருதங்கம் வேதமத்திய கோபுச்சம் சுரோதோவகம் இவற்றுள் நெட்டங்கமாயினுங் குற்றங்கமாயினு மொரேவிதமாய் வருவது சமயதி என்னும் எல்லாவங்கமுங் கிரமமின்றிக் கலந்து வருவது விடமதி முதலியதுங்கடையிலும் குற்றங்குமிடையி னெட்டங்கமும் வருவது மிருதங்கயதி முதலினுங் கடையிலும் நெட்டங்கமு மிடையிற் குற்றங்கமும் வருவது வேதமத்தியதி முதலிலே நெட்டங்கமு மீற்றிலே குற்றங்கமுமாய் சேர்ந்து வருவது கோபுச்சயதி முதலிலே குற்றங்கமு மீற்றிலே நெட்டங்கமுமா வருவது சுரோதோவகம் மற்றைய வில் விலக்கணத்தாற் கண்டுணர்க.

தானம் 3 தலைப்படுதானம் இடைப்படுதானம் கடைப்படுதானம் அவையாவன அறத்தா னீட்டியபொருளை முக்குற்றமற்ற நற்றவத்தோரைக் கொள்கெனப் பணிந்து குறையிரந்து தாமுள்ள முவந்தால் தலைப்படுதானம் ஆதுலர் குருடர் மாதாமுதற் பிறர் சிறுமையைப் பற்றி மனமிரங்கியீவ திடைப்படுதானம் புகழார்வங்கை மாறச் சங்க ணேட்டங் கடைப்பா டிவற்றைப்பற்றி யீவது கடைப்படுத்தான்.

தானை-6 தேர் கரி பரி வாள் வில் வேல்.

## தி

திக்கு-8. கிழக்கு தென்கிழக்கு தெற்கு தென்மேற்கு மேற்கு வடமேற்கு வடக்கு வடகிழக்கு இவையே யட்டதிக்காம்.

திக்கு-10. மேற்சொன்னவை யன்றி மேலுங்கீழுங் கூட்டி தசதிசையென்ப. கிழக்குக் கருடதிசை தென்கிழக்கு பூனைதிசை தெற்கு சிங்கத்திசை தென்மேற்கு கழுகுதிசை மேற்கு நாகத்திசை வடமேற்கு எலித்திசை வடக்கு யானைத்திசை வடகிழக்கு முயற்றிசை மேல் விசும்புத்திசை கீழ் பாதாளதிசை.

திக்குப்பாலகர்-8. கிழக்காதி முறையே இந்திரன் அக்கினி யமன் நிருதி வருணன் வாயு குபேரன் ஈசானன் இவர்க்கு முறையே குறிகளாவன கொடி புகை சீயங்கம் நாய் இடபம் கழுதை தனை காகம்,

திக்கு யானைகள்-8. கிழக்காதி முறையே ஐராவதம் புண்டரீகம் வாமனம் குமுதம் அஞ்சனம் புட்பதந்தம் சார்வபூமம் சுப்பிரதீபம் அவையே யட்டதிக்கயம் இவற்றிற்கு முறையே பிடியானைகளாவன அப்பிரமை கபிலை பிங்களை அநுபமை தாமிரம்பருணி சுதந்தி அஞ்சனை.

திணை-2. உயர்திணை அஃறிணை இவற்றுள் உயர்திணை மக்களுந் தேவரும் நரகருமாம். அஃறிணை மற்ற உயிருள்ளனவு மில்லனவு மாகிய யாவுமாம்.

திணை-5. குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல்.

திணையிடங்கள்-5. மலையும் மலைசார்ந்த விடமும் குறிஞ்சி, பாலை வனமும்வனத்தைச் சார்ந்த விடமும் பாலை காடும் காட்டைச் சார்ந்த விடமும் முல்லை வயலும் வயற்சார்ந்த விடமும் மருதம் கடலும் கடற்சார்ந்த விடமும் நெய்தல்.

திதி-15. பிரதமை துதியை திரிதியை சதுர்த்தி பஞ்சமி சஷ்டி சப்தமி அட்டமி நவமி தசமி ஏகாதசி துவாதசி திரியோதசி சதுர்த்தசி இவற்றில் சுக்கில பக்கத்தில் சுத்தமென்றுங் கிருட்டிணபக்கத்திற் பகுளவமென்றுங் கூட்டுக பதினைந்தாந் திதியாவது சுக்கில பக்கத்திற்கு பௌர்ணமி கிருட்டின பக்கத்திற்கு அமாவாசியை.

திரவிடம்-5. தாவிடம் ஆந்திரம் கன்னடம் மகாராட்டிரம் கூர்ச்சரம்.

திரவியம்-5. மலைபடுதிரவியம் காடுபடுதிரவியம் நாடுபடு திரவியம் நகர்படுதிரவியம் கடல்படுதிரவியம் இவற்றுண் மலைபடு திரவியம் மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம் காடுபடுதிரவியம் இறால் தேன் அரக்கு மயிற்பீலி நாவி நாடுபடுதிரவியம் செந்நெல் சிறுபயறு கரும்பு வாழை செவ்விளநீர் நகர்படு திரவியம் அரசன் பித்தன் மந்தி யானை கண்ணாடி. கடல்படு திரவியம் உப்பு முத்து பவளம் சங்கு ஒக்கோலை.

திருமாலவதாரம்-10. மச்சம் கூர்மன் வராகம் நரசிங்கம் வாமனன் பரசுராமன் இராமன் பலபத்திரன் கண்ணன் கற்கி இவற்றிற்கு காரணம் (வேதத்தைத் திருடிக் கடலிலொளித்த சோமுகாசுரனென்னும் மிராக்கதனைக்

கொல்ல மச்சவதாரம், கடலைக் கடையும்போது மந்தர மலையை தாங்கக் கூர்வமதாரம், பூமியைப் பாயாக இரணியாக்கதன் சுருட்டின தை விரிக்கவு மவனைக் கொல்லவும் வராகவதாரம், இப்பழிவாங்க சுருவதேரு வணக்கம் விலக்கின வன் தம்பி இரணியகசிபனைக் கொல்ல நாசிங்கவதாரம், இந் நான்கவதாரத்துக்குந் தந்தைதாயாரில்லை. மாவலியை யடக்கக் காசிபனுந் திதியுந் தந்தைதாயாக வாமனவதாரம், அரசராற் றுழ்த்தப்பட்ட பார்ப்பார் நிமித்த மவ்வரசரைக் கொல்ல சமதக்கினியு மிரேணுகையுந் தந்தைதாயாகப் பரசுராமவதாரம், இராவணன் முதலிய விராக்கதரைக் கொல்ல தசரதனுங் கௌசலையுந் தந்தைதாயாக விராமவதாரம், பிரலம்பன முதற் பல இராக்கதரைக் கொல்ல வசுதேவனுந் தேவகியு மூரோகணியுந் தந்தைதாயாகப் பலபத்திர ராமாவதாரம், பாரதம் நடத்த வசுதேவனுந் தேவகியுந் தந்தையாக கண்ணனவதாரம், அறத்தை நிலைபெறச்செய்ய கற்கி யவதாரம்.

திருமாலவதாரம்-15. சனகன் சனந்தனன், சனகன், சனற்குமரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்ரீவன், தத்தாத்திரேயன், மோகினி, யாகபதி, வியாதன், தன்வந்தரி, பௌத்தன்.

திருமாலாயுதம்-5. சக்கரம் தனுசு வாள் தண்டு சங்கம்.

## தீ

தீ-3. உரியிலுள்ள தீ, உதரத்துள்ள தீ, சினத்திலெழுந்தீ, அறியும் வேதாக்கினி-3. காருகபத்தியத்தியம் தக்கணக்கினியம் ஆகவனீயம்.

தீக்குணம்-10. பொய்சொல்லல் கோட் சொல்லல், கோபித்துச் சொல்லல், பயனில சொல்லல், இந்நான்கும் வாக்கின் றீக்குணம். களவாடப்போதல், வறிதே தொழில் செயல். கொலை செயல், இம்மூன்று காயத் தீக்குணம். கொலை நினைக்கை, காமப்பற்று, ஆசை இம்மூன்று மனத் தீக்குணம்.

தீவு-7. நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்காம், தெங்கு, கமுகு இவ்வெழுவகைப் பொருளு மவ்வத்தீவின் மிக்கவாகையில் இவற்றால் பெயர்பெற்றன.

## து

துரககதி-5. மல்லகதி, மயூரகதி, வியாக்கிர கதி, வானர கதி, விடபகதி.

துவர்-10. நாவல் கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல் அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு, மாந்தளிர்.

## தே

தேயம்-56. அங்கம் அருணம் அவந்தி ஆந்திரம் இலாடம் யவனம் ஒட்டியமகருசம் கலிங்கம் கன்னடம் கன்றுடம் காசம் காஸ்மீரம் காந்தாரம் காமபோசம் கிராடம் குருகு குடகம் குந்தளம் குரு குலிந்தம் கூர்ச்சரம் கேகயம் கேரளம் கொங்கணம் கொல்லம் கோசலம் சகம் சவ்வீரம் சாலவம் சிங்களம் சிந்து சீனம் சூரசேனம் சோழம் சோனகம் திராவிடம் துளுவம் தெங்கணம் நிடதம் நேபாளம் பாஞ்சா

லம் பப்பரம் பல்லவம் பாண்டி புலிந்தம் போடம் மகதம் மச்சம் மராடம் மலேயாளம் மாளவம் காந்தாம் வங்கம் வங்காளம் விதர்ப்பம்.

தேவர்-5 பிரமா விட்டுணு உருத்திரன் மயேச்சுரன் சதாசிவன் இவர் பஞ்சதேவதையும் பஞ்சகருத்தர்களுமென்ப.

தேவர்கை-33. ஆதித்தர்-12. அச்சுவினிகள்-2 உருத்திரர்-11 வசுக்கள்-8.

தொ

தொழில் - 3. ஆக்கல் காத்தல் அழித்தல்.

தொழில் - 6 உழவு தொழில் வரைவு வாணிபம் விச்சை சிற்பம்.

தொழில்-6. அந்தணாறுதொழில் ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் ஏற்றல் அரசராறுதொழில் ஓதல்வேட்டலீதல் உலகோம்பல் படை பயிற்றல் பொருதல் வைசிய ராறுதொழில் ஓதல் வேட்டல் பொருளீட்டல் ஈதல் பசுககாத்தல் ஏருழல் சூத்திரராறுதொழில் - முதன் மூவர்க் கேவல் செயல், பொருளீட்டல் உழுதல் பசுக்காத்தல் குயிலுவத் தொழில்களாவன - தோற்கருவிகளைக் கொட்டலுந் துளைக்கருவிகளை யூதலுமாம் காருக விளைகளாவன பட்டுநூலையும் பருத்திநூலையும் கொண் டாடையாக்கலுஞ் சுமத்தலு முழுத்தலுமாம்.

தோ

தோற்றம்-2 சரம் அசரம் இவற்றுட்சரம் நடையுள்ளன அசரம் நடையில்லன.



தோற்றம்-4 பை முட்டை, நிலம் வியர்வை.

ந

நட்சத்திரம்-27 அச்சுவனி பரணி கார்த்திகை உரோகணி மிருகசீரிடம் திருவாதிரை புனர்பூசம் பூசம் அத்தம் சித்திரை சுவாதி விசாவகம் அனுட்டகேட்டை மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம் அவிட்டம், சதயம் பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இவற்றுள் ஒவ்வொன்று முறையே மேடமுதற் பன்னிரண்டு ராசிகளிற் பதின்மூன்று பாகமு மிருபது கலையுங் கொண்டவிடம்.

நதி-7 கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, இவையே சத்த தீர்த்தமெனப்படும்.

நதி-11 மேற்சொல்லிய வேழின்மேல் சிந்து, தாமிரபரணி, துங்கபத்திரி கிருஷ்ணை யென்றுக் கூட்டு.

நரகம்-7 அள்ளல், இரௌரவம், கும்பிபாகம், கூடசாலம் செந்துத்தானம், பூதி, மாபூதி.

நரக வட்டம்-7, தமப்பிரபை இமப்பிரபை, தூமப்பிரபை, வாலுசப் பிரபை, அழற் பிரபை, அவையாவன இருள், குளிர், புகை, மணல், துயிலாமை, இரத்தம் தீ.

நரம்பு-7 இசைகாண்க

நற்குணம்-10 மெய்யுரை, நல்வார்த்தை, இனியவை கூறல், பயன்படுசொல் இந்நான்கும் வாக்கினற்குணம். கோயில் வலம்வரல் தவம் புரிதல் தானஞ் செயல்

இம் மூன்றுங் காயநற் குணம்' அருளிணைவு, ஆசையறுத்தல்' தவப்பற்று இம்மூன்றும் மனநற் குணம்.

நா

நாகம்-8 வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் இவற்றைக் கடவுட்பாம் பென்ப. இவை முறையே கிழக்குமுத லெண்டிக்கிற் பூமியைத் தாங்குவ தன்றியே நடுவே சேடனென்னு நாகம் பூமியைத் தாங்காநிற்கும் இந்நவ நாகமுங்காசியப்பிரமாவுக்கு மவன் மனைவிகள் பதின்மூவருட் கத்துருவைக்கும் பிறந்தன.

நாடி-16 சுழிமுனை, இடை, பிங்கலை, காந்தாரி, அத்தி, சிகுவை அலம்புடை, புருடன், குகு, சங்கினி அவையாவன சுழிமுனை ஆதாரமாறினு மூடுருவி நிற்பது. இடை பிங்கலை யிரண்டுங் கத்தரிக்கோல்போற் பின்னி நிற்பன. காந்தாரி நாபியிற்றோன்றிச் சத்த மேழுக்கு மேழு நாடியாய்க் கண்டத்துறுவது. அத்தி சிகுவையிரண்டும் பத்து நாடியுற்றுக் கண்ணிற்பன. அலம்புடை புருடனிரண்டும் செவியினூற்றிருபது நரம்புற்றிருப்பன, குகு நாடியுறைந்து குய்யம்பற்றி நிற்பது. சங்கினி உபத்தத்தை பற்றியிருப்பது.

நாட்டமைதி-6 செல்வம், விளைநிலம், செங்கோல், நோயின்மை, வளம், குறும்பின்மை.

நாட்டுக்குற்றம்-7 தொட்டியர், கள்வர், யானை, பன்றி, விட்டில், கிள்ளை, பெருமழை.

நாட்டுக்குற்றம்-8 விட்டில், தன்னரசு, வேற்றரசு, யானை, மிகுமழை, மிகுகாற்று, கிள்ளை, நட்டம்.

நி

நிலம்-4 குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்.

நிலை-4 பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் இவை நான்கும் பிற்றெறுத் தம்பினையெய்வார்க்குரியநிலை இவற்றுளொரு காலினின் றொருகமன் முடக்கல் பைசாசநிலை, இருகாலும் பக்கல் வளைவு மண்டலித்தலே மண்டலநிலை, வலக்கான் மண்டலித் திடக்கான் முந்துதலே யாலீடநிலை. வலக்கான் முந்துற் றிடக்கான் மண்டலித்தலே பிரத்தியாலீடநிலை.

நூ

நூல்-3 முதனூல், வழிநூல், சார்புநூல் இவற்று ளொருவன் முன்கண் டுரைத்ததே முதநூல் முதநூல்வழியே விகற்பித்துரைத்த நூலே வழிநூல், அவ்விரு நூற்பொருட் கூட்டித் திரிபுவேறுடைய நூலே சார்புநூல்.

நூற்பயன்-4 அறம், பொருள் இன்பம், வீடு.

ப

பக்குவர்-3 கருமகாண்டி, ஞானகாண்டி, பத்திகாண்டி.

பஞ்சமூலம்-5 செவ்வியம், சித்திரமூலம், கண்டுபாங்கி, பேராத்தை, சுக்கு

படைவகுப்பு-4. அணி, உண்டை, ஒட்டு, யூகம்.

பட்சி-5. வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில். இவற்றிற்கு முறையே யெழுத்து அ, இ, உ, எ, ஒ, உண்டி, நடை, அரசு, துக்கம, சாவு பிறபக்கமாகில் உண்டி, சாவு, துக்கம், அரசு, நடை, சாவு, தூக்கமில்லாக பொழுதறிந்து செய்யுண் முதலிய செய்தல் நன்மை.

பண்-4. பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி.

பதவி-4. சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம். இவற்றுள் கடவுளுலகத்தில் வாழ்தலே சாலோகம். கடவுள் சமீபத்தில்வாழ்தலே சமீபம். கடவுளுருப் போன்று வாழ்தலே சாரூபம். கடவுளோ டொன்றி வாழ்தலே சாயுச்சியம்.

பரிச்சேதம் - 3. காலபரிச்சேதம், தேயபரிச்சேதம், வத்துபரிச்சேதம். அவையாவன: ஒருகாலத்துண் டொரு காலத்தின்றென்பது காலபரிச்சேதம். ஒரு தேயத்துண் டொரு தேயத்தின்றென்பது தேயபரிச்சேதம். ஒரு பொருளிதுவாகு மொருமொருளிஃதன்றென்பது வத்துபரிச்சேதம்.

பருவகாலம்-6- கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் இவையே ஆவணி முதலாக இரண்டிரண்டு மாதம் ஒவ்வொன்றுகும்.

பருவம்-4. வாலை, தருணி, பிரவிடை, விருத்தை இவை பெண்கட்குரிய பருவமாம்.

பருவம்-7. பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் இவர்க்கு முறையே வயதெல்லை ஐந்து முத லேழுளவும் பேதை. எட்டு முதற் பதினொன்றளவும் பெதும்பை. பன்னிரண்டு முதற் பதின்மூன்றளவு மங்கை. பதினான்கு முதற் பத்தொன்பதளவு மடந்தை. இருபதுமுத லிருபத்தைந்தளவு மரிவை. இருபத்தாறு முதன் முப்பத்தொன் றளவுந் தெரிவை. முப்பத்திரண்டு முதல் நாற்பதளவும் பேரிளம் பெண். ஆகையா லொவ்வொரு பருவங்கொண்ட வருடம் 3-4-2-6-6-9- இவை பெண்கட்குரியபருவமாம்.

பலை - 3. கடுக்காய், நெல்லிக்கய், தான்றிக்காய் இவையே திரிபலை யென்ப.

பா

பா-4. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா வொன்றுகூட்டி யைந்தென்பாருமுளர்.

பாடை-18. அங்கம், அருணம், கலிங்கம்,கௌசிகம்,காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மாடம், வங்கம்.

பாதகம்-5. கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை இவையே பஞ்சமாபாதகம்.

பாதகம்-7. சித்தசமுன்னதி அருத்தலோபம், காமம், வைடம்பியம், அசனப்பிரியம், கோபம்

அநுட்டானம் இவையே சத்த விசனம் இவை முறையே அகங்காரம், உலோபம், காமம், பகை, போசனப் பிரியம், காய்தல், சோம்பல் இவையேழுந் தலைமையான பாதகமெனப்படும்.

பாலை-7. இசையைக் காண்க.

பால்-5. ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல.

பால்-5. முடிகொண்டை சுருள் குழல் பனிச்சை இவற்றுண் மயிரை யுச்சியின் முடித்தலே முடி பக்கன் முடித்தலே கொண்டை பின்னே சொருகல் சுருள் சுருட்டி முடித்தலே குழல் பின்னி விடுத்தலே பனிச்சை.

பாவ புண்ணிய வழக்கம்-3. செய்தல், செய்வித்தல், உடன்படல்.

பாவினம்-3. தாழிசை, துறை, விருத்தம்.

பி

பிணி-3. வாதம், பித்தம் சிலேட்டுமம்.

பிரபந்தம்-96. அவையாவன:- சாதகம், திதிநிலை, வாரநிலை, நாண்மீநிலை, யோகநிலை, கரணநிலை, ஓரைநிலை, இரகநிலை இவ்வேழ்வகை யுறுப்புக்க நிலையையுஞ் சோதிட நூலார் நன்குணர்ந்தவற்றை யமைத்தவற்றுற் றலைவற் குறுவகைகூறுவது மற்றும்யுகாதியாண்டு முதலியவுங் கொள்க.

பிள்ளைக்கவி:—காப்பு, செங்கீரை தால் சப்பாணி முத்தம் வாரானை அம்புலி சிறுபறை சிற்றில் சிறுதேர் இவற்றை முறையே அகவல் விருத்தத்தாற் பப்பத்தாகக்கூறுவ தாண்பாற் பிள்ளைக்கவி இவ்வுறுப்பினுட்கடை மூன்றொழித்துக் கழங்கு அம்மானை ஊசல் என்பவற்றை கூட்டி மேற்சொல்லியவாறு கூறுவது பெண்பாற் பிள்ளைக்கவியாம்.

பரணி போர்முகத் தாயிரங்களிற்றி யானையைக்கொன்ற வீரனைத் தலைமகனுக் கொண்டு கடவுள் வாழ்த்துங் கடைதிறப்பும் பாலைநிலமுங் காளி கோயிலும் பேய்களோடு காளியுங் காளியோடுப் பேய்களுஞ் சொல்லத் தான் சொல்லக் கருதிய தலைவன் கீர்த்திவிளங்கலு மவன் வழியாகப் புறப்பொருளோன்ற வெம்போர் வழங்க விரும்பலுமென் றிவையெல்லா மிருசீரடி முச்சீரடியொழித்தெழுந்த மற்றைய வடிவாக வீரடிப்பஃ றாழிசையாற் பாடுவது.

கலம்பகம்:—ஒருபோகும் வெண்பாவும் கலித்துறையு முதற்கறுயுறுப்பாக முற்கூறிய புயவகுப்பு மதங்கம் அம்மானை காலம் சம்பிரதம் கார் தவம் குறம் மறம் பாணம் களி சித்து இரங்கல் கைகிளை தூது வண்டு தழை ஊசல் என்னு மிப்பதினெட்டுறுப்புகளுமியைய மடக்கு மருட்பா ஆசிரியப்பா வஞ்சிப்பா ஆசிரியவிருத்தம் கலிவிருத்தம் கலித்தாழிசை வஞ்சி விருத்தம் வஞ்சித்துறை வெண்டுறை என்னு மிவற்றால் இடையே வெண்பா கலித்துறை விரவிவர யந்தாதித் தொடையான் முற்றுங் கூறுங்காற் றேவர்க்கு நூறும் அந்தணர்க்குத் தொண்ணூற் றைந்தும் அரசர்க்குத் தொண்ணூறும் வைசியர்க் கைம்பதும் சூத்திரர்க்கு முப்பதுமாகப் பாடுவது.

அகப்பொருட் கோவை—இருவகைப்பட்ட முதற் பொருளும் பதினுன்கு வகைப்பட்ட கருப்பொருளும் பத்து வகைப்பட்ட உரிப்பொருளும் பொருந்திக் கைக்கிளை முதலுற்றவன் புடைக்காமப்பகுதியவாங்கள் ளொழுக்கத்திணையுங் கற்பொழுக்கத்திணையுங் கூறுதலை யெல்லையாகக் கட்டளைக் கலித்துறை நானூற்றுறினை முதலாகத் துறையிருகக் கூறப்படை பன்னிரண்டகப் பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப்படுவது இது வெண்பா அகவல் கலி வஞ்சி வண்ணம் இவற்றுனும் வழங்கப்படும்.

ஐந்திணைச் செய்யுள்—புணர்தல் முதலிய வைந்துரிப்பொருளும் விளங்கக் குறிஞ்சி முதலிய வைந்திணையுங் கூறுவது.

வருக்கக்கோவை—அகர முதலாகிய வெழுத்து வருக்கமொழிக்கு முதலா யெழுத்துமுறையே காரிகைத் துறைப்பாட்டாகபாடுவது.

மும்மணிக் கோவை—ஆசிரியப்பாவும் வெண்பாவும் நேரசையு நிரையசையுங் கொண் டெழுத்தெண்ணிப்பாடும் கலித்துறையு முறையே தொகை முப்பதுபெற வடுக்கி யந்தாதித் தொடையாற் பாடுவது.

அங்கமாலை—ஆண் மகனுக்கும் பெண்மகளுக்கும் மிக்கனவெடுத்துக்கூறு மவயங்களை வெண்பாலாயினும் வெளி விருத்தத்தாலாயினும் பாதாதிகேசங் கேசாதிபாதமுறை பிறழாது தொடர்வுறப்பாடுவது.

அட்ட மங்கலம்—கடவுளைப் பாடி யக்கடவுள் காக்கவென வாசிரியவிருத்த மெப்படி லந்தாதித்துக்கூறுவது.

அநுராகமாலை— தலைவன் கண்ட இன்னொருத்தியைக்கண்டு கேட்டுண்டுயிர்த தினிமையுறப்புணர்ந்ததைத் தன்னுயிர்ப் பாங்கற்குறைத்ததாக நேரிசைக் கலிவெண்பாவாற் கூறுவது.

இரட்டைமணி மாலை—முறையானே வெண்பாவுங் கலித்துறையு மருபஃதந்தாதி தொடையான் வருவது நேரிசைவெண்பா பத்தும் ஆசிரியவிருத்தம் பத்து மந்தாதித்தொடையாற் பாடுவது

இணை மணிமாலை—வெண்பாவு மகவலும் வெண்பாவுங் கலித்துறையுமாக விரண் டிரண்டாக விணைத்து வெண்பா வகவலிணை மணிமாலை வெண்பா கலித்துறையிணைமணிமாலை என நூறுநூறு அந்தாதித்தொடை நான்காலும் பாடுவது.

நவமணிமாலை—வெண்பா முதலாக வேறுபட்ட பாவும் பாவினமுமாக வொன்பது செய்யுளந்தாதிப்பாடுவது.

நான்மணிமாலை—வெண்பாவுங் கலித்துறையும் விருத்தமு மகவலுமந்தாதித் தொடையாக நாற்பது பாடுவது.

நாமமாலை—அகவலடியுங் கலியடியும்வந்து மயங்கிய வஞ்சிப்பாவா லாண்மகனைப் புகழ்ந்துப் பாடுவது.

பலசந்தமாலை—பப்பத்துச்செய்யு ளொவ்வோர் சந்தமாக நூறு செய்யுட் கூறுவது.

பன்மணிமாலை—மேற்சொல்லி யகலம்பிகத்துள் வருமொரு போகுமம்மானையு மூசலுமின்றி யேனை யுறுப்புகளெல்லாமமைய வருவாறுகூறுவது இதைபே யகலம்.

மணிமாலை—எப்பொருண் மேலும் வெண்பா விருபதுங் கலித்துறை நாற்பதும் விரவிவருவது.

புகழ்ச்சிமாலை—அகவல வடியுங் கலியடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவான் மாதர்களினது சீர்மையைக் கூறுவது.

பெருமகிழ்ச்சி மாலை—தலைவியினழகு குணமார்க்குஞ் சிறப்பினைக்கூறுவது.

வருக்கமாலை—மொருக்கு முதலாம் வருக்க வெழுத்தினுக் கொவ்வோர் செய்யுட் கூறுவது.

மெய்க்கீர்த்தி மாலை—சொற்சீரடியென்னுங் கட்டுரைச் செய்யுளாற் குலமுறையிற்செய்த கீர்த்தியைக் கூறுவது

காப்புமாலை—தெய்வங் காத்தலாக மூன்று செய்யுளானும் ஐந்துசெய்யுளானும் ஏழு செய்யுளானும் பாடுவது.

வேனின் மாலை—வேனிலையு முதிர்வேனிலையுஞ் சிறப்பித்துப் பாடுவது.

வசந்தமாலை—தென்றலை வருணித்துப் பாடுவது.

தாரகைமாலை—அருந்ததிக்கற்பின் மகளிர்க்குள்ள வியற்கைக் குணங்களை வகுப்பாற் கூறுவது தூசிப்படையி னணியைப்புகழ்ந்த வகுப்பென்பாரு முளர்.

உற்பவமாலை—திருமால் பிறப்பத்தினையு மாசிரிய விருத்தத்தாற்கூறுவது.

தானைமாலை—அகவ லோசையிற்பிறழா தாசிரியப்பாவான் முன்னெடுத்துச் சொல்லுங் கொடிப்படையைக் கூறுவது.

மும்மணி மாலை—வெண்பாவுங் கலித்துறையு மகவலு மந்தாதித்தொடையான் முப்பது பாடுவது.

தண்டகமாலை - வெண்பாவான் முந்நூறுசெய்யுட் கூறுவது இது வெண்புணர்ச்சிமாலை யெனவும் படும்.

வீரவெட்சிமாலை-சுத்த வீரன் மாற்றுனூரிற் சென்று பசுநிரை கோடற்கு வெட்சி பூமாலைசூடி யவ்வண்ணம்போய் நிரை கவர்ந்துவரி னவனுக்கு முன்பு தசாங்கம் வைத்துப்போய் வந்த வெற்றிபாடுவது.

வெற்றிக் கரந்தை—மஞ்சரி பகைவர்கொண்ட தந்நிரை மீட்போர் கரந்தைப் பூமாலை சூடிப்போய் மீட்பதைக் கூறுவது.

போர்க்கெழு வஞ்சி—மாற்றார் மேற் போர்குறித்துப் போகின்ற வயவேந்தர் வஞ்சிப்பூமாலை சூடிபுறப்படும் படையெழுச்சிச் சிறப்பை யாசிரியப்பாவாற் கூறுவது.

வரலாற்று வஞ்சி—குலமுறை பிறப்பு முதலிய மேம்பாட்டினை பல சிறப்பையுங் கீர்த்தியையும் வஞ்சிப்பாவாற் கூறுவது.

செருக்களவஞ்சி—போர்க் களத்திலே யட்ட மனித ருடலையும் யானை குதிரையுடலையு நாயும் பேயும் பிசாசமுங்கழுகும் பருந்துங்

காகமுந்தின்றி காளித் தாரவார மாயிருக்கப் பூதமும் பேயும்பாடி யாட விங்ஙன மிருந்த சிறப்புப் பாடுவது இதையே பறந்தலைச் சிறப்புப்பாட்டு மென்ப.

காஞ்சிமாலை—மாற்றூ ரூர்ப்புறத்துக் காஞ்சிப் பூமாலைசூடி யூன்றலைக் கூறுவது.

நொச்சிமாலை—புறத் தூன்றிய மாற்றார்க்கொடலன்றி நொச்சிப் பூமாலை சூடிதன்மனதில் காக்குந் திறங்கூறுவது.

உழிஞைமாலை—மாற்றார் ஊர்ப்புறஞ் சூழ வுழிஞைப் பூமாலை சூட்டி படைவளைப்பதைக் கூறுவது.

தும்பை மாலை—மாற்றாரோடு தும்பைப்பூமாலை சூடிப் பொருதுவதைக்கூறுவது.

வாகை வாகை—மாற்றாரைவென்று புகழ்படைத்து வாகைமாலை சூடுவதை யாசிரியப்பாவாற் கூறுவது.

வாதோரண மஞ்சரி—கொலை புரிமதயானையை வயப்படுத்தி யடக்கினவர்கட்கு மெதிர் பொருகளிற்றை வெட்டி யடக்கினவர் கட்கும் பற்றிப் பிடித்துச் சேர்த்தவர்கட்கும் வீரப்பாட்டின் சிறப்பை வஞ்சிப்பாவாற் றொகுத்து பாடுவது.

எண் செய்யுள்—பாட்டுடைத் தலைவன் ஊரினையும் பெயரினையும் பத்துமுத லாயிரமளவும் பாடி எண்ணுமற் பெயர்பெறுவது.

தொகைநிலைச் செய்யுள்—நெடிலடிச் செய்யுளாற் றொகுத்தது நெடுந்தொகையும் குறுந்தொகையும் கலிப்பாவாற் றொகுத்தது கலித்தொகையும் போல்வன.

ஒலியலந்தாதி—பதினாறு கலையோரடியாகவைத் திங்ஙன நாலடிக் கறுபத்துநாலுகலை வகுத்து பலசந்தமாக வண்ணமுங் கலைவைப்புந் தவறாமலந்தாதி முப்பதுசெய்யுள் பாடுவது. சிறுபான்மை யெட்டுக் கலையானும் வரப் பெறும் அன்றியும் வெண்பா வகவல் கலித்துறையாகிய விம்மூன்றையும் பப்பத்தாக வந்தாதிப் பாடுவதுமாம்.

பதிற்றந்தாதி—பத்து வெண்பாக் கலித்துறைப் பொருட்டன்மைதோன்ற வந்தாதிப்பாடுவது.

நூற்றந்தாதி—நூறுவெண்பாவினாலேனும் நூறு கலித்துறையினாலேனு மந்தாதித் தொடையாற் கூறுவது.

உலா—இளமைப் பருமமுற்ற தலைமகனைக் குலங் குடி பிறப்பு மங்கலம் பரம்பரை யிவற்றானின்றானென்பது தோன்றத் தலைமையாய் மாதர் நெருங்கிய வீதியிடத்தனன் பவனிவரப் பேதை முதலிய வேழு பருவப் பெண்களுங்கண்டு தொழுவதாக நேரிசைக் கலிவெண்பாவாற்கூறுவது.

உலாமடல்—கனவிலொரு பெண்ணைக்கண்டு கலவியின்ப நுகர்ந்தோன் விழித்தபின் னாவள் பொருட்டு மடலூர்வே னென்பதைக் கலி வெண்பாவான் முற்றுவிப்பது.

வளமடல்—அறம் பொருளின் பமாகிய அம்மூக்கூறு பாட்டின் பயனையெள்ளி மங்கையர் திறத் துறுங் காமவின்பத்தினையே பய னெனக் கொண்டு பாட்டுடைத் தலைமக னியற்பெயர்க்குத் தக்க தை யெதுகையாக நாட்டியுரைத் தவ்வெதுகைபடத் தனிச்சொலி ன்றி யின்னிசைக் கலிவெண்பா வாற் றலைமகனிறந்து குறை பெ ருது மடலேறுவதா யீரடியெது கைவரப் பாடுவது.

ஒருபா வொருபஃது—அகவ லும் வெண்பாவுங் கலித்துறையு மாயவிவற்றி லொன்றனலந்தாதி த்தொடையாற் பத்துப்பாடுவது.

இருபாவிருபஃது—பத்து வெ ண்பாவும் பத்தகவலு மந்தாதித் தொடையா னிருபதினைந்து வரு வது.

ஆற்றுப்படை- அகவற்பாவால் விறலி, பாணர், கூத்தர், பொரு நர் நால்வரு ளொருவர் பரிசிற் குப் போவாரைப் பரிசுபெற்று வருவாராற் றிடைக்கண்டு தலை வன் கீர்த்தியுங் கொடையுங் கொற்றமுஞ் சொல்வது.

கண்டபடைநிலை—அரசரு மர சரைப்போல்வாரு மவைக்கணெ டிது வைகியவழி மருத்துவரும் அமைச்சரு முதலியோ ரவர்க்கு கண்டுயில் கோடலைக் கருதிக்கூறு வது.

துயிலெடைநிலை-தன் வலியால் பாசறைக்கண்ணொரு கனக்கவற் சியின்றித் துயின றவரசற்கு நல் லபுகழைக் கொடுத்தலைக் கருதிய சூதர் துயிலெழுப்புதலாகப் பாடு வது.

பெயரின்னிசை—பாட்டுடைத் தலைவன பெயரினைச்சார இன்னி சைவெண்பாவாற் றொண்ணூறே னும் எழுபதேனும் ஐம்பதேனும் பாடுவது.

ஊரின்னிசை—பாட்டுடைத்த லைவ னூரினைச்சார வின்னிசை வெண்பாவாற் றொண்ணூறேனு மெழுபதேனு மைம்பதேனும் பாடுவது.

பெயர் நேரிசை—பாட்டுடைத் தலைவன் பெயரினைச்சார நேரிசை வெண்பாவாற் றொண்ணூறேனு மெழுபதேனு மைம்பதேனும் பாடுவது.

ஊர்நேரிசை—பாட்டுடைத் த லைவனூரினைச்சார நேரிசை வெ ண்பாவாற் றொண்ணூறேனு மெ ழுபதேனு மைம்பதேனும் பாடு ருது.

ஊர் வெண்பா—வெண்பாவா லூரைச் சிறப்பித்துப் பத்துச் செய்யுள் கூறுவது.

விளக்குநிலை—வேலும் வேற் றலையும் விளங்கா தோங்கிய வா றுபோலக் கோலொடு விளக்கு மொன்றுபட் டோங்குமா றோங் குவதாகக் கூறுவது.

புறநிலை—நீவணங்குந் தெய்வ நின்னைப் பாதுகாப்ப நினவழி மிகுதாவெனக் கூறுவது.

கடைநிலை—சான்றோர் சேணி டை வருதலாற்பிறந்த வருத்தந் தீர வாயில் காக்கின்றவனுக் கெ

ன்வரவினைத் தலைவற் கிசையெனக் கடைக்கணின்று கூறுவது.

கையறும்நிலை—கணவனொடு மனைவி கழிந்துழி யவர்க்கப்பட்ட வழிவுப் பொருளெல்லாம் பிறர்க்கறிவுறுத்தித் தாமிறந்து படாதொழிந்த வாயத்தாரும் பரிசில் பெறும் விறலியருந் தனிப்படருழந்த செயலறு நிலையைக் கூறுவது.

தசாங்கப்பத்து-நேரிசை வெண்பாவாலரசன் படைத்த தசாங்கத்தினைப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

தசாங்கத்தியல்—அரசன் இராசாங்கத்தினை யாசிரிய விருத்தம் பத்தினாற்பாடுவது.

அரசன் விருத்தம்—பத்துக்கலித்துறையு முப்பது விருத்தமுங்கலித்தாழிசையு மாகிய விளற்றால் மலை, கடல், நாட்டுவருணனையும், நிலவருணனையும் வாணமங்கலமுந் தோரண மங்கலமும் பாடி முடிப்பது இதுமுடிபுனைந்த வேந்தற்காம்.

நயனப்பத்து— கண்ணினைப்பத்துச்செய்யுளாற் கூறுவது.

பயோதரப்பத்து—முலை யினை பத்துச்செய்யுளாற் கூறுவது.

பாதாதிகேசம்—கலி வெண்பாவா லடிமுதன் முடியளவுங் கூறுவது.

கேசாதிப்பாதம் — கலிவெண்பாவான் முடிமுத லடியளவுங் கூறுவது.

அலங்காரபஞ்சகம் - வெண்பா கலித்துறை, அகவல், ஆசிரியவிருத்தம், சந்தவிருத்த மிவற்றையேமாறிமாறி நூறு செய்யுளாக வந்தாதிப்பாடுவது.

கைக்கிளை—ஒருதலைக் காமத்தினை யைந்து விருத்தந்தாற் கூறுவதாம்.

மங்களவள்ளை—உயர் குலத்துதித்த மடவாரை வெண்பா ஒன்பதாலும் வகுப்பொன்பதாலும் பாடுவது.

தூது—ஆண்பாலும் பெண்பாலு மவாவர்காதல் பாணன் முதலிய வுயர்திணையோடுங் கிள்ளை முதலிய வஃறிணையோடுஞ் சொல்லித் தூது போய்வாவென கலிவெண்பாவாற் கூறுவது.

நாற்பது-காலமு மிடமும்பொருளுமாகிய விவற்றி னொன்றனை நாற்பது வெண்பாவாற்கூறுவது.

குழமகன்—கலிவெண்பாவான் மாதற் கடங்கையிற்கண்ட விளமைத் தன்மையுடைய குழமகனை புகழ்ந்து கூறுவது.

தாண்டகம்—இருபத்தே ழெழுத்து முதலாக வுயர்ந்த வெழுத்தடியின் வாயெழுத்துங் குருவு மிலகுவு மொத்துவந்தன அளவியற்றாண்டக மெனவும் எழுத்து ஒவ்வாது வந்தன அளவருத்தாண்டக மெனவும்படும்.

பதிகம்—ஒருபொருளைக் குறித்துப் பத்துச் செய்யுளாற் கூறுவது.

சதகம்—அகப் பொருளொன்றன்மேலாதல் புறப்பொருளொன்றன்மேலாதல் கற்பித்து நூறு செய்யுள் கூறுவது.

செவி யறிவுநிலை—பொங்குதலின்றிப் புரையோர் நாப்பணவிறற் கடனென்வவை யடக்கியற் பொருளுற வெண்பாமுதலு மா

சிரிய மிறுதியுமானமருட்பாவாற் கூறுவது.

வாயுறைவாழ்த்து — வேம்புங் கடுவும் போல்வனமாகிய வெஞ்சொற்கண் முன்னர்த் தாங்கக்கூடாவாயினும் பின்னர் பெரிதும் பயன்றருமென மெய்ப்பொருளுறவெண்பா முதலு மாசிரியமிறுதியுமான மருட்பாவாற்கூறுவது.

புறநிலைவாழ்த்து—வழிபடுதெய்வ நிற்புறங்காப்ப பழிதீர் செல்வமோ டொருகாலைக் கொருகாற் சிறந்து பொறிவாயென வெண்பாமுதலு மாசிரிய மிறுதியுமான மருட்பாவாற் பாடுவது.

பவனிக்காதல்—உலாக் காட்சியாலெய்திய காமமிகுதியா லவை பிறரொடு முறைத்து வருந்துவது.

குறத்திப் பாட்டு—தலைவன் பவனிவரவு மகளிர் காமமுறுதல் மோகினி வரவு உலாப்போந்தத் தலைதனைக்கண்டு மயங்கல் திங்கென்றன் முதலிய உலாம்பணம் பாங்கியுற்றதென்னென வினவல் தலைவி பாங்கியோடுற்றது கூறல் பாங்கி தலைவனைப்பழித்து கூறல் தலைவி தலைவனைப் புகழ்ந்துக்கூறல், தலைவி பாங்கியைத் தூது வேண்டல், தலைவி பாங்கியோடு தலைவனடையாளங்கூறல், குறத்திவரவு, தலைவி குறத்தியை மலைவளமுதலிய வினவல், குறத்தி மலைவள நாட்டுவள முதலிய கூறல் தலைவன் தலவளங் கிளைவள முதலியகூறல், தலைவி குறிசொல்லி வந்தமைகூறல், தலைவி குறி வினவல், குறத்தி தெய்வம் பராவல், குறிதேர்ந்து நல்வரவு கூறல், தலைவி பரிசிலுதவி விடுத்தல் குறவன் வரவு, புள்வரவு கூறல், கண்ணிகுத்தல், புட்படுத்தல், குறத்தியைக் காமுற்றுத்தேடல் குறவன் பாங்கனொடு குறத்தியடையாளங்கூறல், குறவன் குறத்தியைக் கண்ணுறல், குறவனி முதலிய கண்டையுற்று வினவலு மாண்டாண்டு குறத்தி விடைகூறலுமாகக் கூறல், பெரும்பான்மையு மிவ்வகை யுறுப்புகளால் அகவல், வெண்பா, தாவு, கொச்சகம், கலித்துறை, கழிநெடில் விருத்தம், கலிவிருத்தம்; இச்செய்யு ளிடைக்கிடைக் கூறிச் சிந்து முதலிய நாடகத் தமிழாற் பாடுவது.

உழத்திப்பாட்டு-கடவுள் வணக்கமுறையே மூத்தபள்ளி யிளைய பள்ளி குடும்பன்வரவு வேடன் பெருமைகூறல்முறையே யவர்வரலாறு, நாட்டுவளம், குயிற்குரல் கேட்டல், மழைவேண்டிக் கடவுட்பகவல், மழைக்குறியோர்தல், ஆற்றின்வரவு, அதன் சிறப்புக்காண்டலிவற்றிற் கிடையிடை யகப்பொருட்டுறையுங்கூறிப் பண்ணைத்தலைவன் வரவு, பள்ளிகளிருவர் முறையீடு. இளையாளை யவனழைப்பல், பள்ளன் வெளிப்படல், பண்ணைச்செயல் வினவல், அவனதியல்கூறல், ஆவிரை வருவித்தல், அவர்வரல், அவர் பெருமைகூறல் மூத்தபள்ளி முறையீடு, குடும்பன் கிடையிலிருந்தாற்போல் வரல் அவனைத் தொழுவின் மாட்டல், அவன்புலம்பல், மூத்தபள்ளியடிசில்கொடுவரல். அவனவனோடு கூறல். அவனவனை மன்னித்தல், கேட்கவேண்டல், அவள் மறுத்

தல், அவள்சூளுறல், அவளவனை மீட்கவேண்டிப் பண்ணைத்தலைவனைப்பாவல், வித்தைமுதலியவளங்கூறல், உழவருழல்காளை வெருளல், அது பள்ளனைப் பாய்தல், பள்ளிகள் புலம்பல், அவனெழுந்திருத்தல், அதைப் பண்ணைத் தலைவர்க் கறிவுறுத்தல், நாற்று நடல், விளைந்தபின் செப்பஞ்செய்தல், நெல்லளத்தல், மூத்தபள்ளிமுறையீடு, பள்ளிகளி லொருவர்க்கொருவ ரேசலென விவ்வுறுப்புக்களுறப் பாட்டுடைத் தலைவன்பெருமை ஆங்காங்கு தோன்றச் சிந்தும் விருத்தமும் விரவிவர விவற்றான் பாடுவது.

ஊசல்—ஆசிரிய விருத்தத்தானாதல், கலித்தாழிசையானாதல் சுற்றத்தோடும் பொலிவதாக ஆடிரூசல் ஆடாமோ ரூசலென்றிறக்கூறுவது.

எழுகூற் றிருக்கை—ஏழறையாக்கிக் குறுமக்கண் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமையாலொன்று முதலாக வேழிறுதியாக முறையானே பாடுவது.

கடிகை வெண்பா—தேவரிடத்து மரசரிடத்து நிகழுங் காரியங் கடிகையளவிற் றோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவாற் கூறுவது.

சின்னப்பூ—நேரிசை வெண்பாவா லரசனது சின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்து விரித்து நூறு, தொண்ணூறு, எழுபது, ஐம்பது, முப்பது என்னுமெண்படக் கூறுவது.

விருத்தவிலக்கணம்—வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு, ஊர், கொடை, இவ் வொன்பதினையும் பப்பத்து விருத்தத்தா லொன்பது வகையாய் பாடுவது.

முதுகாஞ்சி—இளமை, கழிக்கோரிளமை, கழியாத வறிவின் மாக்கட்குக் கூறுவதாம்.

இன்மொழி வாழ்த்து—இக்குடிப்பிறந்தோர்க் கெல்லா மிக்குணமியல்பென்று மவற்றை நீயுமியல்பாக வுடையையென்று மின்னோர்போல் நீயுமியல்பாக வீடென்று முயர்ந்தோரவனை வாழ்த்துவதாகக் கூறுவது.

பெருமங்கலம்—நாடோறும் தான் மேற்கொள்கின்ற சிறைசெய்தல் முதலிய செற்றங்களை கைவிட்டுச் சிறைவிடுதல் முதலிய சிறந்த தொழில்கள்பிறந்ததற்கு காரணமான நாளிடத்து நிகழும் வெள்ளணியைக் கூறுவது.

பெருங்காப்பியம்—தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும் இவற்றிற் கிரியை வாழ்த்துமுன்னுளதாய் அறம் பொருளின்பம் வீடென்னு நாற்பொருளும் பயக்கு நெறியுடைத்தாய் நிகரில்லா தலைவனை யுடைத்தாய் மலையுங் கடலு நாடு நகரும் பருவமு மிருசுடர்த் தோற்றமு மென்றிவற்றின் வளங்கூறுதலும் மணமும் முடிகவித்தலும் பொழில் விளையாட்டும் நீர்விளையாட்டும் உண்டாட்டும் மகப்பேறும் புலவியுங் கலவியுமென் றிவற்றைப் புகழ்தலும் மந்திரமுந் தூதுஞ்செலவும்

போரும் வென்றியுமென் றிவற்றைத் தொடர்ந்து கூறலுமாகிய விவை முறையே தொடர்வுறச் சருக்க மிலம்பகம் பரிச்சேத மென்னும் பகுதியை யுடைத்தாய் வீரமுதலிய சுவையு மற்கற்றை விளக்குங் கருத்து விளங்க வேருரா ளியற்றப்படுவதாம்.

சிறுகாப்பியம்—அறம் பொருளின்பம் வீடென்னு நான்கனுள் ஒன்றும் பலவுங் குறைந்தேனைய வுறுப்புக் கண்டு மேற் கூறியவாறியல்வது.

பிறப்பு—7 தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் இவற்றின் யோனிபேத மெண்பதது நான்கு நூறாயிரம். அவையாவன: தேவர் பதினுன்கு நூறாயிரம், மக்களொன்பது நூறாயிரம், விலங்கு பத்து நூறாயிரம், புள்பத்துநூறாயிரம், ஊர்வன பதினொரு நூறாயிரம், நீர்வாழ்வன பதது நூறாயிரம், தாவா மிருபது நூறாயிரம், அன்றி தேவர் பதினாறு நூறாயிரமெனவுந் தாவரம் பதினெட்டு நூறாயிரமெனவுங் கூறுப.

## பு

புண்ணியத்தோற்றல் - 4 கவசம், ஒழுக்கம், கொடை, கல்வி.

புண்ணியம்-7 நகங்கிருதி, தானம், விரதம், சினேகம், நயபோசனம், கமை, உற்சாகம்.

புண்ணியம்-9 எதிர் கொளல், பணிதல், ஆசனந் திருத்துதல், தாள்கழுவல், அருஞ்சித்தல், தூபங்கொடுத்தல், தீபங் காட்டல், புகழ்தல், அமுதமேந்தல், இவை துறந்தோர்க்குச் செய்வனவாம்.

புரம்-3 இருப்புமதில், வெள்ளிமதில், பொன்மதில் இவையே முப்புரம்.

புராணம்-18 மச்சயம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம, வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பொடிகம், நாரதீயம், காருபிரமகை, வர்ததம்,காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம், பதுமம், இவற்றுள் சைவம், காந்தம், இலிங்கம், கூர்மம், வாமனம், வராகம், பௌடிகம்,மச்சியம், மார்க்கண்டேயம், பிரமாண்டம். இவைபத்துஞ் சிவபுராணம். நாரதீயம், பாகவதம், காருடம், வைணவம் இவை நான்கும் விட்டுணுப் புராணம். பிரமம, மதுமம, இவையிரண்டும் பிரம கைவர்த்தம். சூரிய புராணம், எனவும் காந்தம், ஆக்கினேயம், சைவம், கூர்மம், மச்சியம், இலிங்கம் இவை தாமத புராணம். பிரமாண்டம், பிரமகைவர்த்தம், மார்க்கண்டேயம், வாமனம், பிரமம், பௌடிகம், இராசத புராணம், பாகவதம், பதுமம், வராகம், வைணவம், காருடம், நாரதீயம், சாத்துவிகபுராணம் எனவுங் கூறுவர். அன்றியும் உபபுராணம்-18 ஆதித்தியம், காந்தம், சோமம், சிகயிலம், கௌசிகம், சாம்பம்,சிவதன் தௌர்வாசம், நாரசிங்கம், நாரதீயம், பாரசரீயம், பார்க்கவம், பிரமாண்டம், மாரீசம், மானவம், வாசிட்டம், வாயவியம், வருணம், இவை யவ்வவர் பெயரால் விளங்கும்.

புரி-7 அயோத்தி, மதுரை, மாயா, காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை.

புலமையோர்-4 கவி, கமகன், வாதி, வாக்கி, இவருள் ஆசு மதுரம், சித்திரம், வித்தாரமென்னு நாற்கவிகளைப் பாடுவோன் கவி, அருப்பொருளைச் செம்பொருளை செம்பொரு நடையாகக் காட்டி விவகரிப்போன் கமகன். காரணமு மேற்கோளு மெடுத்துக் காட்டிப் பிறன்கோண்மறுத்துதன்மத நிறுத்துபவன் வாதி, அறம், பொருள் இன்பம், வீடென்னு நாற் பொருளைக் கூறுவான் வாக்கி.

புலன்-5 சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம்.

பூ

பூ-4 கொடிப்பூ, கோட்டுப்பூநீர்ப்பூ புதற்பூ, நிலப்பு என் ஒனறு கூட்டி ஐந்தென் பாருமுளர்.

பூத-5 நிலம், நீர், தீ, காற்று விசும்பு,

பெ

பெண்வகை-4 பதுமினி சித்தினி, சங்கினி, அத்தினி.

பெரியோரியல்பு-7 அற, பொருள், இன்பம், அன்பு, புகழ்,மதிப்பு, பொருமை.

பே

பேதம்-3 சுகதபேதம், சுசாதிபேதம் விசாதிபேதம் அவை யாவன, மாத்துக்கு மாமாஞ் சுகாதிபேதம், மாத்துக்குக்கல் விசாதிபேதம்.

பேறு-16 புகழ், கல்வி, வலி, வெற்றி, நனமக்கள், பொன், நெல் நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோ யின்மை, வாழ் நாள்.

பொ

பொருள் 2-கல்விப் பொருள், செல்வப்பொருள்.

பொருள்-4 அறம், பொருள், இன்பம், வீடு.

பொழுது 6-மாலை, யாமம், வைகறை விடியல், நண்பகல், எற்பாடு இவையே யத்தமான காலமுத லொவ் வொன்று பப்பத்து நாழிகையாக முறையே கொள்க· இவற்றைச் சிறுபொழு தென்பர்.

பொறி-3 மனம் வாக்கு காயம்

பொறி-5 மெய், வாய் கண், மூக்கு, செவி.

பொன்வகை-4 ஆடகம் கிளிச்சிறை சாதரூபம் சாம்பூநதம்.

போ

போகபூமி 6-ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம் ஏவதவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தாகுருவம்.

போகம்-8 பெண்,ஆடை அணிகலன், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி.

போதப்பிரகாரம்- 3உத்தேசம் இலக்கணம் பரிட்சை அவை யாவன தான்வில கரிக்கும் பொருளைப் பெயர் மாத்திரங் கூறலுத்தேசம், அப்பொருளின் சிறப்புத் தன்மைகூற விலக்கணம் அப்பொருளி லிவ்விலக்கண முண்டோ வின்றோவெனப் பார்த்தால் சரீட்சை.

ம

மகளிர்ாண்மலர் மாம்-10 ட ய்மாஞ்சுவைக்க, எழிலை்ம் ட

மாம் நட்புற பாதிரிமரம் நிந்திக்க, முல்லைக்கொடி நகைக்க, புன்னையாட, குராவணைக்க, அசோகு உதைக்க, குருக்கத்திப் பாட, மாமரம்பார்க்க, சண்பக நிழல் படத் தளிர்த்துப் பூப்பனவாம்.

மங்கலச்சொல்-22 திரு, யானை தேர், பரி, கடல், மலை, மணி, யூர், புகழ், சீர், மதி, நீர், எழுதது பொன், ஆரணம், சொல் புயல், நிலம், கங்கை, உலகம் பரிதி, அமிழ்தம், இவற்றின் பரியாயப் பெயரும் பிரிவுமாம்.

மங்கலம்-8 சாமரம், நிறைகுடம், கண்ணடி, தோட்டி, முரசு விளங்கு, கொடி, இணைக்கயல், இவையே அட்டசுப மெனவும் படும்.

மங்களாசாரனை-3 வாழ்த்து, வணக்கம், செயப்படுபொருள்.

வணம்—8. பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம். இவற்றுட் பிரமசாரிக்கு கன்னியைத் தீ முன்னர் கொடுப்பது பிரமமணம். தலைமகனினத்தார் வேண்டத தலைமகளுடன் வளைத் தீ முன்னர்கொடுப்பது பிரசாபததிய மணம். ஒன்றிரண்டு பசுவுமெருதும் வாங்கிக்கொண்டு கன்னியைத் தீமுன்னர் கொடுப்பதாரிடமணம். வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன்னர் கொடுப்பது தெய்வமணம், கொடுப்பாருங்கேட்பாரு மின்றி இருவருந்தனியிடத் ததிர்பட்டுத் தாமே கூடுவது காந்தருவமணம். பெண்ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்குப் பொன் வேண்டுவன கொடுத்துக்கொள்வ தசுரமணம். பெண்ணும் பெண்ணினத்தாருமுடன் படாமல் வலிதிற்கொள்வது இராக்கத மணம். துயின் றவளைச் சென்று கூடுவது பைசாசமணம்.

மணி—9, கோமேதகம், நீலம் பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம்.

மண்டலம்—3 அக்கினிமண்டலம், ஆதித்தமண்டலம், சந்திர மண்டலம்.

மண்டலம்—7, வாயுமண்டலம் வருணமண்டலம், சந்திரமண்டலம், சூரியமண்டலம், நட்சத்திர மண்டலம், அக்கினிமண்டலம், திரிசங்குமண்டலம்.

மரபு—2. தந்தைவழி, தாய்வழி

மருந்துக்கள்-7 கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, கீழ், மேல், பலயோனியுயிர்.

மலம்—3 ஆணவம், மாயை, காமியம்.

மலை—7 கைலை, இடபம், மந்தரம், விரதம், நிடதம், ஏமகூடம் நீலகிரி அன்றிக் கந்தமாதனங்கூட்டி யெட்டெனவும்படும்.

மன்மதன்கணை—5, வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம், இவற்றின்பெயர் முறையே உன்மத்தம், மதனம், சம்மோகம், சந்தாபம், வசிகரணம் இவை செய்யு மவத்தை சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் அவையாவன, சுப்பிரயோகம் சொல்லு நினைவும், விப்பிரயோகம். வெய்துயிர்த் திரங்கல்,

சோகம் வெதுப்புந் துய்ப்பனவெத விட்டலும், மோகம் அழுங்கலு மொழிபல பிறற்றலும், மரணம் அயர்ப்பு மயக்கமும்.

மாதம்-12. சைத்திரியம், வைசாகம், சேட்டம், ஆசாடம், சிராவணம், பாத்திரபதம், ஆசுவிசம் கார்த்திகம், மார்க்கசிரம், புசியம் மாகம், பாற்குணம் இவை முறையே சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி இவற்றிற்கு முறையே யுரிய நட்சத்திரம். சித்திரை, விசாகம், மூலம், உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி, அச்சுவினி, கார்த்திகை, மிருகசீரிடம், பூசம், மகம், உத்திரம்.

மாதர்கள்-6. அபிராமி, மயேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி, இவற்கு முறையே வாகனம், அன்னம், இடபம், மயில், கருடன், சீயம், யானை, பேய், முறையே யாயுதம் மறை, பினாகம், வேல், ஆழி, கலப்பை, வச்சிரம், சூலம்.

மாயை-5. தமம், மாயை, மோகம், அவ்விதத்தை, அநிர்தம், அவையாவன சீவ சைதன்னியத்தை மறைக்கை யாற்றமம், சகத்துருபமான வன்னிதாத் தோற்றத்துக்குக் காரண மாகையான் மாயை, விபரீத ஞான முண்டாக்குகையான் மோகம் உணர்வழிக்கையாலவித்தை. சத்துருபறுக் கன்னிமாகையாலநிர்தம்.

## மு

முகம்-14. அஞ்சிதம், அதோமுகம், ஆகம்பிதம், பிரகம்பிதம், ஆலோலிதம், உலோலிதம், உத்துவாகிதம், சமம், சௌந்தரம், துதம், விதுதம், பராவிருத்தம், பரிவாகிதம், திரச்சீனம். இவற்றுள் வருத்தமாற்று திருதோண் மேற் றலைசாய்த்த வஞ்சிதமுகம் சம்மதித்தற்கு மேல் கீழ் தலையாட்ட லாகம்பித முகம், அதிசயத்தாற் சிறிது தலையாட்டல் பிரகம்பித முகம், தலை ஆசையான் மலர்ந்தமுகமா யொருவனை யழைத்த லாலோலிதமும், சிந்தையா லொருதோண்மேற் றலை சாய்த்தலு லோலிதமுகம், தலை யண்ணாந்து பார்த்தலுத்து வாகித முகம், தியானிப்பது போலத் தலை யசையா திருத்தலே சமமுகம், பூரித்த மகிழ்ச்சியான மலர்ந்த முகங் காட்டல் சௌந்தரமுகம், வேண்டாததற் கிடம் வலந்தலை யாட்டலே துதமுகம், உணவணி முதலிய வேண்டாமைக்குத் தலைநடுக்கலே விதுத முகம், வேண்டாதற்கு முகந்திருப்பலே பராவிருத்த முகம், மதத்தா லொருபுறஞ் சாய்ந்த தலையைச் சிறிதாகச் சுற்றியாட்டல் பரிவா கிதமுகம், நாணத்தாற் றலையாட்டலே திரச் சீன முகம்.

முத்தி விக்கினம் 3-அரியாமை ஐயம், திரிபு.

முத்துச்சனிக்குமிடம் 20-மதி மேகம், சங்கு, திப்பி, மீன், நந்து, முதலை, உடும்பு, தாமரை, வாழை, கமுகு, கரும்பு, செந்நெல், மூங்கில், யானைக் கொம்பு, பன்றிக் கொம்பு, பசுவின்பல் கொக்கு, கட்செவி.

மும்மை-3. உம்மை, இம்மை, மறுமை.

முனிவர்-7. அத்திரி, ஆங்கிரசம், கௌதமன், சமதக்கினி, பாரத்வாசன், வசிட்டன், விசுவாமித்திரன் அன்றியும் அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன் என்பர்.

முனிவர்-31. அகத்தியன், அத்திரி, ஆங்கிரசன், இரணியவன், மாமுனி, உரோசமாமுனி, ஏரண்ட மாமுனி, கலைக் கோட்டுமுனி, காசிபன், கௌதமன், சத்தகூன்முனி, சச்சிதானந்தன், சவதக்கினி, கனகண், சனற்குமாரன், சுதன், ததிதமகாமுனி, துருவாசன், நாரமன், பதஞ்சலி, சாரத்துவாசன், பராசரன், பற்பமாமுனி, பிருகு மாமுனி, பிருகி மாமுனி, புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன், வான்மிகன், விசுவா மித்திரன், வியாக்கிரபாதன், வியாசன்.

முகூர்த்தம்-8. பூமி, நீர், தேயுவா, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா.

மூலம்-10. கண்டங் கத்திரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், பெருமல்லிவேர், நெருஞ்சிவேர், (இவ்வைந்தும் சிறுபஞ்சமூலமெனப, வில்வ வேர், பெருங்குமிழ்வேர், தழுதாழை வேர், பாதிரிவேர், வாகைவேர், இவ்வைந்தும் பெரும் பஞ்சமூலமெனப.)

மெ

மெய்ப்பரிசம்-8. ஊன்றல், அட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல், இவை மெய்ப்பொரியாற் செய்யப்படுந் தொழில்.

மே

மேகம்-7. சம்வர்த்தம், ஆவர்த்தம் புட்கலாவர்த்தம், சங்கார்த்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் இவை பொழிவன, முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ.

மொ

மொழி-3. மெய்கூறல், புகழ்கூறல், பழிகூறல்.

யா

யாகம்-5. பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம் இவற்றுள் வேதமோதல் பிரமயாகம், ஓமம், வளர்த்தலே தெய்வயாகம், பலியிடல், பூதயாகம், தர்ப்பணமுடித்தல் பிதிர்யாகம், இரப்போர்க்குணவு முதலிய வீதலே மானுடயாகம்.

யாகம்-21. அக்கினிட்டோமம் அத்தியக்கினிட்டோமம், உத்தியம், சோடசீ, வாசபேயம், அதிராத்திரம், அப்தோரியாமம், அக்கினி யாகம், தேயம், அக்கினி கோத்திரம், தரிசபூரண மாசம் சாதுர்மாசியம், நிரூடபசுபந்தம், ஆக்கிரயணம், சௌத்திராமணி, அட்டகை, பார்வணம், சிரார்த்தம், சிராவணீ, ஆக்கிரகாயணீ, சைத்திரீ, ஆசுவயசி.

யாக்கைக்குறுகுற்றம்-18. பசி, நீர்வேட்டல், பயம், வெகுளி, உறவகை, வேண்டல், நினைப்பு, உறக்கம், நரை, நோய், மரணம், பிறப்பு, மதம், இன்பம், அதிசயம், வியர்த்தல், கேதம் கயெரிவு.

யாழ்வகை-4 பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ்.

யு

யுகம்-4 கிரேதாயுதம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்.

யோ

யோகம்-27 விஷ்கம்பம், பரீதி ஆயுஷ்மான், சௌபாக்கியம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி, சூலம், கண்டம் விருத்தி, துருவம், வியாகாதம், அரிஷ்ணம் வச்சிரம், சித்தி, விதிபாதம், வரியான் பரீகம், சிமம், சித்தம், சாத்தியம் சுபம், சுப்பிரம், பிரமம், ஐந்திரம், வைதிருதி இவை முறையே கம்பம், பிரியம், வாழ்நாள், புண்ணியம், நலம், மாகண்டம், அறம், துணை, சூலம், கண்டகம், ஆக்கம், நிலை, அரவு, எக்களிப்பு, வேல், வல்லமை, கொலை காயம் தாய்வு, காட்சிநிறம், புகழ்காவல், தெளிவுபிரம்மா, இந்திரன், பேய் இவற்றுள் கம்பம், கண்டம், அதிகண்டம், சூலம், வியாகாதம். வச்சிரம், விதிபாதம் பரீகம், வைதிருதியெனவொன்பதன்றி மற்றவை நல்லன இவற்றுள்ளுங் கம்பத்தின் மூன்றும் சூலத்தி லைந்தும் கண்டத்திலுமதிகண்டத்திலு மாறும் வியாகாதத்தி லொன்பதுங்கழித்து நின்ற நாழிகையுமாம்.

வ

வசுக்கள்-8 அனவன், அனிலன் ஆபச்சைவலன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன்.

வணிகர்குலம்-8 தனிமையாற்றல் முனிவிலனாதல், இடனறிந்தொழுகல், பொழுதொடு புணர்தல், உறுவது தெரிதல், இறுவதஞ்சாமை, ஈட்டல், பகுத்தல்.

வண்ணம்;5 வெண்மை,கறுமை செம்மை, பொன்மை, பசுமை.

வருடம்-60 பிரபவ, விபவ, சுக்கில, பிரமோதூத, பிரசோற்பத்தி, ஆங்கிரச, ஸ்ரீமுக, பவ தாது, ஈச்சுர, வெகுதானிய யுவ பிரமாதி, விக்கிரமாதி, விக்கிரம, விசு, சித்திரபானு, சுபானு, தாரண, பார்த்திப, விய (இவ்விருபது முத்தம்வருடம்), சருவசித்து, சர்வதாரி, விரோதி, விக்ருதி, கர, நந்தன, விசய, சய, மன்மத, துன்முகி, ஏவிளம்பி, விளம்பி, விகாரி, சார்வரி பிலவ, சுபகிருது, சோபகிருது, குரோதி, விசுவாவசு, பராபவ, (இவ்விருபதும் மத்திமவருடம்) பிலவங்க, கீலக, சௌமிய, சாதாரண, விரோதிகிருது, பரிதாபி, பிரமாதீய, ஆனந்த, இராட்சத, நள, பிங்கள, காளயுத்தி, சித்தார்த்தி, இரௌத்திரி, துன்மதி, துந்துபி, உருத்திரோத்காரி, ரட்தாட்சி, குரோதன, அட்சய இவ்விருபது மதமவருடம்.

வருணம்-4 பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திர இவற்றைச் சாதியென்றுங் கூறுப.

வள்ளல்-21 வரையாதுகொடைப் போன்வள்ளலென்ப இவர் மகவிடை கடையென

வர் அவருள் முதலெழுவள்ளல் குமணன் சகரன் சகாரன் செம்பியன் துந்துவாரி நளன் நிருதி இடையெழுவள்ளல் அக்குரன், அந்திமான் அரிச்சந்திரன் கண்ணன் சந்திமான் சிசுபாலன் தந்தவக்கிரன் கடையெழு வள்ளல் எழினி, ஓரி, காரி, நள்ளி, பாரி, பேகன், மலையன்.

## வா

வாசம்-5 இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

வாயில்-9 கண், காது, மூக்கு, வாய் குதம், குய்யம்.

வாயு-10 பிராணன், அபானன் சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன் கிருகரன் தேவதத்தன், தனஞ்செயன், இவை யுடலி னிற்பன் அவை யாவன. இதயத் தியங்குவது பிராணன், உச்சாகத் தலத்திடை நிற்பதபானன், கந்தரக் குழியிற் சந்தியை-நிற்பது சமானன், நாபியி னிற்பது உதானன், சரீர முழுதும் வியாபித்திருப்பது வியானன், நீட்டலுமுடக்கலு நாகன், உரோமம் புளகித் திமைப்பது கூர்மன், முகத்திடைநின்று தும்பலுஞ் சினமும் வெம்மையும் விளைப்பது கிருகரன், ஓட்டமுமிளைப்பும் வியர்த்தலும் விளைப்பது தேவதத்தன், உயிர்போகினும் போகா துடலினை வீக்கித் தலைகிழித்தகல்வது தனஞ்சயன்.

வாரம்-7 ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி.

வானோர்கணம்-9 அக்கணத்தோராவர் பத்திச்சுவாலகர் ஞானதிக்கர் பத்திராசனர் நாதகிருத்தியர் சத்துவகர் பலவத்தர் பிராதமிகர் அதிதூதர் தூதர் இவையே நவவிலாச சபையாம் அவையாவன பத்திச்சுவாலகர் கடவுளைக் குறித்த பத்தியினாலே சுவாலிக்கிறவர் ஞானதிக்கர் கடவுளைக்குறித்த ஞானத்தி லாதிக்கம்பெற்றவர். பத்திராசனர் கடவுளெழுந்தருளியிருக்கும் தேவசிங்காதனத்தை புகழ்ந்திருப்பவர். இவர் முதலாம் அர்ச்சியப் பிரபுத்துவமுடையோராம். நாதகிருத்தியர் நாதனுடைய கிருத்தியத்தை யவனருளாற் புரிபவர் சத்துவகர் கடவுளருளாற் பற்பல வற்புதங்களைச் செய்யுஞ் சத்துவம்பெற்றவர் சத்திகரென்றுமாம்பலவத்தர் கடவுட்டிருவுளப்படி எய்துங் கருமங்கட்கு வருமிடையூற்றையவ னருளாற்றடுக்கும் பலாத்காரம் பெற்றவர் இவரிரண்டாமர்ச்சியப் பிரபுத்துவமுடையோராம் பிராதமிகர்கடவுட் டிருவுளப்படியே யிராச்சிய யிராச்சிய சம்பந்தமான சாதாரண நன்மைகளை நடத்துந் தலைமைபெற்றவர். அதிதூதர் அதிகப்பிரதான விசேடங்களை யுலகத்தி லறிவிக்கத் தானுபதியாக வருபவர் தூதர் மனிதர் பிறந்தகணமுதலாகத் தனித் தனியே யவரவரைப் பாதுகாத்து நன்னெறியினடத்தி மற்றும் பிரதர் நவிசேடங்கட் கனுப்பப்படுவர் இவர் மூன்றாம் அர்ச்சியப் பிரபுத்துவ முடையோர் அர்ச்சியப்பிரபுத்துவத்திற்கு அதீச்சுர பதவியென்பாருமுளர் இவை போப்பு

மார்க்க கிரிஸ்தவர்களாற் கூறப் படுவன.

வானோர்வரம்-4 இலகு சூக்கு மம் அட்சயம் பிரகாசம் இவை கன மின்மை கண்டிப்பின்மைகே குண்மை விளக்கம்.

வி

விரை-6 காமம் குரோதம் உ லோபம் மோகம் மதம் மாற்சரியம் அன்றி இடும்பை அசூயையோ டெட்டெனவுமாம்.

வித்தியா தத்துவம்-8 காலம் நியதி கலை வித்தை இராகம் புரு டன் மாயை.

வித்தைகள்-14 வேதம் 4-வே தாங்கம்-6 மீமாஞ்சை தருக்கம் புராணம் தரும நூலாகிய வுபாங் கம்-4.

விரை-5 கோட்டம் துருக்கம் காரம் அகில் சந்தனம்.

வினு-5 அறியான் வினுவல் அறி வொப்புக் காண்டம் ஐயமறுத்தல் அவனறிவு தான் கோடல் மெய்ய வற்குக் காட்டல்.

வினை-2 நல்வினை தீவினை.

வீ

வீடுபேறு-1 முத்திப்பேறு

வெ

வெற்றி-8 பகைநிரை கவர்தல் பகைவர்கவர்ந்த தன்னிரை மீட் டல் பகைமேற் செல்லல்வம்பகை முன்னெதிரூன்றல் தன் னரண் காத்தல் பகையரண் வளைத்தல் பொருதல் போர்வெல்லல் இவற் றிற்குமுறையே வெற்றிலை மாலை யாவன வெட்சி காந்தை வஞ்சி காஞ்சி நொச்சி உழிஞைதும்பை வாகை.

வே

வேதம்-4 இருக்கு எசுர், சா மம் அதர்வணம் அன்றியுமுபவே தம், அருத்தவேதம் தனுர்வே தம் காந்தருவ வேதம்.

வேதாங்கம் 6-மந்திரம் வியா கரணம் நிகண்டு சந்தோபிசிதம் நிருத்தம் சோதிடம்.

வேளாண்மை மாந்தரியல்பு-10 ஆணைவழிநிற்றல் அழிந்தோரை நிறுத்தல் கைக்கடனாற்றல் கசி வகத்துண்மை ஒக்கல் போற்றல் ஓபாமுயற்சி மன்னிறை தருதல் ஒற்றுமைக்கோடல் விருந்துபுற ந்தருதல் திருந்திய வொழுக்கம்.

வை

வைசியர்-3 தனவைசியர், பூ வைசியர் கோவைசியர் இவர்க்கு முறையே தொழில் பொருளீட் டல் பயிர் செய்தல் ஆகாத்தல் இவர் வருணத்தா லொன்றுருயி னுந் தொழிலான் மூவராயினர்.

வைணவாகம்-2 பாஞ்சராத்தி ரம் வைகாநசம்.

வைதிகமதம்-3-மிசிர வைதிக மதம், வைதிகமதம், பரமவைதிக மதம்.

தொகையகராதி முற்றிற்று.

# இலக்கத்தொகை முறை

1-ஒருமை, வீடுபேறு.

2-அச்சுவினி தேவர், அறம், ஆயுதவகை, ஆன்மா, இதிகாசம், இருமை, எச்சம், கந்தம், கூத்துவகை, சுடர், திணை, தோற்றம், பொருள், மரபு, வினைதவணை வாகமம்.

3-அரசர் இவை இடம், ஈச்சுரன் பிரபுத்துவ சாமார்த்திய குணம், உலகம், கடுகம், காதலர், காலம், குணம், குற்றம், சத்தி சாத்திரம், சீவவேதகம், சீவாவத்தை, சுடர், சூரிய சந்திரர் முதலிய வீதி, தமிழ், தானம், தீ, தொழில், நூல், பகை, பக்குவர் பரிச்சேதம், பலை, பாவ புண்ணிய வழக்கம், பாவினம், பிணி, புரம், பேதம், பொறி, போதப்பிரகாரம், மங்களாசாணை, மண்டலம், மலம், முத்தி, விக்கினம், மும்மை, மொழி, வைசியர், வைதிகமதம்.

4-அங்கம், அரண், அளவு, அநுபந்தம், ஆச்சிரமம், இராகத் தகுதி, இழிச்சொல், உண்டி, உபாயம், உரை, ஊறுபாடு, கணக்கு, வசை, கதி, கரணம், கவி, குணம், கேள்வி, சதுரங்கம், சாதி, சாந்துவகை, சிவபூசை, இயல்பு, சொல், தானை, தோற்றம், நிலம், நிலை, நூற்பயன், படைவகுப்பு, பண், பதவி, பருவம், பா, புண்ணியத் தோற்றம், புலமையோர், பூ, பெண்வகை, பொருள், பொன்வகை, யாழ்வகை, யுகம், வருணம், வானோர்வரம், வேதம்.

5-அகிற்கூட்டு, அக்கினி, அங்கம், அரசர்க்குழு, அரசர்க்குறுதிச்சுற்றம், அவதை, அங்கவயவிலக்கணம், இலக்கணம், இலிங்கம், ஈச்சுரன்முகம், உரையிலக்கணம், உலோகம், எழுத்துத்தானம் ஐம்புலநுகர்ச்சியினிறப்பன கருமேந்திரியம், கன்னிகை, குரவர், குற்றம், கேள்வி, கைத்தொழில், கோசம், கௌடம், கௌவியம், சத்தம், சத்தி, சயனம், சிவதத்துவம், சூதகம், தந்தையர், தரு, தாயார், தாளம், திணை, திராவிடம், திரவியம், திருமாலாயுதம், தாரகதி, தேவர், பஞ்சமூலம், பட்சி, பாதகம், பால், புலன், பூதம், பொறி, மன்மதன்கணை, மாயை, யாகம், வண்ணம், வாசம், விரை, வினை.

6-அரசியல், ஆதாரம், ஈச்சுரன், முக்கியகுணம், உட்பகை, உவர்ப்பு, கருமபூமிக் குரிமை, கருவுளிமைப்பு, காலம், சக்கிரவர்த்திகள், சமயம், சாத்திரம், சுப்பிரமணியர், தலம், சுவை, தானை, தொழில், காட்டமைதி, பருவகாலம், பொழுது, போகபூமி, விகாரம், வேதாங்கம்.

7-இசை, உலோகம், கடல், கடைப்படுதானம், சிரஞ்சீவியர் சுரம், தாது, தாளம், தீவு, நதி, நரகம், நாகவட்டம், நரம்பு, நாட்டுக்குற்றம், பருவம், பாதகம்,

பாலை, பிறப்பு, புண்ணியம், புரி, பெரியோரியல்பு, மண்டலம், மருந்துக்கள், மலை, மாதர்கள், முனிவர், மேகம், வாரம், வித்தியா தத்துவம்.

8-அங்கயோகம், அரசர்க்குத் துணைவர், அளவை, அறத்துறுப்பு, ஈச்சுரன்குணம், ஊறு, எச்சமம், ஐச்சுவரியம், கணம், கணிதம், குற்றம், சித்தி, சுபம், தயாவிருத்தி, திக்கு, திக்குப் பாலகர், திக்குயானைகள், நாகம், நாட்டுக்குற்றம், போகம், மங்கலம், மணம், மூர்த்தம், மெய்ப்பரிசம், வசுக்கள், வணிகர், குணம், வெற்றி.

9-இரதம், கண்டம், கிரகம், சித்தர், தாரணை, தாளம், புண்ணியம், மணி, வாயில், வானோர் கணம்.

10-அங்கம், சிற்பத்தொழில், குறும்பு, சேனைத்தொகை, தசாங்கம், தாளப்பிரமாணம், திக்கு, திருமாலவதாரம், தீக்குணம், தூவர், நற்குணம், நாடி, மகளிரான், மலர்மரம், மூலம், வாயு, வேளாண்மை, மாந்தரியல்பு.

11-உருத்திரர், காணம், நதி.

12-இராசி, உயிர்வேதனை, சூரியர் மாதம்.

13-தமிழ்நாடு.

15-உலகம், தயா விருத்தி, முகம், வித்தைகள், திதி.

16-உபசாரம், சைவம், பேறு.

18-கணம், தருமநூல் பாடை, புராணம், யாக்கைக்குறு, குற்றம்.

20-முத்துசனிக்குமிடம்.

21-அரச்சின்னம், யாக்கம், வுள்ளம்.

22-மங்கலச்சொல்.

72-நட்சத்திரம், யோகம்.

28-சிவாகமம்.

31-முனிவர்.

32-அறம், இராகம், உபநிடதம், சிற்பநூல்.

33-தேவர்வகை.

35-அலங்காரம்.

56-தேயம்.

60-வருடம்.

64-கலைக்யாணம்.

96-தத்துவம்-பரபந்தம்

100-அலங்காரம்.

இலக்கத்தொகை முறை முற்றிற்று.

---

திருமகள் விலாசம் பிரஸ், சென்னை:—1934.

# கண்ணுசாமியம்

என்னும்

# வைத்தியசேகரம்

[விலை ரூபா 1—8—0.]

ஆயுர்வேத அபிவிருத்தியையும், ஜீவகாருண்யத்தையும் முன்னிட்டு வெளியிட்ட "சிகிச்சாரத்நதீபம்" என்னும் வைத்திய நூலின் ஆசிரியராகிய வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமி பிள்ளையவர்கள் தமது பெயர் உலகில் எக்காலத்தும் நிலைபெறுமாறு பரம ரகசியமாக தான் கையாண்டுவந்த பல அரிய பெரிய பாகங்களை யெல்லாம் சூர்ணம், மாத்திரை, லேகியம், எண்ணெய், தைலம், கிருதம், பற்பம், செந்தூரம், ஆக்கிராணம் முதலியவைகளை ஆங்காங்கு கைபாகம், செய்பாகம், சித்திரவிளக்கம் முதலியவற்றால் எளிதில் உணரும்படி எழுதியுள்ளார். இத்தகைய நூல் ஒவ்வொரு வைத்தியர்களுக்கும் மிக்க உதவியாக இருக்குமென்பது சத்தியம்.

## தமிழ்

# மெட்டீரியா மெடிக்கா

## என்னும் அருமையான வைத்திய நூல்

விலை ரூபா 3.]

இவ்வரிய பெரிய வைத்திய புஸ்தகமானது ஆங்கில மருந்துக் கலப்பு விவர முறைகளைத் தமிழில் விளக்கமாக உள்ளங்கை நெல்லிக் கனிபோல் நன்கு விளக்குவது. இன்னின்ன நோய்க்கு இன்னின்ன விதமாக மருந்துகளைச் சேர்த்து (டிச்சர்) முதலானவை செய்து சாப்பிட வேண்டுமென்பதை இந்நூல் நன்றாகக் கூறுகின்றமையால் இதை ஓர் 'ஆபத்துக் குதவும் தோழன்' என்று அனைவரும் நம்பலாம். இது வைத்திய அனுபவம் மிகப் பெரிதும் உடைய ஒருவரால் எழுதப்பட்டது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கூடியவரையில் நோய்களுக்குப் பரிகாரம் செய்துகொள்ளலாம். கம்பவுண்டர்களுக்கும் ஆங்கில வைத்திய முறைகளை கற்றுக்கொள்பவருக்கும் இந்நூல் இன்றியமையாதது.

## பதார்த்தகுண சிந்தாமணி

[விலை ரூபா 1—4—0.]

இதில் சகல பதார்த்தங்களின் குணங்களை மாத்திரமேயன்றி அவற்றின் பிரயோசனங்களையும் விளக்குவதால் வயித்திய சாஸ்திரப் பயிற்சியும் அனுபவமுமுள்ளவர்களைப் பார்க்கிலும் இது சிறந்ததென்பது தெற்றன விளங்கும். ஆதலால், ஒவ்வொரு குடும்பத்திலும் இது முக்கியமாய் இருக்கவேண்டியது அவசியம். இதுவரையில் வெளிவந்த பதிப்புக்களைப் போலல்லாமல் இதில் கூடுமானவரையில் பிழைகள் பரிசோதிக்கப் பட்டு, அட்டவணை ஒழுங்காகவும் குறிக்கப்பட் டிருக்கிறது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
நெ, 41. வெங்கடாமய்யர் தெரு, மிண்ட்பிஸ்டிங் போஸ்டு, சென்னை.

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமிப்பிள்ளை அவர்கள் இயற்றிய

# சிகிச்சாரத்நதீபம்

என்னும் வைத்திய நூல்

[வாலையந்திரப் படங்களுடன் விலை ரூபா **2—8—0.**]

சென்னைமாநகரின்கண் "விடோபா" அவிழ்தசாலையை ஸ்தாபித்தவரும், "கண்ணுசாமியம்" என்னும் வைத்தியசேகரத்தின் நூலாசிரியருமான ஸ்ரீமான் கண்ணுசாமி பிள்ளையவர்கள் தென்னாடுமுதல் வடநாடுவரையிலும் அனுசரித்துவரும் அரிய பெரிய பாகங்களையும், யூனனி வைத்திய முறைகளையும், பெரும்பொருள் செலவிட்டு முடித்து பயன் பெற்றவைகளாயுள்ள பாகங்களை யெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொருவரும் எளிதிலுணரும் வண்ணம் தேகபஞ்சபூதம், நாடி, ரோக நிதானம், செய்பாகவிளக்கம், கியாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம் இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார். இந்நூல் சில வருடங்களுக்குமுன் செலவாய்விட்டதை கடித விலை யேற்றத்தினுல் உடனே அச்சிடக்கூடாமையாக இருந்தது. ஆயினும் பலர் வேண்டுதலுக்கிணங்கி இந்நூலில் விடுபட்டுள்ள சிறிது எடை பாகங்களையும் சில செய்பாக திருத்தங்களையும் மேஷ் ஆசிரியர் மூலமாக திருத்தி உயர்தரமான கிளேஸ் கடிதத்தில் (மூன்றும் பதிப்பு) அச்சிட்டு இருக்கின்றோம். இந்நூல் வைத்தியத்தொழிலை கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக்கும் மற்ற எனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்கதென்பது எவரும் அறிந்த உண்மை.

சிகிச்சாரத்நதீபம் இரண்டாம் பாகமாகிய

# வைத்தியசிந்தாமணி

[விலை ரூபா 2—0—0.]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில் ரோகநிதானங்களை ஏறக்குறைய கூறியிருப்பதினுல் இதனை ஆதாரவாகக் கொண்டு வசனகாவியமாக எழுதினதுமல்லாமல், சில விடங்களில் சமயத்திற் கேற்றவாறு மற்றும் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும் ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோகநிதான விஷயங்களை மதாந்தரமாகவும் அமைத்து, காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளையும் கூட்டி அநேக அருமைவாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற்றிருக்கின்றது.

B. இ

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு